# விதைப்போம் அறுப்போம் !

திருத்துறைப்பூண்டி ச.கரிகாலன்

மின்னூல் வெளியீடு : *FreeTamilEbooks.com*



ஆசிரியர் தொடர்பு, மின்னூலாக்கம் - அன்வர் - *gnuanwar@gmail.com*

அட்டைப்படம் : மனோஜ்குமார், *socrates1857@gmail.com*

## பொருளடக்கம்

# வாழ்த்துரை


*திருவாரூர் மாவட்டம்*

*3/41, சி. பிரதான சாலை,*

*கட்டிமேடு-614716*

*அலைபேசி :9443320954*

*இரா. ஜெயராமன்*

*மாநில ஒருங்கிணைப்பாளர்*

*நமது நெல்லைக் காப்போம்*


**நெல்** *!*

*பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நம் வாழ்வோடு இணைந்துவிட்டது. நெல் நமது முக்கிய உணவு மட்டுமல்ல; நமது பண்பாட்டையும் கலாச்சாரத்தையும் பிரதிபலிக்கும் முக்கிய விளைபொருள். பிறப்பு முதல் இறப்பு வரை நம்மோடு பயணித்துக் கொண்டிருப்பது! கிராமத்தின் செல்வச் செழிப்புக்கு நஞ்சை நிலங்களே அளவுகோல்களாக இருந்தன. அதிக அளவு நஞ்சை நிலத்தைப் பெற்றிருந்தவர்களே செல்வந்தர்களாக மதிக்கப்பட்டிருந்தனர்.*

*நெல், உற்பத்தி முதல் விற்பனை வரை பல கோடி மக்களுக்கு வாழ்வளித்து வந்தது. நமது வாழ்வாதாரமாக இருந்துவந்த நெல் இப்பொழுது நம்மை விட்டுக் கொஞ்சம் கொஞ்சமாக விலகிச் சென்றுகொண்டிருக்கிறது மூன்று நேரம் அரிசி உணவை உண்ணும் நாம், உற்பத்தி முதல் விற்பனை வரை நெல் சந்தித்து வரும் பிரச்சனைகளை அறிய கொஞ்சமும் ஆர்வம் கொள்ளவில்லை!*

### *நிலம் படும் பாடு*

*பிற விளைபொருட்களோடு ஒப்பிடும்பொழுது இன்றைய காலகட்டத்தில் நெல் ஓர் இலாபகரமான பயிர் இல்லை. இடு பொருட்களின் விலை, கூலி உயர்வு மற்றும் ஆள் பற்றாக்குறை போன்ற காரணங்களால் உற்பத்தி செலவு அதிகரித்து வருகிறது.*

*அதனால் மாற்றுப் பயிருக்கு மாற்ற வேண்டிய கட்டாயம் விவசாயிகளுக்கு ஏற்பட்டுள்ளது. தொழிற்சாலைகளுக்கும் வீட்டு மனைகளுக்கும் நஞ்சை நிலங்களே தொடர்ந்து பலியாகிக் கொண்டிருக்கின்றன.*

*1950 இல் தமிழகத்தில் நெல் பயிரிடப்பட்ட பரப்பு 76 இலட்சம் ஏக்கராக இருந்ததாகவும், அது இப்பொழுது 54 இலட்ச மாகக் குறைந்துவிட்டதாகவும் சில தகவல்கள் தெரிவிக்கின்றன. ஒவ்வொரு மாவட்டத்திலும் நெல் பயிரிடப்படும் பரப்பளவு குறைந்து வருவது நிதர்சனமான உண்மை. இந்நிலை தொடர் வதால் அரிசியை இறக்குமதி செய்ய அரசு யோசித்து வருவதாகப் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன.*

***மாயை***

*பசுமைப் புரட்சியின் வேகமான வளர்ச்சிக்குக் காரணம். உயர் விளைச்சல் என்ற மாயைதான். மாயையில் வீழ்ந்தோர் இரசாயன உரத்திற்கும் பூச்சிக்கொல்லி மருந்துகளுக்கும் அடிமையானர்கள்.*

*இரசாயன உபயோகம் நிலங்களை உயிரற்றதாக்கி விட்டது. சுற்றுச்சூழல் மாசுபட்டுப்போனது இரசாயனத் தாக்கம் இல்லாத அரிசியோ பருப்பு வகைகளோ பழங்களோ காய்கறிகளோ இல்லை என்ற நிலைப்பாடு ஏற்பட்டுள்ளது.*

*நாற்பது வயதைக் கடக்கும் முன்பே மருத்துவச் செலவுக் கென்று பெரும்தொகை செலவிடவேண்டியநிர்ப்பந்தம் ஏற்பட்டுள்ளது. தெருவுக்கு நான்கு மருத்துவமனைகளுக்கு அவசியம் வந்துவிட்டது.*

***சூழ்நிலைப் பயிர்***

*உள்ளூர் சூழ்நிலைக்கு ஏற்ப பலவித நெல் ரகங்கள் இருந்தன. உவர் நிலத்திற்கென ஒரு ரகம் காற்றை எதிர்த்து நிற்க ஒரு ரகம்! வறட்சியைத் தாங்கிக் கொள்ள ஒரு ரகம் ! பனிப்பொழிவைப் பயன்படுத்திக் கொள்ள ஒரு ரகம் எத்தனை நாட்கள் வெள்ளம் தேங்கி இருந்தாலும் பாதிக்கப்படாத ரகங்கள் மருத்துவக் குணம் கொண்ட ரகங்கள் ஒவ்வோர் உணவு பதார்த்தத்திற்கும் ஒவ்வொரு ரகம்! இவ்வாறு ஆயிரக்கணக்கான நெல் ரகங்கள் தமிழகத்தில் இருந்தன. இந்தியா முழுமைக்கும் இலட்சத்திற்கும் அதிகமான ரகங்கள் இருந்ததாகத் தெரிகிறது.*

*அவை அனைத்தையும் பசுமைப் புரட்சிக்குப் பலிகொடுத்து விட்டோம். ஆங்காங்கே ஒரு சில ரகங்கள் மட்டுமே எஞ்சியுள்ளன. இன்றைய நவீன விஞ்ஞானத்தில் ஒரு புதிய நெல் ரகத்தை உருவாக்கி நடைமுறைக்குக் கொண்டு 10 முதல் பதினைந்து வருடங்களாகி விடுகின்றன – நம் முன்னோர்கள் கண்டுபிடித்த ஆயிரக்கணக்கான ரகங்களுக்கு எத்தனை ஆண்டுகள் தேவைப்பட்டிருக்கும் – தவிர சத்து நிறைந்த ரகங்களை உருவாக்குவ்தில் இன்றைய விஞ்ஞானிகள் ஏனோ பெரிய அளவில் வெற்றி பெறவில்லை.*

***உறவும் உரிமையும்***

*கிராமங்கள் தோறும் எண்ணற்ற ரகங்கள் இருந்தன. ஆனால் எந்த ஒரு நெல் ரகத்திற்கும் யாரும் உரிமை கொண்டாடியதில்லை. சீரகச் சம்பா எனக்குச் சொந்தம், மாப்பிள்ளைச் சம்பா அவருக்குச் சொந்தம் என்று உரிமை பாராட்டியதில்லை. விவசாயிகள் தங்களுக்கு வேண்டிய நெல் விதைகளைத் தாங்களே சேமித்து, வைத்துக் கொள்வதும் தங்களுக்குள்ளே பரிமாற்றம் செய்து கொள்வதும் நமது கிராமங்களின் நடைமுறை.*

*ஆனால் பன்னாட்டு நிறுவனங்கள் மரபணு மாற்று முறையில் விதைகளை உற்பத்தி செய்து உரிமை கொண்டாடி மார்க்கெட்டில் விற்பனை செய்யத் தொடங்கியுள்ளன. அந்த விதைகளை அவர்களின் நிபந்தனைகளை மீறும் விவசாயிகளின் மீது நடவடிக்கை எடுக்க முடியும்.*

*அந்நிய விதைகள் நமது இறையாண்மைக்கும் சுற்றுச் சூழலுக்கும் உடல்நலத்திற்கும் எதிரானது.''*

*பசுமைப் புரட்சியால் நமது நெல் ரகங்களை இழந்தோம். மரபணு மாற்றுத் தொழில்நுட்பத்தால் விதை உரிமைகளையும் இழக்க இருக்கின்றோம்!*

***மகளிரும் மல்லிகைப் பூ அரிசியும்***

*அரிசியில் முகம் பார்க்க வேண்டும் குக்கரில் வெந்த சோறு மல்லிகைப் பூப்போல இருக்க வேண்டும் வேகமாக வேக வேண்டும் இவையெல்லாம் அரிசியைத் தேர்ந்தெடுக்க நவீன இல்லத்தரசிகள் முன்வைக்கும் நிபந்தனைகள். அதன் விளைவாக நாற்பது வயதுக்கு மேல் மூட்டுவலி மற்றும் சர்க்கரை*

*நோய் இல்லாதவர்களைப் பார்ப்பது அரிதாகிக் கொண்டே இருக்கிறது.*

*அரிசியில் நமக்குத் தேவையான மாவுப் பொருள் வைட்டமின் புரோட்டின் இரும்பு மக்னீஷியம் போன்ற தாது பொருட்கள் ஏராளம் உள்ளன. ஆனால் நடைமுறையில் அரிசியை நன்றாகத் தீட்டி, இந்தச்சத்துப் பொருட்களை எல்லாம் நீக்கிவிட்டு வெறும் சக்கையைத்தான் உண்டு வருகிறோம்.*

*உலகில் சத்துணவுக் குறைவினால் பாதிக்கப்பட்ட ஐந்து குழந்தைகளில் ஒன்று இந்தியக் குழந்தையாக இருக்கிறது. கர்ப்பிணிப் பெண்களில் 60%க்கு மேல் அனிமிக்கால் (இரத்த சோகை நோய்) பாதிக்கப்பட்டுள்ளதாகப் புள்ளி விவரங்கள் கூறுகின்றன. நெல்லிலிருந்து உடல் ஆரோக்கியத்திற்குத் தேவை யான சத்து நிறைந்த அரிசியைத் தயாரிக்க முயலவேண்டும்.*

### *தணல் (Thanal)*

*இவ்வாறு நெல்லானது உற்பத்தி முதல் நுகர்வு வரை பல்வேறு பிரச்சனைகளையும் சவால்களையும் சந்தித்து வருகிறது. இந்தச் சமயத்தில் கேரள மாநிலம் திருவனந்த புரத்தை மையமாக வைத்துச் செயல்பட்டு வரும் தணல் அமைப்பு **"நமது நெல்லைக் காப்போம்"**என்ற முழக்கத்தை முன்வைத்து கேரளா, கர்நாடகா, தமிழ்நாடு, ஒரிசா, மேற்கு வங்கம் போன்ற மாநிலங்களில் விழிப்புணர்வை ஏற்படுத்தி வருகின்றனர். – .*

#### *உஷாரான ஊஷா*

*அரிசியில் முகம் பார்க்கநினைக்கும் மகளிரின் மடமையைப் போக்க, நமது பாரம்பரியநெல் ரகங்களைப் பாதுகாக்கதன்னை அர்ப்பணித்துக் கொண்டு பணியாற்றும் நமது நெல்லைக் காப்போம் பிரச்சாரத்தின் தேசியஒருங்கிணைப்பாளர் கேரளாவைச் சேர்ந்ததிருமதி எஸ். உஷா இவரோடு இணைந்து பணியாற்றும் தணல் அமைப்பின் ஒருங்கிணைப்பாளர் திரு. எஸ். பூரீதர் இயற்கை வேளாண் விஞ்ஞானி முனிவர் கோ. நம்மாழ்வார் கிரியேட் அமைப்பின் நிர்வாகஅறங்காவலர் திரு. ஆர். பொன்னம்பலம் போன்றோரெல்லாம் இயற்கை வழி வேளாண்மையின் அவசர அவசியத்தை நுகர்வோர் மத்தியில் பரப்பி வருகின்றனர்.*

### *கிருஷ்ண பிரசாத்*

*சகஜ சம்ருதா (Sahaja Samrudha) அமைப்பு, கர்நாடக மாநிலத்தில் பாரம்பரிய நெீல் ரகங்களைப் பாதுகாத்து வருவதோடு இயற்கைவழி வேளாண்மை முறையான விதை நெல் சேகரிப்பு போன்ற பயிற்சிகளை விவசாயிகளுக்குச் சொல்லிக் கொடுத்து விழிப்புணர்வை ஏற்படுத்தி வருகின்றனர். இந்த அமைப்பின் ஒருங்கிணைப்பாளர் திரு. கிருஷ்ண பிரசாத் அவர்கள். இவர்கள் வழியில் 'விதைப்போம் அறுப்போம்''என்ற முழக்கத்தோடு சிவப்பு அரிசியின் மகத்துவங்களை மக்களிடையே கொண்டு செல்லும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார் நாடக நடிகரான திரு. ச.கரிகாலன் அவர்கள்.*

### *மனித சக்தி*

*இயற்கை வேளாண் விஞ்ஞானி முனைவர் கோ. நம்மாழ்வார் சொல்லும் உழாத வேளாண்மை முறையைப் பற்றிக்கொண்டு விவசாயத்தில் பாரம்பரிய நெல் ரகங்களை மட்டுமே பயன்படுத்தும் இவர், தனது எழுத்தாற்றலைக் கொண்டு தன் அனுபவத்தில் கண்டதையும், பல பெரியவர்கள் சொன்ன தகவல்களின் அடிப்படையிலும் பாரம்பரிய நெல் ரகங்களின் அருமை பெருமைகளை இந்த நூலின் மூலம் பறைசாற்றி உள்ளார். இயந்திர மயமாக்கலைத் தவிர்த்து விவசாயத்தில் மனிதசக்தியை நம்பி புதிய பாதையில் பயணித்து வரும் இவர் தொகுத்துள்ள இந்த நூலுக்கு அணிந்துரை வழங்க எமக்கு வாய்ப்பளித்த கங்காராணி பதிப்பகத்தார்க்கு நன்றி சொல்லும் இந்த வேளையில், இந்த நூல் இன்றைய கால கட்டத்திற்கு உழவர் பெருமக்களுக்கு வழிகாட்டியாக அமையும் என்ற நம்பிக்கையோடு, 'நமது நெல்லைக் காப்போம்''என்ற முழக்கத்தோடு விதைப்போம் அறுப்போம் வெற்றி பெறுவோம். வாழ்க உழவர் வளர்க இயற்கை வழி வேளாண்மை!*

*2*
*ஆசிரியர்*

*"நாடக நாடி"யாக விளங்கி, "வேளாண் விரும்பி"யாக மாறிய நூலாசிரியர் திருத்துறைப்பூண்டி ச. கரிகாலன்*

## என்னுரை

தொன்று தொட்டு பத்தாயிரம் ஆண்டுகளாக உழவுத் தொழிலில் தலைநிமிர்ந்து நின்றான் தமிழன்

மாடு கட்டிப் போரடித்தால் மாளாது செந்நெல் என்று யானை கட்டிப் போரடித்த பெருமைக்கு உரியது நம் தமிழ்நாடு அன்று ஒவ்வோர் உழவனும் ஆராய்ச்சியாளனாக

ஒவ்வொரு பதினைந்து கிலோ மீட்டருக்கும் ஒரு விதை ரகத்தைத் தேர்வு செய்து கிட்டத்தட்ட இரண்டு இலட்சம் விதை ரகங்களை உருவாக்கி, காலம் காலமாக கைமாற்றி கொடுத்து உயர் விளைச்சல் கண்டார்கள்.

இந்த விதைகள் தமிழரை வாழ வைக்கும் விதைகளாக இருந்தன.

வறட்சியைத் தாங்கி நின்றன. நோயை விரட்டியடித்தன. கால்நடைகளை வளர்க்க வைக்கோலை வாரி வழங்கின. புயலை எதிர்த்து நின்றன. அப்டிப்பட்ட பல விதை ரகங்களின் பெருமைகளைப் பேசும் தொகுப்பு இது.

நொந்து போன விவசாயிகளின் சிந்தையில் தன்னம்பிக்கை வளர்க்கும் நூல் இது.

இயற்கையிலேயே நோய் எதிர்ப்பு சக்தியும் நிறைந்த சத்தும் உடைய நமது பாரம்பரிய நெல் ரகங்களை சிவப்பரிசியின் பெருமைகளை நுகர்வோரிடம் கொண்டு செல்லும் ஒரு முன் முயற்சி இது. இந்த நோக்கங்கள் நிறைவேறினால் அது இயற்கைக்குக் கிடைக்கும் மாபெரும் வெற்றியாகும்.

விதைப்போம் அறுப்போம்‘‘என்ற இந்த நூல் எழுதுவதற்கு எனக்குத் தூண்டுகோலாக இருந்தவர் கங்காராணி பதிப்பக உரிமையாளர் ஆசூர் க. தங்கதாசன் அவர்கள்.

நெல்லுக்கு இரண்டு முறை தமிழக அளவில் பெரும் திருவிழாக்கள் நடத்தி, தமிழகமெங்கும் பாரம்பரிய நெல் ரகங்கள் பரவிடக் காரணமாக இருந்தவர்.

நான் பல நெல் ரகங்களைப் பார்த்தறிய உறுதுணையாக இருக்கும் ‘கட்டிமேடு‘ஜெயராமன் அவர்கள் இந்த நூலுக்கு அணிந்துரை வழங்கிச் சிறப்பித்திருக்கிறார்.

எல்லாவற்றிற்கும் மேலாக இயற்கைவழி வேளாண்மையில் நான் ஈடுபடவும் நல்ல பயிற்சியாளனாக மாறவும் எனக்கு நல்ல பயிற்சி கொடுத்து இயற்கை விவசாயத்தில் முன்னோடியாக விளங்கச் செய்த தமிழ்நாடு இயற்கை உழவர் இயக்க இயக்குநர் மா. ரேவதி அவர்கள். இந்த ‘விதைப்போம் அறுப்போம்‘‘என்ற தொகுப்பு நூல் எழுதுவதற்கு முழு முதற்காரணமாக இருந்தவர் மா. ரேவதி அவர்கள்தான்.

இன்னும் இந்த நூல் உருவாகப் பல வகையிலும் உறுதுணையாக இருந்த ஊடகங்களுக்கும் சான்றோர் களுக்கும் கருத்துகளைத் தந்த பல பெரியவர்களுக்கும் நண்பர்களுக்கும் பசுமை விகடன், காரைக்கால் வானொலி போன்ற மக்கள் தொடர்பு சாதனங்களுக்கும், பாடல்களை எழுதித் தந்த இராம. கண்ணன் அவர்களுக்கும் எனக்கு உறுதுணையாக இருக்கும் என் இல்லத்தரசி ஜெயலட்சுமிக்கும் என் முயற்சிக்கு உறுதுணையாக இருக்க வாய்ப்பு இல்லாவிட்டாலும், தடை சொல்லாது ஊக்கப்படுத்தும் என் பிள்ளைகள் அஸ்வத்தாமன், ராஜப்பிரியன், பிரபு ஆகியோர்களுக்கும், இந்த நூலை வெளியிட்டுச் சிறப்பித்த கங்காராணி பதிப்பகத்தார்க்கும் நன்றி! நன்றி! நன்றி!

ச,கரிகாலன் 208, சாமியப்பா நகர்
திருத்துறைப்பூண்டி
அலைபேசி :+91 81 22 47 01 02

## *பதிப்புரை-அச்சு*

*நம் நாட்டின் முதன்மைத் தொழில்; முக்கியத் தொழில் விவசாயம். ஆனால், அந்த விவசாயம் இயற்கை முறையி லிருந்து விலகி வெகுதூரம் சென்றுவிட்டது.*

*இதன் விளைவு? மனிதன் உண்ணும் உணவில் சத்து இன்மையும், பயிருக்குப் போடப்படும் பூச்சிக்கொல்லி மருந்துகளின் விஷத்தன்மை பயிராகும் உணவுப்பொருளிலும் கலந்து, நம்மை நிரந்தர நோயாளிகளாக மாற்றிவிட்டன! . . .*

*மிக நீண்ட உறக்கத்திற்குப்பிறகு, இப்பொழுதுதான் இயற்கைவழி வேளாண்மையின் பக்கம் மக்கள் கவனம் திரும்ப ஆரம்பித்துள்ளது.*

*வரவேற்கத்தக்க மாற்றம் இது.நாடகப் பணியில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டிருந்தவர் நண்பர் நாட்க நாடி திருத்துறைப்பூண்டி ச. கரிகாலன் அவர்கள்.*

*இவர் தற்போது இயற்கைவழி வேளாண்மையில் ஈடுபாடு கொண்டுள்ளார். இயற்கைவழி வேளாண்மையில் மக்கள்*

*கவனம் திரும்பவேண்டும் என்ற எண்ணத்தில் இந்நூலை எழுதி யுள்ளார். இதனை வெளியிட அனுமதித்த அவருக்கு மிக்க நன்றி!*

*விவசாயத்தில் நாம் ஏமாந்ததுபோல், மொழியிலும் நாம் ஏமாளிகளாகவே இருந்துள்ளோம். நமக்கே உரித்தான தமிழ் எண்களை நம்மில் எத்தனை பேருக்குத் தெரியும்? இதனைத் தெரியவைக்க நாம் என்ன செய்தோம் ?*

*உலகத் தமிழ் செம்மொழி மாநாடு நடந்து முடிந்த நிலையில், 'எங்கள் பதிப்பகத்திலிருந்து வெளிவரும் அனைத்து நூல்களுக்கும்*

*பக்க எண்களாக, இனி தமிழ் எண்கள்தான் தரப்படவேண்டும்? என்று முடிவெடுத்தோம். தமிழ் எண்கள் ஆரம்பத்தில் யாருக்கும் தெரியாது என்பதால், அடைப்புக்குறிக்குள் அரபு எண்களையும் கொடுத்துள்ளோம்.*

*வாசகப் பெருமக்கள் இதனை ஏற்று தமிழ் எண்களையும் தெரிந்துகொண்டு, வழக்கத்தில் பயன்படுத்த வேண்டுகிறோம். நமது அடையாளத்தைப் பாதுகாக்கும் பணியில் உங்களுடன் எங்களையும் இணைத்துக்கொள்கிறோம்.*

*– பதிப்பகத்தார்*

## *1. நிறைகுடம் தளும்பாது*

*அரிசி! நமது உணவுகளின் அரசி நெல்லை உரலில் இட்டுக் குத்தி உமி போக்கி எடுப்பதே அரிசி. இது பச்சரிசி என்று சொல்லப்படுகிறது. – .*

*நெல்லைச் சிறிது வேக வைத்து உலர்த்தி, உரலில் இட்டு, குத்தி உமி போக்கி எடுத்தால் அது புழுங்கல் அரிசி.*

*நெல் சாதாரணமாக இந்தியா, பர்மா (இன்றைய மியான்மர்), சயாம் (இன்றைய இந்தோனேசியா) முதலிய நாடுகளில் சிறப்பாகப் பயிரிடப்படுகிறது.*

*இந்தியாவில் பயிராகும் நெல்லிலிருந்து கிடைக்கும் அரிசியானது ஒரேவிதமாக இராது. நிறத்திலும் உருவத் திலும் கனத்திலும் குணத்திலும் மாறுபாடு காணப்படும். இதனைக் கருத்தில் கொண்டே ஒவ்வோர் அரிசிக்கும் (நெல் ரகங்களுக்கும்) தனித்தனிப் பெயர்கள் கொடுத்துள்ளனர்.*

*தமிழகத்தின் முக்கிய உணவு அரிசி, அரிசியை அன்னமாகச் சமைத்தும் குருணையைக் (இதை நொய் என்றும் சொல்வர்.) கஞ்சியாக வடித்தும், மாவாக்கி இட்டலி, தோசை, அப்பம், இடியாப்பம், கொழுக்கட்டை, பொரியுருண்டை, பொரியரிசி,*

*களி, அரிசிப்பொங்கல், பாயாசம் இன்னும் பலவிதமான சுவைமிக்க பண்டங்களாகச் செய்தும் சாப்பிடுவது வழக்கம்.*

*இத்தகைய அரிசியின் பெயர்களையும் குணங் களையும் எனக்குத் தெரிந்த வரையில் இத்தொகுப்பின் மூலம் பதிவு செய்ய விரும்புகிறேன்.*

*இந்திய அளவில் சுமார் நான்கு இலட்சம் நெல் ரகங்கள் இருந்ததாகக் கருதப்படுகிறது. விவசாயம் முழுக்க முழுக்க வியாபாரமாக்கப்பட்ட நிலையில் கோட்டை கட்டி பாதுகாப்பாகப் பராமரிக்கப்பட்ட நமது பாரம்பரிய நெல் ரகங்கள் திட்டமிட்டு அழிக்கப்பட்டன அல்லது மறைக்கப்பட்டன.*

*மறைந்துபோன காலக்கதியால் நாம் மறந்து போன நமது பாரம்பரிய நெல் ரகங்களை நெல் விதைகளைத் தேடிப் பிடித்து மீட்டெடுக்கும் பணியில் ஈடுபட்டுள்ளனர் இயற்கை ஆர்வலர் பலர். .*

*பொதுவாக ஒவ்வொரு பதினைந்து கிலோ மீட்டருக் கும் மண்வாகு மாறிவரும். இயற்கைச் சூழல் வேறுபடும் இதைப் புரிந்துகொண்ட நம் முன்னோர்கள் தங்கள் பகுதிக்கு ஏற்ற நெல் ரகங்களை இனங்கண்டு பயரிட்டுள்ளனர்.*

*சுருக்கமாகச் சொன்னால் ஒவ்வொரு பதினைந்து கிலோ மீட்டர் பகுதிக்கும் வெவ்வேறு வகையான நெல் ரகங்கள் பயன்பாட்டில் இருந்துள்ளன.*

*ஒவ்வொரு நெல் ரகத்திற்கும் வெவ்வேறு குணம் சன்ன ரகம், மோட்டா ரகம், நீண்ட காலப் பயிர் குறுகிய காலப் பயிர் என நான் அறிந்தது, பார்த்தது, படித்தது, கேட்டுத் தெரிந்தது என எல்லாவற்றையும் இதன்மூலம் பதிவு செய்வது என் கடமையாகும்.*

*தற்போது தமிழ்நாட்டில் மட்டும் நூற்றுக்கும் மேற்பட்ட பாரம்பரிய நெல் ரகங்கள் புழக்கத்தில் இருப்பதாக அறியப் பட்டுள்ளது.*

## *2. பாரம்பரிய நெல் ரகங்கள்*

**நெல் ரகங்கள்**

*அறுபதாம் குறுவை, அம்பாசமுத்திரம், அரும்போச சம்பா, அன்னமழகி, ஆர்க்காடு கிச்சலி, இராவணன் சம்பா, இலுப்பைப்பூ சம்பா, ஈர்க்குச் சம்பா, உத்தமபாளையம் (செம்பாளை), உவர்முண்டான், ஒட்டுக்கிச்சடி, ஒட்டடையான், கட்டை சம்பா, களர்பாளை, கட்டமோசனம், கப்பகார், கப்பச்சம்பா, கருடன் சம்பா, கருப்பு சீரகச் சம்பா, கவுணி, களர் சம்பா, கர்நாடக சீரகச் சம்பா, கல்லி மடையான், கல்லுண்டைச் சம்பா, கருங்குறவை, காடைச் சம்பா, கார்நெல், காளான் சம்பா, கார்த்திகைச் சம்பா, காடைக்கழுத்தான், காட்டுயர்னம், கிச்சலி சம்பா, குள்ள கார், குடவாழை, குண்டுச்சம்பா, குறுஞ்சம்பா, குன்றிமணிச்சம்பா, குழியடிச்சான் குட்டவாழை, குதிரைவால் சிறுமணி, கைவரைச்சம்பா, கோடைச்சம்பா, கோரைச்சம்பா, சடார், சம்பாமோசனம், சம்பா, சடைச்சம்பா, சிவப்பு சீரகச்சம்பா, சிவப்புப் பொன்னி, சிவப்புக் குடவாழை, சீரகச்சம்பா, சீதா போகம், சீரகமல்லி, செஞ்சம்பா, செம்பாளை, செங்கார், செங்கல்பட்டு சிறுமணி, சொர்ணவாரி, சூப்பர் பொன்னி, சூரக்குறுவை, திருத்துறைப்பூண்டி கார், தூயமல்லி, தோட்டச்சம்பா, பிச்சவாரி, பிசினி, பெங்களூர் கார், பெருங்கார், பெரிய சம்பா, பெருநெல், புழுதிக்கார், புனுகுச் சம்பா, புழுகுச் சம்பா, பூங்கார், பூம்பாளை, பூஞ்சம்பா, பொன்மணி, மணல்வாரி, மலைநெல், மல்லிகைப்பூச்சம்பா, மலைக் கிச்சலி, மடுமுழுங்கி மண்கத்தை, மணிச்சம்பா, மஞ்சப்பொன்னி, மாப்பிள்ளைச் சம்பா, மிளகுச் சம்பா, முத்துவெள்ளை, முட்டக்கார், மொட்டக்கூர் மோசனம், மைச்சம்பா, நரிக்குறுவை நீலச்சம்பா, நெய்கிச்சலி, ராமக்குறிக்கார், ரோஸ்கார், வளைத்தடிச் சம்பா, வாடன் சம்பா, வாலான் சம்பா, வைகுண்டா, வெள்ளைக் கட்டை, வெள்ளை சொர்ணவாரி, வெள்ளைச் சீரகச்சம்பா.*

*இன்னும் பற்பல ரகங்கள் நமது கவனத்திற்கு வராமல் உள்ளன. ஏக்கருக்கு 12 மூட்டைகள், 15 மூட்டைகள், 18 மூட்டைகள் வரை மகசூல் கிடைக்கும். இது குறைந்த மகசூலாகத் தோன்றும்.*

*ஆனால் நமது முன்னோர் கடை சரக்கே இல்லாமல், காசு கொடுத்து எதையும் வாங்காமல் வீட்டில் வளர்த்த கால்நடைக்கழிவுகள், தோட்டத்தில் கிடைக்கும் இலை, தழைகள், மக்கும் குப்பைகள் இவற்றை மட்டும் வயலில் சேர்த்து, கலப்பை கொண்டு உழவு செய்து, உழைப்பை மூலதனமாக்கி விதைப்போம் அறுப்போம் என்ற அளவில் இயற்கையோ இணைந்து விவசாயம் செய்து வெற்றி கண்டுள்ளனர்.*

*பண்டமாற்று முறையில் கூலியாட்களுக்கும் நெல்லைக் கூலியாகக் கொடுத்துள்ளர். பணம் என்பது பொருளாதார ரீதியில் ‘விவசாயிகளைப் பயமுறுத்தாத காலம் அது.*

*இதுபோன்று நம் முன்னோர்கள் கையாண்ட விவசாய முறையில் செலவு குறைவு என்பது கவனத்தில் கொள்ள வேண்டிய செய்தியாகும்.*

*குறிப்பாகச் சொல்லப்போனால் அந்தக் காலகட்டத் தில் நான்கு நெல்மூட்டைகளை விற்று ஒரு பவுன்தங்கம் வாங்கி இருக்கிறார்கள்.*

*மீண்டும் அதுபோல் ஒரு காலகட்டம் வரவேண்டும் அதற்கு நமது நெல் ரகங்களைப் பயிர் செய்து பலன்பெற வேண்டும். இன்றுள்ள முக்காமுழ நெல் ரகங்களை வீரிய ஒட்டு ரகங்களை விட்டொழிக்க வேண்டும்.*

*மூன்றடி உயரம் வளரும் அறுபதாம் குறுவை, நான்கடி உயரம் வளரும் பூங்கார், ஐந்தடி உயரம் வளரும் மஞ்சள் பொன்னி, ஆறடி உயரம் வளரும் ரோஸ்கார், ஏழடி உயரம் வளரும் சிவப்புக் குடைவாழை, எட்டடி வளரும் காட்டு யானம், மாப்பிள்ளைச் சம்பா என நமது பாரம்பரிய நெல் ரகங்களை நாம்*

*பாதுகர்க்க வேண்டும்.*

*அப்போதுதான் விதை நமது பிடியில் வரும் விதைகள் நமது ஆயுதமாக மாறும் வைக்கோல் பஞ்சமின்றிக் கிடைக்கும். கால்நடைகள் பெருகும் நஞ்சில்லா அரிசி கிடைக்கும்.*

*வெள்ளிச் சந்தை, வியாழச் சந்தை, திங்கள் சந்தை எனக் கிராமந்தோறும் சந்தைகள் பெருகும். நம்மை நாசமாக்கும் நரக வாழ்க்கை, நகர வாழ்க்கை மறையும்.*

*இனி சில நெல் ரகங்களின் குணநலன்களைப் பார்ப்போம்.*

***அறுபதாம் குறுவை***

*எல்லா நிலத்திற்கும் ஏற்ற நெல் ரகம். மூன்றடி உயரம் வளரும். அறுபது நாட்களில் அறுவடைக்கு வரும். நீண்டகாலப் பயிரான ஒற்றடையான் நெல்லுடன், அறுபதாம் குறுவை கலந்து, ஊடுபயிராக விதைத்தால் ஒரே விதைப்பு, இருமுறை அறுவடை என ஒரே செலவில் இரண்டு மகசூல் பெறலாம்.*

***அன்னமழகி***

*அன்னமழகி அரிசி சுவையுள்ளது. சகலவிதக் காய்ச்சல் களையும், பித்த வெப்பத்தையும் போக்கவல்லது. உடல் ஆரோக்கியம் கூடும்.*

**இலுப்பைப்பூச் சம்பா**

*பித்த ஆரோக்கியத்தினால் விளைகின்ற சிற்சில ரோகம், சிரஸ்தாபம் உபசர்க்க தாகம், உஷ்ணம் இவற்றைச் செய்யும்.*

***ஈர்க்குச் சம்பா***

*தேவ பூஜைக்கு உரியது. நாவிற்குச் சுவையானது. பர்க்கில் இச்சையும் தரும். இதில் கொஞ்சம் பித்தம் உண்டு.*

***உவர் முண்டான்***

*உப்பு நிலத்திலும் ஓங்கி வளரும் அற்புதமான நெல் ரகம். இயற்கை, மண்ணுக்கு அளித்த கொடை. இதை மனிதன் மறக்கலாகாது.*

***ஒட்டடையான்***

*"நெடுநெடு" என்று வளர்ந்து நிற்கும் நீண்டகாலப் பயிர். 180 நாட்கள் வயதுடைய இந்த நெல்லுடன் 60 நாட்களில் அறுவடை செய்யக்கூடிய அறுபதாம் குறுவையைக் கலந்து விதைத்தால், ஒரே செலவில் இரண்டு முறை அறுவடை செய்து பலன் பெறலாம்.*

***கல்லுண்டைச் சம்பா***

*பாலனைய மிருதுவாகிய பெண்ணே! கல்லுண்டைச் சம்பா அரிசியை உண்பவர்க்கு மல்யுத்தக்காரரும் எதிர்க்க அஞ்சும் புய பலமுமும், மிகுவார்த்தையும் உண்டாம் என்க.*

***கருங்குறவை***

*இரண குஷ்டத்தையும் சிற்சில விஷத்தையும் நீக்கும். போக சக்தியையும் தரும் என்க.! கருங்குறவை*

*நெல் கறுப்பு நிறமாக இருக்கிறது. இது 'இந்தியன் வயாகரா' என்று அழைக்கப்படுகிறது. இந்தத் தகவலைச் சொன்னவர் பெங்களூர் கிருஷ்ணபிரசாத் அவர்கள்.*

**காடைச் சம்பா**

*பிறமேக சுரமும் சில அற்ப நோய்களும் நீங்கும். சுக்கிலத் தாது விருத்தியும் பலமும் உண்டாகும்.*

**கார் நெல்**

*140 நாட்கள் வயதுடைய நெல் ரகம். மந்த குணமுள்ளகார் அரிசி சரீர் புஷ்டியையும் தனிவாத உபரியையும் பலத்தையும் தரும். இது கரப்பான் பண்டமென்பர்.*

**காளான் சம்பா**

*சரீரத்திற்கு மலை போன்ற உறுதியையும், ஆரோக் கியத்தையும் தரும். சிற்சில வாத ரோகங்களையும் நீக்கும்.*

**காட்டுயானம்**

*180 நாட்கள் வயதுடைய நீண்டகாலப் பயிர். ஏழடி உயரம் வளர்ந்து நின்று இயற்கைச் சீற்றத்தைத் தாங்கி நிற்கும். களை எடுக்கத் தேவையில்லை. பூச்சி மற்றும் நோய்த் தாக்குதல் அறவே இல்லை. விதைத்தபின் அறுவடைக்குப் போனால் போதும். இதன் அரிசி சிவப்பாக இருக்கும். வடித்த கஞ்சி முதல் பழைய சாதம் வரை சுவையாக இருக்கும். இட்டலி, தோசை, இடியாப்பம் என எல்லாச் சிற்றுண்டி வகைகளுக்கும் ஏற்றது. சாப்பாட்டிற்கு அற்புதமாக இருக்கும். அவல் பாயாசம் இதன் சிறப்பு அம்சமாகும். இது எனது அனுபவப் பாடம்.*

**கிச்சலிச் சம்பா**

*130 நாட்கள் வயதுடையது. நேரடி விதைப்பு. நடவு இரண்டுக்கும் ஏற்ற ரகம். அதிகபட்சம் ஏக்கருக்கு 18 மூட்டைகள் வரை மகசூலாகும். சன்னரகம் சாப்பாட்டிற்கு ஏற்றது. பிரியாணிக்கும் பயன்படும். பலம், உடல் செழுமை, பொலிவு முதலியவை உண்டாகும்.*

**குள்ளக்கார்**

*ஆண்டு முழுவதும் பயிரிடலாம். 110 நாட்கள் வயதுடையது. அதிகபட்சம் ஏக்கருக்கு 14 மூட்டைகள் மகசூல் கிடைக்கும். இட்டலி, தோன்சக்கு நன்றாக இருக்கும்.*

**குடவாழை**

*இந்நெல், குடலை வாழ வைப்பதால் குடவாழை எனப் பெயர் பெற்றது. சர்க்கரை நோய் வராமல் தடுக்கும் என்பர். நாகை மாவட்டம் வேளாங்கண்ணி, விழுந்த மாவடி போன்ற கடற்கரைப் பகுதிகளில் பயிரிடப்படுகிறது.*

**குண்டுச் சம்பா**

*அக்கினி மாந்தமும் பலமிகுந்த கரப்பான் ரோகமும் உண்டாம். தாகரோகம் தீரும் என்பர்.*

**குறுஞ்சம்பா**

*பித்தம், கரப்பான் சுக்கிலத் தாது இவற்றை விருத்தி செய்யும். உடம்பில் குத்துகின்ற வாத நோய்களை*

*நீக்கும்.*

**குன்றிமணிச் சம்பா**

*அற்பவாத ரோகம் முதலிய சிற்சில நோய்கள் நீங்கும். சரீர பலமும் சுக்கில தாதுவும் விருத்தியாம்.*

**குழியடிச்சான்**

*வறட்சியில் தழைக்கும் பொன்நிற நெல் ரகம் இது. ஒரு மழை போதுமானது. உப்பு நிலங்களில்கூட நன்றாக விளைகிறது. பூச்சித் தொல்லை, நோய்த் தாக்குதல் இருப்பதில்லை. களை யெடுக்கும் வேலை இல்லை. இதன் வயது 90 நாட்கள். அதிகபட்ச மகசூல் ஏக்கருக்கு 15 மூட்டைகள். மோட்டாரகம் கேரள மக்கள் விரும்பும் நெல் பலகாரத்திற்கு ஏற்றது.*

**கைவரைச் சம்பா**

*தமிழகமெங்கும் பரவலாக அறிந்த நெல்ரகம், பள்ளத்திலும் பழுதில்லாமல் விளையும். இதன் மருத்துவக் குணம், உடலுக்கு மலை போன்ற வன்மையும் சுக்கிலஸ்தம்பனமும் சுகமும் உண்டாகும். இதில் சிறிது பித்தம் அதிகரிக்கும் என்பர்.*

**கோடைச் சம்பா**

*முத்தோஷத்தால் பிறந்த வாத வலியும் சரீரத்திலுள்ள சிற்சில நோய்களும் விலகும் என்பர்.*

**கோரைச் சம்பா**

*பித்தம் உடல்சூடு பிரமேகம் நமைச்சல் இவற்றை நீக்கும். ஆரோக்கியம் தரும். குளிர்ச்சி என்பர்.*

**சடார்**

*65 நாட்கள் வயதுடையது. இரண்டரை அடி வளரும், சன்னி ரகம், குறுகிய காலப்பயிரில் முதன்மையர்ன நெல், நாகை மாவட்டம் வேதாரண்யம் வட்டம் தாணிக்கோட்டகம் பகுதியில் பயிரிடுவதாகச் சொல்லப்படுகிறது*

**சம்பா மோசனம்**

*பூம்பாலை என்றும் சொல்லப்படுகிறது. 160 நாட்கள் வயதுடையது. ஏக்கருக்கு 20 மூட்டை வரை மகசூல் கிடைக்கும். நேரடி விதைப்பிற்கு ஏற்றரகம். மோட்டா ரகம் அவல் இடிப்பதற்கு ஏற்றது.*

**சிவப்பு குடவாழை**

*சர்க்கரை நோயைக் கட்டுப்படுத்தும் அற்புத மருத்துவ குணம் கொண்டது. சிவப்பு அரிசி இட்டலி, தோசை, சாப்பாடு என எல்லாவற்றிற்கும் ஏற்றது. வடித்த கஞ்சியும் பழைய நீராகாரமும் சுவையானது. 150 நாட்கள் வயதுடையது. இயற்கைச் சீற்றத்தைத் தாங்கி தலைக்கு மேல் உயர்ந்து வளரும். ஏக்கருக்கு 20 மூட்டைக் குக் குறையாமல் மகசூல் கொடுக்கும். இது அனுபவத் தகவல்.*

**சீதா போகம்**

*தேக பலம், உடல்பொலிவு, தாதுபலம் உண்டாகும். அஜீரணத்தை ஒழிக்கும் என்க!*

***சீரகச் சம்பா***

*140 நாட்கள் வயதுடையது. ஐந்தடி உயரம் வளரும், மிக மிகச் சன்னரகம். மதுரமுள்ள சீரக சம்பா அரிசியைச் சமைத்து உண்டவுடன் மீளவும் உண்பதற்கான தீபமுண்டாகும். அற்பவாத ரோகங்கள் போகும் என்க!*

***சீரக மல்லி***

*பயிர்க்காலம் 130 நாட்கள். ஏக்கருக்குச் சுமார் 20 மூட்டை மகசூலாகும். சன்ன ரகம் சாப்பாட்டிற்கு ஏற்றது.*

**செஞ்சம்பா**

*கிளைக்கின்ற அற்பக் கிராந்தியும் அதிவிரணமும் யானைச் சொறியும் மிகுபசியும் உண்டாகும் என்பர்.*

**திருத்துறைப்பூண்டிக் கார்**

*இப்படி ஒரு நெல் ரகம் திருத்துறைப்பூண்டி பகுதியில் இருந்ததாகப் பெரியோர்கள் சொல்லக் கேட்டு, செங்கல் பட்டு பகுதியைச் சேர்ந்த மீனாட்சிசுந்தரம் என்பவர் ஒரு பத்திரிகையில் சொல்லி இருந்தார். நூலக பத்திரிகையில் படித்த செய்தியைக் கொண்டு இப்படி ஒரு நெல் ரகம் கிடைக்குமா என்று இன்று வரை நான் தேடிக் கொண்டிருக்கிறேன்.*

**தூய மல்லி**

*பயிர்க்காலம் 130 நாட்கள். சன்ன ரகம். சாப்பாட்டிற்கு ஏற்றது. ஏக்கருக்கு 15 மூட்டை மகசூலாகக் கிடைக்கும்.*

***பிச்சவாரி நெல்***

*மருத்துவ குணம் கொண்டது. இதன் தவிடு, வைக்கோல் மாட்டுக்கு நல்ல உணவாகும். மாடுகளுக்கு ஏற்படும் கழிசல் நோயைக் குணமாக்கும்.*

***பிசினி***

*பயிர்க்காலம் 130 நாட்கள். நேரடி விதைப்புக்கு ஏற்ற ரகம். ஏக்கருக்கு 15 மூட்டைகள் மகசூலாகும் அவல் மற்றும் இட்டலி, தோசைக்கு ஏற்றது.*

**பெங்களூர் கார்**

*பயிர்க்காலம் 120 நாட்கள். ஐந்தரைஅடி உயரம் வளரும்.*

**பெருங்கார்**

*சத்துள்ள அரிசி. நல்ல நீராகாரத்திற்கு உகந்தது. பலகாரம் செய்யலாம். சாப்பாட்டிற்கு ஏற்றது. இரண்டு நாள் ஆனாலும் கெட்டுப்போகாது. பயிர்க்காலம் 130 நாட்கள். ஏக்கருக்கு 18 மூட்டை வரை கிடைக்கும். வைக்கோல் கூடுதலாகக் கிடைக்கும். அந்த அளவுக்கு ஓங்கி வளரும். தகவல் : கலசப்பாக்கம் மீனாட்சிசுந்தரம் அவர்கள்கூறியுள்ளார்.*

***புழுகுச் சம்பா***

*வனப்பும், காந்தியும் அதீத பாக்கினியும் பலமும் உண்டாகும். தாகம் நீங்கும்.*

***பூங்கார்***

*புயல், வெள்ளம், வறட்சியையும் தாங்கி வளரும் 70 நாள் பயிர். ஏக்கருக்கு 21 மூட்டை மகசூலாகும். ஓர் ஆண்டில் 5 முறை பயிரிட்டுப் பலன் பெறலாம். சத்து நிறைந்த இந்த அரிசியில் கர்ப்பிணிப் பெண்களுக்குப் பத்தியக் கஞ்சி வைத்துக் கொடுப்பார் களம். தகவலைத் தந்திருப்பவர் நாகை மாவட்டம் தலைஞாயிறு சோமு இளங்கோவன் அவர்கள். வாட்டாகுடியில் தேடிப்பிடித்த விதை நெல்லைப் பயிரிட்டுப் பாதுகாத்தவர் தலைஞாயிறு பழையாற்றங் கரை பெருமாள் அவர்கள். இதைச் செய்தியாகக் கொடுத்தது பசுமை விகடன்.*

***மடுமுழுங்கி***

*வெள்ளத்தைத் தாங்கி வளரும் குளம்போல் தேங்கும் நீருக்கு மேலே வளர்ந்து நிற்கும். நல்ல மகசூல் தந்து மானத்தைக் காப்பாற்றும்.*

***மணக்கத்தை***

*குஷ்டம் புண் புரையோடும் ரணங்கள் முதலியவை போகும்.*

***மணிச்சம்பா***

*அதிமூத்திரத்தை விலக்கும். அதிசுகுத்தால் உடலையும் விருத்தர் பாலர்களையும் போஷிக்கும் என்பர்.*

***மஞ்சள் பொன்னி***

*பசுமை விகடன் மூலம் எனக்குக் கிடைத்த சொத்து. 100 கிராம் விதையை மேட்டுப் பாத்தியில் தெளித்து, தண்ணீர் விட்டு வளர்த்துப் பத்தாம் நாள் பறித்து இளம் நாற்றாக ஒற்றை நாற்று நடவு முறையில் பத்து சென்ட் நிலத்தில் ஓர் அடிக்கு ஓர் அடி என்ற இடைவெளியில் நடவு செய்து, வேப்பம் பிண்ணாக்கு அமுத கரைசல் ஒருமுறை கொடுத்தேன். குறைந்தது ஐந்து முதல் அதிக பட்சம் நாற்பது தூர்கள் வளர்ந்தன. கதிருக்கு சுமார் 100 நெல்மணிகள் இருந்தன. 100 நாளில் அறுவடைக்கு வந்தது. பத்து சென்ட் நிலத்தில் 100 கிராம் விதையால் ஒரு குவிண்டால் (100 கிலோ) விதை நெல் கிடைத்தது.*

*பூச்சித் தாக்குதல் அறவே இல்லை. ஐந்தடி உயரம் வளர்ந்து அற்புதமாக விளைந்த மஞ்சள் பொன்னி. சிவப்பரிசி சாப்பாட்டிற்கு அற்புதமாக உள்ளது. இதன் நீராகாரம் தேவாமிர்தம் போல் சுவைமிகுந்தது. இட்டலி, தோசை எனஎல்லாப் பலகாரத்திற்கும் ஏற்றது. சர்க்கரைப் பொங்கல் இதன் சிறப்பு அம்சமாகும். இது என் அனுபவபகிர்வு.*

***மாப்பிள்ளைச் சம்பா***

*நீண்டகாலப் பயிர். 180 நாட்கள் வயதுடையது. நேரடி விதைப்பு நடவு இரண்டுக்கும் ஏற்றது. ஏக்கருக்கு 18 மூட்டைகள் கிடைக்கும். ஏழடி வளரும் இளஞ்சிப்பு நிறமோட்டாரகம். சத்துள்ள இதன் நீராகத்தை ஒரு வாரம் சாப்பிட்டால் இளவட்டக் கல்லைத் தலைக்கு மேல் சுலபமாகத் தூக்குவானாம் புதுமாப்பிள்ளை.*

***மிளகுச் சம்பா***

*சௌக்கியத்தைக் கொடுத்துத் தீபாக்கினியை வளர்க்கும். மகாவாத முதலிய ரோகங்களைப் போக்கும்.*

***முட்டக்கார்***

*120 நாட்கள் வயதுடைய மோட்டா ரகம் கார்த்திகைப் பட்டம் சிறந்தது. ஏக்கருக்கு 18 மூட்டை மகசூல் கிடைக்கும். இட்டலி தோசைக்கு ஏற்ற ரகம்.*

***மைச்சம்பா***

*அரோசகம் வாத பித்த தந்தம் தனிவாத போகும் என்க.*

***நீலச்சம்பா***

*மோட்டாரகம் இட்டலி தோசைக்கு ஏற்றது. நடவு செய்தால் ஏக்கருக்கு 22 மூட்டைகள் கிடைக்கும். இதன் வயது. 180 நாட்கள்.*

***ராமகுறிகார்***

*நான்கடி உயரம் வளரும். 100 நாள் பயிர். உருண்டை வடிவ அரிசி. உன்னதமான ருசி. இட்டலி, தோசை, நீராகாரம் என எல்லாவகை உணவுக்கும் சிறந்தது. ராமம் போன்ற குறி தென் படுவதால் இந்த நெல் ராம குறிகார் எனப் பெயர் பெற்றது போலும் நாகை மாவட்டம் புஷ்பவனம் பகுதிகளில் மானாவாரிப் பயிராகப் பயிரிடப்படுகிறது. பாசனத்திற்கும் ஏற்ற பயிர். இது என்அனுபவத் தகவல்.*

.

**ரோஸ் கார்**

*ஓங்கி வளர்ந்து பயிராகும். தண்ணீருக்குள் மூழ்கிக் கிடந்தாலும், விதை முளைத்துவிடும். தலைஞாயிறு பகுதி யில் விளையும் பயிர் களிமண் பகுதிக்கும் ஏற்ற நெல்.*

**வளைத்தடிச் சம்பா**

*வாத பித்த தொந்தரவு, வயிறு அளைதலுடன் உப்பசம், கரப்பான் அலச ரோகம் ஆகியவை உண்டாம் என்க.*

**வாடன் சம்பா**

*வறட்சி தாங்கி வளரும். மோட்டாரகம் 160 நாட்கள் வயது. இட்டலி, தோசைக்கு உதவும். ஏக்கருக்கு 15 மூட்டைகள் கிடைக்கும். நேரடி விதைப்பு, நட்வு இரண்டுக்கும் ஏற்றது.*

**வாலான் சம்பா**

*அரோசிகம் மாந்தம் முதலியவை நீங்கும். தேகத்தின் அழகையும் கொழுமையும் உண்டாக்கும்.*

**வைகுண்டா**

*நேரடி விதைப்பு நடவு இரண்டுக்கும் ஏற்றது. 150 நாட்கள் வயதுடையது. ஏக்கருக்கு 18 மூட்டைகள் வரை கிடைக்கும். பொரி செய்வதற்குப் பயன்படும்.*

## *3. இயற்கையை மறந்து எதை நாம் சாதித்தோம்?*

**ஆலும் வேலும் பல்லுக்குறுதி**

*எல்லாருக்கும் எல்லாமும் தரும் சக்தி படைத்ததுதான் இயற்கை!*

*ஒரு பசு, கன்று ஈனுவதற்கு முன்பே அந்தக் கன்றுக்குத் தேவையான பாலை, மாட்டினால் கொடுக்க வழிவகுத்து உள்ளது இயற்கை!*

*இடம்விட்டு இடம் நகரும் உயிரினங்களுக்கு எல்லாம் கொடை கொடுக்கும் இயற்கை, இடம்விட்டு நகரும் சக்தியற்ற செடி, கொடி, பயிர்களுக்குத் தேவையானதைக் கொடுக்காதா என்ன?*

*''மரத்தை வைத்தவன் தண்ணீர் ஊற்றுவான்' என்ற வாசகம் சரியான விளக்கம்தானே!*

*மனிதர்களாகிய நாம் இயற்கை தரும் அளவிற்கு மட்டுமே. பலனை அனுபவிக்க தயாராகிவிட்டால்..*

*ஜப்பானைச் சேர்ந்த மாசானோபு புகோகா சொன்ன Do-nothing Farming என்ற தத்துவம் சாத்தியமாகிவிடும்.*

*அதாவது எதுவும் செய்யத் தேவையற்ற விவசாயம்! சுயசார்பு இலாபமிக்க பழுதற்ற வோளண்மை!*

*நாம் எதுவும் செய்யாமல் இயற்கையிடம் வேளாண்மையை விட்டு விடுவது!*

*பலனை மட்டும் நாம் அனுபவித்துக் கொள்வது!*

*ஆடுமாடு மற்ற ஜீவராசிகள் விவசாயத்தைப் பற்றிக் கவலைப்படுகிறதா?*

*மனிதனுக்கு மட்டும் என்ன வந்தது ? இனியாவது இயற்கையை நேசிக்கக் கற்றுக்கொள்வோம்.*

**பூனைக்கு மணி கட்டுவது யார்?**

*வேளாண்மை என்பது ஆரோக்கியம் தொடர்பானது!*

*அதைப் பொருளாதார ரீதியாகவோ அல்லது தொழில் ரீதியாகவோ பார்க்கக் கூடாது!*

*ஏனெனில். Anything in the world is next to Healty.*

*இன்று நாம் தவறான பாதையில் நெடுந்தொலைவு வந்து விட்டோம். சரியான பாதைக்குத் திரும்புவது சற்றுக்கடினம்தான்!*

*எதிர்காலத்தை நினைத்து அழுவதா?*

*கடந்த காலத்தை நினைத்துச் சிரிப்பதா?*

*தொடக்கத்தில், 'பசுமைப் புரட்சி''என்ற பெயரால் கொண்டு வரப்பட்ட இரசாயன உரங்களை நம் விவசாயிகள் ஏற்க மறுத்தனர் என்பதே உண்மை!*

*ஆனால், பின்விளைவுகளை எண்ணிப் பார்க்கத் தவறிய அரசும், அரசு அதிகாரிகளும் அதைக் கொண்டு*

*வர முனைந்து செயல்பட்டனர். .*

*விளைவு.? நம் முன்னோர்களின் மூளை மழுங்கடிக் கப்பட்டு விவசாயம் திசை திருப்பிவிட்டது.*

*புரட்சியின்போது, வேளாண்மை கொஞ்ச நாள் மட்டும் பலன் தந்தது. பிறகு நம்மைக் கெடுத்தது. இன்னும் கெடுத்துக் கொண்டிருக்கிறது. தற்காலிகமாகக் கிடைத்த சொற்ப இலாபங்களுக்காக இரசாயனத்தைக் கொட்டி நிலத்தை மலடாக்கி விட்டோம்.*

*ஆம்! நுண்கிருமிகள் அழிக்கப்பட்டன. மண்புழு மறைந்து போனது. மண்ணின் தன்மை மரத்துப் போனது. விதைக்கும் விதைக்கு, வீரியம் கிடைக்காது விவசாயம் நட்டக்கணக்கைக் காட்டியது!*

*இது மட்டுமா? . இரசாயனத்தைக் கொட்டியதும் பயிரில் பச்சையம் கூடியது பச்சையம் பூச்சிகளுக்கு வரவேற்பு கொடுத்தது. பூச்சிகளைக் கண்ட விவசாயி பூச்சிக் கொல்லியைத் தேடினான்.*

*நஞ்சைக் கொட்டி விளைவித்ததால் உணவும் நஞ்சானது. மனிதன் நோயாளியானான். நீர், நிலம், காற்றும் கெட்டுப் போனது. உயிரினங்களையும் சிதைத்துவிட்டோம். இரசாயன உரங்களை நாடியதால் இயற்கை இடுபொருட் களை அலட்சியப்படுத்தினோம்.*

*இயற்கை எரு தேவைப்படாதபோது கால்நடைகளும் நமக்குச் சுமையானது.*

*இயந்திர மயமாக்கலை ஏற்றபோது கால்நடைகளை விவசாய வேலையிலிருந்து வெளியேற்றத் துணிந்தோம்!*

*செயற்கை விவசாயம் முன்னேற்றம் கண்டதாகப் பெருமிதம் கொண்டோம்.*

*வேளாண்மை வியாபாரமாக்கப்பட்டது. ஆரோக்கியம் புறக்கணிக்கப்பட்டது. படிப்பு நமது பாதையை மாற்றியது. உள்ளூர் ஓடைக்கும் வடிகால் அறியாதபடி நைல் நதி பற்றிய பாடம் நம் கருத்தைக் கவர்ந்தது.*

*திசைகளைக் கூடத் திருப்பும் சக்தி படைத்தவர்களாக நம்மை நாம் எண்ணிக்கொண்டோம்.*

*நாகரிகம் நம் கண்ணை மறைத்தது! மனம் சுயக்கட்டுப்பாட்டை இழந்தது. அறிவியல் நமக்குக் கண்மூடித்தனமானதைரியம் கொடுத்தது. ஆசை நம்மை வழிநடத்தியத்தியதுபணம் ஒன்றே குறிக்கோளானது. இயற்கையைச் சுவைப்பதற்குப்பதில், சிதைக்கமுடிவெடுத்துச் செயல்பட்டோம்.*

*விஞ்ஞானம் விவசாயத்திற்கு வழிகாட்டுவதாக எண்ணி, விளைநிலங்களை வீணாக்கிவிட்டு விழிபிதுங்கி நிற்கிறோம்.*

*மெத்தப்படித்த சமூகம் பக்குவப்பட்ட் விவசாயத்தைச் சீரழித்துவிட்டது.இன்று நாம் கடன் சுமையில் பொருமிக் கொண்டிருக்கிறோம். வாரிசுகளை உருவாக்காமல் உருக்குலைந்து போனோம்!*

***மானியத்தை நாடும் மானிடம்***

*தெய்வத்துக்குச் சமமாகத் தொழப்பட வேண்டியவன் உழவன்!*

*''உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்; மற்றெல்லாம்*
*தொழுதுண்டு பின்செல் பவர்.''*

*என்றார் வள்ளுவர்.*

*தானியத்தைக் குவித்து உலகுக்கு உணவளித்தவன், மானியத்தை நாடும் நிலைமைக்கு ஆளாகிவிட்டான்.*

*சமுதாயம் விவசாயிகளுக்குக் கொடுத்த கொடையா இது? அல்லது விவசாயி தனக்குத்தானே தோண்டிக் கொண்ட படுகுழியா?*

*குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐவகை நிலம் கண்டான் தமிழன் அன்று. இதனை,*

***"முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து<br>நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உற்று<br>பாலை என்னுமோர் படிவம் கொள்ளும்"***

*என்பதால் அறியலாம்.*

*மாதம் மும்மாரி பொழிந்த காலங்களில் எல்லாப் பயிர்களும் மானாவாரிப் பயிர்களாக விளைவிக்கப்பட்டன.*

*அன்று ஒரு கோவிலைக் கட்டினால் அருகில் ஒரு பெரியகுளத்தை வெட்டினர். -*

*இன்று குடிசை வீடு கட்டுவதற்குக் கூட குளத்தை மூடுகின்றனர்.*

*குளங்கள் தூர்ந்து போனதும் நிலத்தடி நீர்குறைந்து போனது. ஏரிகள் சேரி வீடுகளாகவும், மாடி வீடுகளாகவும் மாறியதால், பாசனக் கால்வாய் சாக்கடைகளாக மாறியது.*

*கிணறுகள் கேட்பாரற்றுப் போனதால் போர்வெல் சூடு பிடித்தது. மோட்டார் சந்தை பிரபலமானது. விஞ்ஞான வளர்ச்சி என்று வேகமாக ஏற்றுக்கொண்டு நிலங்களைப் பாலைவனமாக்கிவிட்டோம்.*

*இன்னும் ஒய்ந்தபாடில்லை. தோற்றுக்கொண்டே இருப்பவனுக்குப் புதிய தோல்வி வேதனை தராது. இரப்பர் மரத்திற்கு இரணங்கள் புதிதல்லவே?*

*தோல்வியே வாழ்க்கை முறை என்று ஆனபின் வெற்றி பற்றிச் சிந்திக்க தெம்பு இல்லை–*

*இருப்பதை இழந்து, பறப்பதைப் பிடிக்க முயல்கிறான் மனிதன்.*

*காலடியில் கிடைக்கும் இயற்கை என்னும் புதையலை மறந்து போனான்.*

*பிள்ளைகளைப் படிக்க வைத்து வெளிநாடுகளுக்கு அனுப்பி முன்னேற்றப் பாதைக்குக் கொண்டு செல்வதாக கற்பனைக் கோட்டை கட்டிக்கொண்டு, அவர்களை நோயாளியாக மாற்றும் பணியைச் செவ்வனே செய்து கொண்டிருக்கிறோம்.*

*முட்டாள் தனமான செயலைச் செய்துவிட்டு ஒரு புத்திசாலித் தனமான முடிவை எதிர்பார்ப்பது எந்தவிதத்தில் நியாயமானது?*

**கண்கெட்ட பின்னே சூரிய வணக்கம்**

*இது எனக்கும் பொருந்தும். இன்று விலைநிலங்கள் வீட்டு மனைகளாக மாற்றப்பட்டு, தரிசாக்கப்பட்டுள்ளன. சாகுபடி செய்தால் வேலைக்கு ஆட்கள் இல்லை என்ற அரிய கண்டுபிடிப்பு வேறு.*

*இப்படியெல்லாம் மனம்போன போக்கில் இன்னும் போய்க்கொண்டிருந்தால், நம் சந்ததிக்கு யார்தான் நல்ல உணவை நஞ்சில்லா உணவைக் கொடுப்பது?*

*இதுபற்றி என்றைக்காவது நாம் சிந்தித்திருக்கிறோமா? என்றால் இல்லை என்றே பதில் வரும்.*

*வளரும் குழந்தை ஊனமாகிவிடக்கூடாது என்று பொறுப் போடு போலியோ சொட்டு மருந்து கொடுக்கிறோம்.*

*அந்தக் குழந்தை நோய்நொடி இல்லாமல் வாழவேண்டும், அதற்கு நஞ்சில்லாத உணவை நாம் தரவேண்டும் என்று என்றாவது சிந்தித்திருக்கிறோமா?*

*இனியாவது சிந்திப்போம்! மனமிருந்தால் மார்க்கம் உண்டல்லவா?*

*சந்ததிக்குப் பரிசா*
*தந்திடனும் பெரிசா*
*நல்ல நல்ல உணவுகளை*
*இயற்கை உணவுகளை*
*சத்துக் குறையாத*
*சாகுபடிக் கேத்த*
*ஒற்றை நாத்தைப் பயிரிடுங்க!*

*வேருக்கொரு துராய்*
*துருக்கொரு நூறாய்*
*நெல்லுமணி விளைஞசிடுமே!*

*மண் வளமும் காத்து*
*மண்புழுவைப் பெருக்கிட*
*இயற்கை உரம் வேணும்*

*இதைச் சொன்னாப்புரிஞ்சிக்கிட்டு*
*செஞ்சா நல்லாயிருக்கும்*
*இயற்கை விவசாயம்தான்*

*கொத்துக் கொத்து கொத்து*
*கழனியை நல்லாக் கொத்து*
*களை வேர்கள் அழிந்திடக்*
*கொத்து எல்லாக் கலைகளும் சேர்த்து*
*எருக்குழியிலே ஆழமா போட்டு*
*சாணியும் சாம்பலும் கூட்டு*
*மண்ணோட மக்கிதான்*
*இயற்கை உரமாய் மாறும்*
*வயலுக்கு அடியுரமாய்*
*போட்டாலே தரமாகும்*
*இது பயிரை நல்லா வளர்க்கும்*
*இது பரம்பரையாய் வந்த பழக்கம்*

*இந்த முறையைப் புரிஞ்சிக்கிட்டா*
*முயற்சி எடுத்துக் கிட்டா*
*இயற்கை விவசாயம்தான்*

*நிலமோ தரிசாகக் கிடக்கு*
*நிலத்தடி நீரையும் பெருக்கு*
*கரைகளைப் பலமா கட்டு*
*ஏரைப்பூட்டி உழுது*
*இயற்கை தொழுவுரம் கொடுத்து*
*விதைக்கணும் பருவம் பார்த்து*

*முன்னோர்கள் சொன்னதெல்லாம்*
*முறையான விவசாயம்*
*சந்ததிக்கும் பழைய முறை*
*பழக்கிவிட்டா லாபம்*
*இயற்கை எருவே செலவு*
*சிக்கனமாய் நடக்கும் உழவு*
*நிலமும் சீரடையும்*
*நீரும் மிச்சப்படும்*
*இயற்கை விவசாயம்தான் (சந்ததிக்கு)*

*எஞ்சிய நம் வாழ்நாள் கொஞ்சமேனும் நலம்பெற வேண்டும். நம் வருங்காலச் சந்ததிகள் வாழ்வு வளம் பெறவேண்டும் என்ற இலட்சியம் நமக்குள்.*

*உருவானால் இயற்கை பற்றிச் சிந்திக்கும் ஆற்றல் இயல்பாக உருவாகிவிடும். –*

*இயற்கை நமக்களித்துள்ள கொடை எண்ணிலங்காது. அதை முறையாகப் பயன்படுத்த நாம் தயாரானால் வறுமை என்ற சொல்லே மறந்து போகும்.*

*உலகத்தில் அனைவரின் தேவைகளையும் நிறைவேற்ற இயற்கை வளங்கள் போதுமான அளவில் இருக்கின்றன. ஆனால் நமது பேராசைகளை நிறைவேற்றும் அளவிற்கு இல்லை என்று மகாத்மா காந்தி சொல்லி இருப்பதை இங்கே நினைவுபடுத்த விரும்புகிறேன்.*

*மண் விவசாயிகளின் மூலதனம்.*

*Soil is the Capital of Farmer.*

*இதை நாம் மறக்கலாமா? மூலதனத்திற்கே மோசம் செய்தால் எப்படி?*

***"ஏரினும் நன்றாகம் எருவிடுதல்; கட்டபின்***
***நீரினும் நன்றதன் காப்பு."*** *என்றார் வள்ளுவர்.*

*உழவு செய்தல், மண்ணுக்கு வளம் சேர்த்தல், பயிருக்கு நீர் பாய்ச்சுதல் ஒன்றுக்கொன்று முக்கியமானது என்கிறார் வள்ளுவர்.*

*இயற்கை விவசாயம் செய்வதால், மண்வளம் கூடும். நஞ்சில்லா உணவு கிடைக்கும். நீர்த்தேவை குறையும். சுற்றுச்சூழல் மாசுபடாது. நம் சந்ததிக்கு இதைவிட வேறு என்ன வேண்டும்? கண்கெட்ட பின்னே சூரிய நமஸ்காரம் என்பதுபோல், இராசயன உரங்களைப் போட்டு, பூச்சிக்கொல்லி மருந்துகளைத் தெளித்து, விவசாயம் கெட்டுப்போனதும் உணவு நஞ்சானதும் உடல்நலம் பாதிக்கப்பட்டதும் நமக்கு நன்றாகத் தெரிகிறது.*

*இருந்தும் இதற்கு மாற்று என்ன என்று சிந்திப்பதை விடுத்து, விவசாயத்தை நிறுத்தி விடுவதும் விளைநிலங் களைத் தரிசாக்குவது சரியான தீர்வாகிவிடுமா?*

*எதை நாம் இழக்கக்கூடாதோ அதை இழக்கத் தயாராகிவிட்டால், வாழ்க்கையே சுமையாக மாறிவிடும்.*

*இனியாவது நாம் சிந்திப்போம். நமக்காகச் சிந்திப்போம். நம் வருங்காலத் தலைமுறைகளுக்காகச் சிந்திப்போம்.*

***இயற்கை உழவன் மண்புழு***

*இன்று படித்த பட்டதாரிகள் பன்னாட்டு நிறுவனங்களை நாடி ஓடுகிறார்கள். மருத்துவம் படித்தவர்கள் கிராமங்களில் பணி செய்ய மாட்டார்களாம்.*

*என்னய்யா மடமை இது? ஏர் பிடித்த உழவன் இவர்களுக்குச் சோறு கொடுக்க மறுத்தால் நிலைமை என்னவாகும்? யோசித்தார்களா அவர்கள்?*

*ஒரு பட்டதாரியை உருவாக்க 150 உழவர்களின் ஒரு வருட உழைப்பு வீணாகிறது. ஆனால் அந்தப் படிப்பு அந்த உழவர்களுக்குப் பயன்படுகிறதா என்றால் இல்லை என்றே சொல்ல வேண்டும்.*

*காலம் மாறும்! இயற்கை நமக்கு உணவாகும். மூலிகை நமக்கு மருந்தாகும்! பட்டப் படிப்பு பதவி யாருக்குச் சோறு போடும்? படிப்பு என்பது அறிவை வளர்த்துக் கொள்ள உதவும் கருவி. உழைப்புதான் மனித உயர்வுக்குப் பாதை அமைத்துக் கொடுக்கும்.*

*சொகுசு சோறு போடாது. இதை உணர்ந்தால் மனித மனம் மாசுபடாது.*

***மண்வாசனை***

*இனி நிலத்திற்கு வருவோம்!*

*மண் விவசாயிகளின் மூலதனம் மண்வளம் பெற மண்புழு அவசியம்.*

*மழைத் தூறல் மண்ணில் விழும்போது ஒருவித வாடை வரும். அதை மண்வாசனை என்போம். ,*

*உண்மையில் அது மண்வாடையல்ல. மண்ணுக்கு வாசனை கிடையாது. பயிர்வளர்க்க, உயிர்வளர்க்க வேண்டும் என்று சொல்வார்கள். ஆம்! மண்ணில் கோடிக்கணக்கான நுண்ணுயிர்கள் உள்ளன. அதன் வாடையைத்தான் மண்வாசனை என்று நாம் சொல்கிறோம்.*

# *4. இயற்கையின் இரகசியத்தை எப்போது அறிவோம்?*

***நாட்டு மாட்டுச் சாணம்***

*மண்ணில் மண்புழு வளரவும் நுண்ணுயிர்கள் பெருகவும் சாணம் பயன்படுகிறது.*

*நாட்டுமாட்டுச் சாணம் என்றால் மண்புழுவுக்குக் கொண்டாட்டம். சாணத்தோடு நாட்டு சர்க்கரை சேர்ந்தால் இரட்டிப்புச் சந்தோஷம்.*

*சாணம், சர்க்கரை, கோமியம் கலந்து ஒருநாள் ஊறல் போட்டு வயலில் தெளித்தால் நுண்ணுயிர்கள் பெருகும். இந்தக் கரைசல்தான் அமுதக் கரைசல்.*

***மூடாக்கு***

*காய்ந்த மண்ணில் மண்புழு வசிக்க முடியாது. ஈரப்பதம் நிறைந்த மண்ணில் மண்புழு வசிக்கும். நிலத்தை ஈரப்பதமாக வைத்திருக்க மூடாக்குப் போடுதல் ஒரு வழி.*

*அறுவடை செய்த நிலத்தை இலைதழைகளைப் போட்டும் வைக்கோலைக் கொண்டும் மூடாக்கு போட வேண்டும். இப்படி நிலத்தைச் சூரிய ஒளிபடாமல் மூடி வைப்பதால் நிலத்தின் ஈரப்பதம் காப்பாற்றப்படும்.*

*ஈரப்பதம் இருக்கும் நிலையில் மண்புழு மேலும் கீழும் பக்க வாட்டிலும் நிலத்தைத் துளைபோட்டுக் கொண்டே இருக்கும்.*

*இதனால் மண்ணில் காற்றோட்டம் கிடைக்கும் மழைநீர் வழிந்தோடாமல் மண்ணில் சேகரிக்கப்படும்.*

*அதோடு மூடாக்கு போடும் இலை தழை, வைக்கோல் மக்கி நுண்கிருமிகளுக்கும் மண்புழுவிற்கும் உணவாகிவிடும்.*

*பயிர் வளர, உயிர் வளர வேண்டும் என்று சொன்னதன் பொருள்புரிகிறதா?*

*காய்ந்த கட்டைகளைக் கரையான்கள் அரித்துக் கொடுக்கும் மக்கிய கழிவுகள் மண்புழு உணவாக உட்கொண்டு மண்புழு உரமாக வெளிப்படும்.*

*இப்படி இயற்கையோடு நமக்கு உறுதுணையாக இருக்கும்போது நாம ஏன் சிரமப்படவேண்டும்.?*

***இயற்கை உழவு***

*நிலத்தில் மண்புழுக்கள் பல்கிப் பெருகிவிட்டால், நிலத்தை இயற்கையாக உழுது கொடுக்கும்! மண்புழுக்களில் மேல் மட்டப்புழு இடைமட்டப் புழு' அடிமட்டப்புழு எனப் பலவகை உண்டு.*

*அவை தொடர் ஓட்டம்போல் மண்ணில் சுரங்கங்களை அமைத்து ஒன்றை ஒன்று இணைத்துக் கொண்டு நிலத்தின் மேல்வரும் மழைநீர் இருபதடி ஆழம் வரை ஊடுவிச் செல்ல வழிவகை செய்யப்படுகிறது.*

*இதன்மூலம் நிலம் இயற்கையாக உழவு செய்யப்படுகிறது. இதனால்தான் மண்புழுவை உழவனின் நண்பன் என்று சொன்னார்கள்.*

*இயற்கைக்கு மாறாக நாம் செயல்படும்போது தழை உரமாகச் சொல்லப்படும் யூரியா மண்ணில் கரைந்து, நிலத்தடி நீரையும் கெடுக்கிறது. அது வெடியம் உப்பு மூலம் தயாரிக்கப் படுவதால் மண்புழு*

*மற்றும் நுண்ணுயிர்களை அழித்துவிடுகிறது. யூரியா போட்டவுடன் அதிக நீர்ப் பாய்ச்சாவிட்டால் பயிர் கருகிவிடும். இதைக் கவனத்தில் கொள்ள வேண்டும்.*

***பழம் நழுவி பாலில் விழுந்தது***

*விவசாயத்தில் செலவைக் குறைக்க நாம் முயன்றாலே போதும் வரவு தானாக வரும்!*

*இன்று இயற்கையை நம்பி விவசாயத்தில் ஈடுபடும் உழவரைப் பார்க்க முடியவில்லை.*

*இன்சூரன்சை நம்பியே விவசாயம் செய்யப்படுகிறது. வயலில் கால் வைப்பதறகு முன்பே வங்கியில் இன்சூரன்ஸ் செய்யப்படுகிறது.*

*விவசாயி செய்யும் முதல் செலவே இன்சூரன்ஸ்தான். விதைப்பதற்கு முன்பே நிவாரண கணக்கை நினைவில் பதிய வைக்கிறான்.*

*தேவைக்கதிகமாக விதைத்துவிட்டு நாற்று பறிக்க கூலி கொடுப்பதற்குள் விழிபிதுங்கி விடுகிறது. நடவு ஆள் வருவதற்குள் நாற்றுக்கு வயதாகிவிடுகிறது.*

*நட்டபயிர் சற்று இளைப்பாருவதற்குள் இரசாயன மூட்டை வயலுக்கு வந்து விடுகிறது.*

*வேருக்குக் காற்றோட்டம் கிடைக்காதபடி நீர் தேக்கப் படுகிறது.*

*செயற்கை உரம் போட்டதும் பயிரில் பச்சையம் கூடுகிறது. பச்சையம் பூச்சிகளுக்கு வரவேற்பு கொடுக்கும் பச்சையத்தைச் சுரண்டித்தின்னும் சைவ பூச்சிகள் விருந்துண்ண வந்து விடுகின்றன. பூச்சியைக் கண்டதும், உழவன் பூச்சிக்கொல்லியைத் தேடி ஒடுகிறான்.*

*பூச்சிக்கொல்லி மருந்து தெளித்ததும் பயிருக்கு நன்மை செய்யும் பூச்சிகள் இறந்து இயற்கையின் நமநிலை பாதிக்கப்பட்டு மீண்டும் மீண்டும் சைவப்பூச்சிகள் பல்கிப் பெருகி விடுகின்றன. மீண்டும் பூச்சிக்கொல்லி இராசாயன உரம் என்று உழவன்*

*தேவையில்லாமல் செலவு செய்து கடனாளியாகி விடுகிறான்.*

***இயற்கையின் இரகசியம்***

*பொதுவாகப் பயிர்கள் வெயிலைப் பயன்படுத்தித் தேவையான சக்தியை எடுக்கும் திறனை இயற்கையாகவே பெற்றுள்ளது.*

*செடிகள் மண்ணில் இருந்து எடுக்கும் சத்து 6% மட்டுமே. ஒரு பயிரின் ஈரப்பதம் 70% காற்றி அளவு. 24% ஆக 70+24=94%. காற்றும் நீரும் பயிருக்குப் பலன் தருகிறது மண்ணில் இருந்து எடுக்கும் தாது 6% எனும்போது நாம் தேவைக்கதிகமாகக் கொட்டிக் கொண்டிருக்கிறோம்.*

*இன்னும் விரிவாகச் சொல்ல வேண்டுமானால் பயிர் பச்சையாக இருக்கும்போது 70% நீர்ச்சத்து இருக்கிறது. பயிர் முற்றிக் காய்ந்தவுடன் நீர் ஆவியாகி விடுகிறது. 24% காற்றோடு கூடிய வைக்கோல் (சருகு) மிஞ்சுகிறது. அப்போது காற்று அதில் இருக்கிறது. வைக்கோலை (சருகை)ப் போட்டுக் கொளுத்தி விட்டால் கடைசியில் மிஞ்சுவது சிறிது சாம்பல். பொளுத்தியவுடன் காற்று வெளியேறிவிடுகிறது. மண்ணில் இருந்து பயிர் எடுக் கும் 6% சத்து மட்டும் சாம்பலாக மண்ணிலே சேர்ந்து விடுகிறது. இந்த இயற்கையின் சூட்சுமத்தை நாம் புரிந்து கொண்டால் போதும். தேவையற்ற செயவைக் குறைத்து விடலாம்.*

*செடிக்கு மண் ஒரு பிடிமானம்தான். மண்ணே செடிக்கு ஆதாரமல்ல. மாடி வீடுகளில் சிமெண்ட் காரைகளுக்கு இடையே செடி கொடி மரம் வளர்கிறதே, அதற்கு யார் உரம் போட்டது? யார் தண்ணீர் ஊற்றுகிறார்? காற்றில் உள்ள ஈரப்பதத்தை எடுத்துக்கொண்டு அந்தச் செடிகொடிகள் வளர்கின்றன. ஒற்றை நாட்டு வித்தை*

*பழம் நழுவி பாலில் விழுந்தாற்பேல் இன்று ஒற்றை நாட்டு நடவு முறை வந்துவிட்டது. –*

*நெருக்கி நட்டுப் நெல்லைப்பார். கலக்க நட்டு கதிரைப்பார்.*

*இந்தப் பழமொழி மூலம் நாம் அறிவது என்ன?*

*நெருக்கி நட்டால் நெல்லை மட்டும்தான் பார்க்கலாம். கலக்க நட்டால்தான். மகசூலைப் பார்க்கமுடியும்.*

*இன்று ஒரு விதை நெல் அதிகபட்சம் 120 தூர் வெடிக்கும் என்று கண்டறிந்துள்ளார்கள்.*

*120 தூர்களில் கால் கிலோ நெல்மணிகள் கிடைக்கும். கால் கிலோ விதை நெல்லைக் கொண்டு 2 அடிக்கு ஒரு நாற்றுவீதம் நட்டு ஒரு ஏக்கருக்கு நடவு செய்யலாம் என் கண்டறிந்துள்ளார்கள்.*

*ஆக ஒரு ஏக்கருக்கு கால் கிலோ விதை நெல் போதுமானது. ஒரு அடிக்கு ஒரு அடி இடைவெளிவிட்டு ஒற்றை நாற்று நடவு முறையில் நடவு நடும்போது, 1 கிலோ 600 கிராம் விதைநெல் போதுமனாது. .*

*இந்த நிலையை நாம் ஏற்றுக்கொள்வதற்குத் தன்னம்பிக்கை வேண்டும்.*

*விதை அளவு குறைவதால் மகசூல் குறையாது. ஒரு விதை நெல்லில் 120 தூர்கள் வெடிப்பது எப்படிச் சாத்தியமாகிறது.*

**குட்டி போடும் நாற்று**

*அதாவது ஒரு தாய் நாற்று, பத்தாவது நாள் ஒரு குட்டி போடுகிறது. அடுத்து அந்தத் தாய் ஐந்து நாட்களுக்கு ஒருமுறை குட்டி போடுகிறது. அதேபோல் அந்தக் குட்டி நாற்று தனது பத்தாவது நாளில் ஒரு குட்டி போடுகிறது. அதன்பிறகு அந்தக் குட்டி நாற்றும் ஐந்து நாட்களுக்கு ஒரு முறை குட்டி போடுகிறது. இப்படியே கணக்கிட்டுப் பார்த்தால் நமக்கு மண்டை காய்ந்து விடும். இஃது இயற்கையின் அதிசயம்.*

*இப்படிக் கிளைக்கும் தூர்களின் எண்ணிக்கை 120 வரை வந்துள்ளதாகக் கண்டறிந்துள்ளனர். என்அனுபவத்தில் குறைந்தது ஐந்துதூர்கள் அதிகபட்சம் எழுபதுதூர்கள் வரை பார்த்துவிட்டேன். அதேபோல் கதிருக்கு 300 நெல்மணிகள் இருந்தால் முழு விளைச்சல் என்று சொல்வார்கள்.*

*நான் எனது வயலில் குறுவையில் 110 நெல்மணி களை எண்ணிப் பார்த்திருக்கிறேன்.*

*நீண்டகாலப் பயிரில் குறைந்தது 150 நெல்மணிகள் அதிக பட்சமாக 240 நெல்மணிகள் வரை எண்ணிப் பார்த்திருக்கிறேன்.*

*ஆக ஒரு ஏக்கர் நடவு செய்ய 1.600 விதைநெல் போதும் என்ற நிலையில், நாம் 40 கிலோ விதைநெல் செலவு செய்கிறோம்.*

***காய்ச்சலும் பாய்ச்சலும்***

*விதைநெல் அளவைக் குறைப்பதால் நமக்கு 38 கிலோ விதைநெல் செலவு குறைந்துவிடுகிறது. –*

*அடுத்து நாற்று பறிக்க ஆகும் கூலி மிச்சப்படுகிறது. ஒற்றை நாற்று நடவு முறையில் பெண்களே நாற்றைப் பறித்துக் கொள்வார்கள்.*

*மேலும் 40 கிலோ விதை நெல்லில் கிடைக்கும் ம்கசூலைவிட 1.6 கிலோ விதைநெல் மூலம் கிடைக்கும் மகசூல் அதிகமாகும் வாய்ப்பு உள்ளது.*

*மேலும் இடைவெளி விட்டு நடுவதால் பயிருக்கு நல்ல காற்றோட்டம் கிடைக்கிறது. நீர் தேவை பல மடங்கு குறைகிறது. காய்ச்சலும் பாய்ச்சலும் என்ற நிலையில் களை அதிகமாகவிடும் என்ற பயம் உள்ளது.*

*ஒரு முறைக்கு இருமுறைகளை எடுப்பதால் பயிர் வளர்ச்சி கூடும். மகசூல் அதிகமாகும். களை எடுக்கும் செலவு அதிக மகசூல் மூலம் கிடைக்கும் வாய்ப்பு உள்ளது.*

*மானாவாரி நிலங்களில் காவாளைப் பூண்டு, உளுந்து போன்ற ஊடுபயிர்கள் மூலம் களையைக் கட்டுப்படுத்த லாம் என்றும் கண்ட்றிந்துள்ளனர். .*

**இளம் நாற்றுக்கு அரிசியே உணவு**

*ஆட்கள் பற்றாக்குறை என்று ஒரு காரணம் சொல்லப்படுகிறது. அதையும் சமாளிக்க சில வழிமுறைகள் உள்ளன.*

*இன்றைய நிலையில் 30 நாட்களுக்கு மேற்பட்ட வயதுடைய நாற்றைப் பறித்து நடும் முறை வழக்கத்தில் உள்ளது. எனது அனுபவத்தில் விதைவிட்ட பத்தாம் நாள் நாற்றாகவே பறித்து நடவு செய்திருக்கிறேன்.*

*ஓர் இளம் நாற்றானது எட்டு நாள் வரை அரிசியில் உள்ள தாய்வழி உணவை எடுத்துக்கொண்டு வளர்கிறது. அதன்பிறகே அது மண்ணில் உணவைத் தேடும்.*

*அந்த நிலையில் அந்த இளம் நாற்றை எடுத்து நடவு செய்யும்போது அது உடனடியாக வளரத் தொடங்கிவிடும்.*

*நாற்றை ஆழமாக நட வேண்டிய அவசியமும் இல்லை. குறிப்பிட்ட இடைவெளியில் சேற்றில் வைத்தாலே போதும். அது சாய்ந்து கிடந்தால்கூட மறுநாள் நிமிர்ந்து நிற்கும். வேர் மண்ணில் செல்லும்போது பயிர் தானாகவே நிமிர்ந்து விடுகிறது. இயற்கையின் இன்னோர் அதிசயம் இது.*

*இயற்கையைக் கூர்ந்து கவனித்தால், பல அதிசயங் களை நாம் அறியமுடியும்.*

*வாழைக்கன்றைச் சீவிவிட்டால் பத்து நிமிடத்தில் அதன் குருத்து. துருத்திக்கொண்டு மேலே வந்து விடுகிறது.*

*உயர்ந்த மரத்திலிருந்து மனிதன் குதித்தால் கால் கை முறியும்.*

*பூனை குடித்தால் புத்துணர்ச்சியோடு ஒடும். இப்படி எண்ணற்ற காட்சிகள் இயற்கையை ரசித்தால் நமக்குக் கிடைக்கும். -.*

***பள்ளியில் இதுக்குப் போயி படிக்கணுமா?***

*விவசாயம் இயற்கை விவசாயம் – இந்த*
*விவரம் தெரிஞ்சு உழவு செஞ்சா ஆதாயம்*
*பலனாகும் நல்ல பலனாகும் – இதுக்கு*
*இயற்கை எரு போடுவது பலனாகும்*
*பயிர் செய்ய மண்வளமே இருக்குங்க – அதுல*
*பாரம்பரிய விதைகளையே விதைச்சிடுங்க. (விவசாயம்)*

*செயற்கை உரத்தாலே செயலிழந்த வயலெல்லாம்*
*இயற்கை உரம்போட்டா ஏரு பூட்ட அழைக்குமே*
*கட்டுமனையாக்கும் நிலை விட்டிடனும் – நிலத்தை*
*தரிசில்லாமச் சாகுபடி செய்திடனும்*
*இந்தக்கால,விவசாயி வாரிசையே பழக்கலே*
*சொந்தமா நிலமிருந்தும் சேற்றில் இறங்கி நடக்கலே*
*சந்ததிக்குச் சத்தில்லாத உணவு தந்தோம் – நமக்கும்*
*சரஞ்சரமாய் நோய்கள் வரவழி வகுத்தோம் (விவசாயம்)*

*பள்ளியிலே இதுக்குப்போயி படிக்கணுமா? – இல்லே*
*பயிர்வளரும் நிலத்தில் இறங்கி நடக்கணுமா?*
*ஆட்டுஎரு அந்த வருஷம் அறியணுமா? – அட*
*மாட்டு எரு மறுவருஷம்புரியணுமே. (விவசாயம்)*

*பெண்ணோட குணத்தாலே குடும்பம் நல்லா நடக்குது*
*மண்புழுவோட செயலாலே இயற்கை உழவும் சிறக்குது*
*தக்கப்பூண்டு விதைச்சாலே முளைச்சிடுங்க – அத*
*மடிச்சடிச்சா அடிஉரமா ஆயிடுங்க (விவசாயம்)*

*காற்றாலும் நீராலும் ஊட்டச்சத்து கிடைக்குது*
*பசுந்தாள் உரம் போட்டா தழைச்சத்தும் இருக்குது*
*மணிச்சத்தும் சாம்பல்சத்தும் அதுகூட இருக்குது – தம்பி*
*இயற்கையாக நிலம் இங்கே பயிர் வளர்க்க உதவுது (விவசாயம்)*

***அந்தஸ்தின் அடையாளம் வைக்கோல் போர்***

*அடி காட்டுல*
*நடு மாட்டுல*
*நுனி வீட்டுல*

*எல்லாருக்கும் தெரிந்த பழமொழிதான் இது. ஒவ்வொரு விவசாயியும் மூன்று வகையினருக்கு உணவளிக்க வேண்டிய கடமை உள்ளது. இதைத்தான் இந்தப் பழமொழி சுட்டிக் காட்டுகிறது.*

*வளர்ந்ததும் அடிக்கட்டை நிலத்தில் இருக்கும் நுண்ணுயிர்களுக்கு மண்புழு கறையான் போன்றவற்றிற்கு உணவாக விட்டு விடுகிறோம்.*

*நடுப்பகுதி உழவுக்குக் கைகொடுக்கும் மாடுகளுக்கு உணவாகப் பயன்படுகிறது.*

*நுனியில் உள்ள தானியம் வீடு வந்து நமக்கு உணவாகிறது.*

*அந்தப் பழமொழி நமக்கு இதைத்தான் உணர்த்துகிறது.*

*அன்று அந்தஸ்தின் அடையாளமாக வீட்டின்முன்குவிக்கப் பட்ட வைக்கோல் போர் விளங்கிற்று. வைக்கோல் போர் இல்லாத வீட்டிற்குப் பெண் கொடுக்க மறுத்த காலம் அது.*

*மீண்டும் அந்த வசந்த காலம் வரும். அதற்கு எழுபது சதவிகிதம் வைக்கோல் தரும் நமது பாரம்பரிய நெல் ரகங்கள் நமக்கு வேண்டும்.*

**இயற்கை எரு**

*வந்திருக்கும் எல்லாருக்கும்*
*வணக்கம் சொன்னா நல்லாருக்கும்*
*வயலும் வாழ்வும் நடத்தப் போறோம்*
*கேட்க வாங்களேன்*

*வாழ வச்ச வயலு இங்கே*
*வாடிப்போயி கிடக்குதுங்க*
*காரணந்தான் செயற்கை*
*உரம் போட்டதாலே*

*டிராக்டர் ஒட்டி உழுது வச்சோம்*
*எஞ்சின் போட்டு நீர் இறைச்சோம்*
*எதுவும் இங்கே பலன் தராம*
*போனதாலே – இத*

*மாத்தணும் மாத்தனும் மாத்தனுங்க ...*
*மாறவே இல்லேன்னா நோய்தானுங்க (மாத்தனும்)*

*பழைய கால விதை எல்லாம்*
*மறந்திட்டோம் – நம்ம*
*உழைப்பையெல்லாம் வீணாக்கி*
*இருந்திட்டோம்*

*வாடன் சம்பா குடவாழை*
*மாப்பிள்ளைச் சம்பா நெல்விதை*
*தேடிப் பிடிச்சு நாம இங்கே*
*விதைக்கனும் – அதுல*
*இயற்கை உரம் போடணும்*
*எல்லாருக்கும் தெரியனும்*

*ரசாயன உரத்தை நாம மறக்கணும் – இந்த*
*ரசாயன உரத்த தாம ஒதுக்கனும் (மாத்தனும்)*

*மண்ணுவளத்தை நாம*
*இங்கே காக்கணும் – இதுல*
*மரபணு விதைகளையே நீக்கனும்*
*இனிமேல இயற்கை எரு*
*போடலன்னா எதிர்காலச்*
*சந்ததியை நோய்கள் வந்து தாக்குமே*
*இது எல்லாருக்கும் புரியனும்*
*இயற்கை வழியில் மாற்றணும்*
*கண்ணுபோல வயலை*

*நாம காக்கனும் – தம்ம*
*கண்ணுபோல வயலை*
*நாம காக்கனும் (மாத்தனும்)*

***மகாத்மாவின் தீர்க்க தரிசனம்***

*இயந்திரமயமாக்கல் இந்தியாவில் புகுந்தபோது மகாத்மா காந்திக்கு அதில் உடன்பாடில்லை. ஜவுளி ஆலைகள் வந்தபோது நெசவாளர்கள் வாழ்வை அது பாதிக்கும் என்று அவர் நன்றாக உணர்ந்தார்.*

*அதனால்தான் அவர் கடைசிவரை கைராட்டையைப் பயன்படுத்தினார் .*

*விவசாய வேலைக்கு டிராக்டர் இறக்குமதி செய்யப் பட்டபோது அதை இந்தியாவில் விற்பனைக்குக் கொண்டு வந்த ஒரு தொழிலதிபர் டிராக்டர் வாங்க விருப்பமில்லாத விவசாயிகளை டிராக்டர் வாங்க வைக்கும் முயற்சியில் ஈடுபட்டபோது ஒரு வாசகத்தை உருவாக்கினார் அந்த வாசகம் இதுதான்.*

*இயந்திர மயமாக்கு இல்லையேல் அழிந்துபோ! இந்த வாசகத்தை மகாத்மா காந்தி தன் வாய்மொழியால் சொல்லிவிட்டால் விவசாயிகள் டிராக்டர் வாங்க முன்வருவார்கள் என்று நம்பினார்.*

*மகாத்மா காந்தியைச் சந்தித்து இந்த வாசகத்தை நீங்கள் நாட்டு மக்களிடம் சொல்ல வேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.*

*''வாசகம் என்ன? அண்ணல் காந்தி கேட்டார்.*

*"இயந்திர மயமாக்குஇல்லையேல் அழிந்துபோ' ''இதில் ஒரு சின்ன திருத்தம்' என்றார் காந்தி. ''சொல்லுங்கள்'' என்றார் தொழிலதிபர். மகாத்மா காந்தியடிகள்*

*(இயந்திரமயமாக்கி அழிந்துபோ')*

*என்றாராம்*

***டிராக்டர் சாணி போடுமா?***

*நவீன வேளாண்மை மூலம் நமது கலாச்சாரம் சீரழிக்கப் பட்டது மக்கள் தொகை மிகுந்த நாட்டில் கனமான டிராக்டர் களை அறிமுகப்படுத்தி, மக்களை வேலையற்றவர்களாக்கி, புகை கக்கியபடி மண்ணைக் கருணையின்றிப் புரட்டிப் போடுவதை இன்னும் சகித்துக் கொண்டிருக்கிறோம்.*

கோடிக்கணக்கான கூலித் தொழிலாளர்களை டிராக்டர்களும் கதிரடிக்கும் எந்திரங்களும் நடவு *மிஷின்களும் சத்தமின்றிச் சாகடிப்பத அறிவியல் வளர்ச்சி என்று ஏற்றுக்கொள்ளும் அதிமேதைகளாகிவிட்டோம் நாம் முதன்முதலாக டிராக்டர்களை நம் நாட்டில் அறிமுகம் செய்தபோது, பத்துமாடுகளின் வேலையை ஒரு டிராக்டர் செய்துவிடும் என்று காந்தியிடம் சொல்லப் பட்டதாம்.*

*அதற்குக் காந்தி,*

*''பத்து மாடுகளின் வேலையைச் செய்யும் டிராக்டர், பத்து மாடுகளின் சாணியைப் போடுமா?*

*என்று திருப்பிக் கேட்டாராம். என்ன தீர்க்கதரிசனமான கேள்வி. இது இப்படிக் கேட்ட மகாத்மாவை பிற்போக்காளர் என்று கேலி செய்தார்களாம்.*

*மாட்டின் சாணத்திற்குக் கூட மதிப்பு கொடுத்த மகாத்மா எங்கே?*

*பன்னாட்டு நிறுவனங்களுக்கு வெண்சாமரம் வீசும் இன்றைய மனிதர்கள் எங்கே?*

***பஞ்சகவ்யா***

*மாட்டின் மூலம் பெறும் ஒவ்வொரு பொருளும் பயன்மிக்கது. சாணம், சிறுநீர், பால், தயிர், நெய் எனும் ஐந்தின் கலவையான பஞ்சகவ்யம் அல்லவா இன்று பயிர் வளர்ச்சி ஊக்கியாகக் கண்டறியப்பட்டுள்ளது.*

*குலத்தொழில் செய்யாதவனுக்குத் தலைக்குமேல் பஞ்சம் என்று சொல்வார்கள்.*

*கால்நடைகளை இழந்து விவசாயத்தை மறந்து கையடக்க கருவிக்குள் உலகைக் கொண்டு வந்துவிட்டதாக கொட்டமடிக்கும் விஞ்ஞானத்தைப் போற்றும் வரை மனித வாழ்வில் அமைதிக்கு வழியே இல்லை.*

*''சுழன்றும் ஏர்பின்னது உலகம் அதனால்*
*உழன்றும் உழவே தலை.'' என்ற திருவள்ளுவர் வாக்கு வெல்லும் காலம் விரைவில் மலரும்.*

***பாட்டி சொன்ன கதை***

*சொன்னபடி கேட்டா – முன்னோர்*
*சொன்னபடி கேட்டா*
*விவசாயிங்க நல்ல விளைச்சலை*
*அள்ளிக் குவிப்பாங்க!*

*பொன்னான வயலிலே*
*மண்ணோட வளத்தையே*
*கண்ணாகக் காக்கனுங்க*
*இப்போது இயற்கை விவசாயம்*

*செய்து தாம வாழனும்*
*நல்ல விளைச்சலை*
*தத்த விதைகளைத்*
*தேடிப்பிடிக்கனும் (சொன்னபடி)*

*பிச்சாரி நெல்லுதான்*
*கச்சிதமா விளைஞ்சுது*
*வாழைப்பூ குடவாழையும் இருந்திச்சு*
*பன்னாட்டு நிறுவனத்தால்*

*எல்லாம் மறைஞ்சு போச்சுது*
*இரசாயன உரங்களாலே*
*உணவும் விஷமாச்சுது*
*சொன்னபடி கேட்டா – முன்னோர்*

*சொன்னபடி கேட்டா*
*நோயில்லா வாழ்வு – இங்கே*
*தமக்குக் கிடைக்குமே*

*கார் தெல்லும் சம்பாவும்*
*காணாமல் போக்கது*
*காரணம்*

*இரசாயன உரங்கள்தான்*
*இரசாயன உரத்திலே*
*ரசமில்லாத விதையிலே*
*விளைஞ்ச பயிரு*
*எந்தப் பலனும்*
*நமக்குத் தராது (சொன்னபடி)*

*பாட்டன் பூட்டங்க காலத்திலே*
*பாட்டி சொன்ன கதை எல்லாம்*
*வேட்டு வச்சி நாமதான் அழிச்சிட்டோம்*
*தொலைக்காட்சிப் பெட்டியினால்*
*பண்பாட்டை மறந்துட்டோம்*
*கம்ப்யூட்டர் வந்த பின்னே*
*கையெழுத்தும் மறக்குறோம் (சொன்னபடி)*

**குரங்கு கையில் கிடைத்த பூமாலை**

*நான் பெற்ற பயிற்சி அதன்மூலம் நான் கண்ட காட்சி படித்தது, பார்த்தது, கேட்டது, நேரடி அனுபவம் எல்லா வற்றையும் இதன்மூலம் உங்களிடம் பகிர்ந்து கொள்ள விரும்பி, இந்தத் தொகுப்பு என்னால் எழுதப்படுகிறது. இதில் என் கற்பனை எதையும் நான் புகுத்தவில்லை. எனது எழுத்தாற்றலும் நடிப்பாற்றலும் இயற்கைவழி வேளாண்மை இம்மண்ணில் பரவ பயன்படவேண்டும் என்ற நோக்கத்தோடு எழுதிவருகிறேன். இனி இயற்கை வழி வேளாண்மை பற்றிய ஒரு சிறிய நாடகக் காட்சிக்குள் சென்று வருவோம்.*

# *5. விதைப்போம் அறுப்போம்*

*(நாடகம்)*

***காட்சி – 1***

*இடம் : மேடை*

*பாத்திரம் : காந்தாரி. அமைப்பு (காந்தாரி ஆடிப்பாடுகிறாள்.)*

*சான்றோரே வாருங்களேன்*
*சபை நிறைய கூடுங்களேன்*
*சிவப்பு சம்பா கலைக்கூடம்*
*நடிக்கும் கதையைப் பாருங்களேன்*

*விவசாயத் தோழர்களே*
*விரைந்து வாருங்கள்*
*இயற்கை விவசாயம்*
*செய்து பாருங்கள்*

*முன்னோர்கள் செய்து வந்த*
*தொழில்நுட்பம் தொலைத்திடாமல்*
*பாதுகாத்து வாழ வழி தேடுங்கள்– நம்*
*சந்ததிக்கு நலவாழ்வைத் தாருங்கள்– நம்*
*சந்ததிக்கு நல்ல உணவைத் தாருங்கள்*
*நாம நல்லா இருக்கோணும் – இந்த*
*நாடு முன்னேற – இந்த*
*நாட்டிலுள்ள இயற்கை வளம்*
*நாமும் கொண்டாட*
*விவசாயத் தோழர்களே*
*விரைந்து வாருங்கள்*
*இயற்கை விவசாயம்*
*செய்வோம் வாருங்கள்*

.

*–திரை–*

***காட்சி– 2***

*இடம் :வீடு*

*பாத்திரம் : கிறுக்கு சண்முகம், செம்பருத்தி, குந்தவை*

*அமைப்பு (செம்பருத்தி, புருஷனை எதிர்பார்த்து.)*

*செம்பருத்தி : சேசே எங்க இந்த மனுசன இன்னும் காணோம். பித்தள தோண்டிய கொடுத்துத் தண்ணி அடிச்சிட்டு வாய்யான்னு சொன்னேன். காத்தால போச மனுசன்இன்னும் வர்றாரு எப்பப் பாரு குடிகுடின்னு குடிச்சிப்புட்டு மண்ணுல விழுந்து கெடக்குறதுதான் வேல. ஏம்பா தம்பிகளா ஏ புருஷன் கிறுக்கு சண்முகத்த எங்கயாவது: பார்த்தீங்களா? வரட்டும் இன்னிக்கு இந்த மனுசன்.*

*(உள்ளே போகிறாள்)*

*கிறுக்கு சண்முகம் : (வந்து) ஹை ஹாய்.*

*செம் : யாரு வூட்டுக்குள்ள மாடு ஒட்றது.*

*கிறு : ஆங், உன் புருஷன் கிறுக்கு சண்முகம்.*

*செம் : வாங்க! வாங்க! காத்தால போன மனுச நீங்க? இப்பதா*

*வர்றிங்க! எங்கபித்தளதோண்டி? இது என்னடி கேள்வி? இன்னிக்கு நமக்குக் கல்யாணநாளு. நாமசந்தோஷமா இருக்கணுமேன்னு கோட்ரு வாங்ககாசு கேட்டேன். நீ என்னசெஞ்சதோண்டியகொடுத்து இதவச்சி தண்ணி அடிச்சிட்டு வாங்கன்னு சொன்ன, சொன்னியா இல்லியா?*

*செம்: ஆமா. சொன்னேன் அதுக்கென்ன இப்போ?*

*கிறு : நீ சொன்னது மாதிரிதான் செஞ்சேன். நேரா போயி*

*கருவகாட்ல சாராயம் விக்கிற கரடிக்கு நேரா தோண்டிய*

*வச்ச அவன் தோண்டிய பாத்துட்டு சரக்க ஊத்திக் கொடுத்தான். ஒரு ரவுண்டு, ரெண்டு ரவுண்டுன்னு மாறி மாறிக் குடிச்சு நேரமாச்சு.*

*செம் : அடப்பாவி மனுசா! பித்தள தோண்டிய கொடுத்து கோயி லாண்ட இருக்குற அடி பைப்புல வச்சி தண்ணி அடிச்சிட்டு வாய்யான்னு சொன்னேன். இந்த மாதிரி பண்ணிட்டு வந்து நிக்கிறீங்களே இது நல்லாயிருக்கா?*

*கிறு : ஏய் இப்பச் சொன்னது மாதிரி வார்த்தைகள ஒழுங்கா சொல்லி இருக்கணும். அரைகுறையா சொன்னா இப்படித் தான்!*

*(தள்ளாடிச் சாய்கிறான்.)*

*குந்தவை : (வருகிறாள்) அடியே செம்பருத்தி நாளைக்கு இயற்கை விவசாய உழவர் இயக்கக் கூட்டம் நடக்கு தாம். உன் புருஷனையும் அழைச்சிக்கிட்டு வந்துடு.*

*செம் : ஏக்கா அங்க போனா எதுனா கெடைக்குமா?*

*குந்: ஆங்கெடைக்குமுடி போக்கத்தவளே! நல்ல விஷயத்தைக் கேக்க நாமதா முன்ன நிக்கணும். எங்கப்*

*போனாலும் இலவசம் கிடைக்குமான்னு பாக்குறதுலே நில்லுங்கடி. நாடும் உருப்படும் நாமளும் உருப்படலாம்.*

*(போகிறாள்)*

***காட்சி – 3***

*இடம் ; கூட்ட அரங்கம்.*

*பாத்திரம் : கிறுக்கு சண்முகம், செம்பருத்தி.*

*அமைப்பு : (வேலுமணி மேடையில் பேசிக் கொண்டிருக்க, கிறுக்கு சண்முகம் மேடைக்கு வர செம்பருத்தி அவனை இழுத்துப் பிடிக்க.)*

*வேலுமணி : மாடுகட்டி போரடித்தால் மாளாது செந்நெல் என்று யானை கட்டிப் போரடித்த காலமும் உண்டு. சோழ நாடு சோறுடைத்து என்று பெருமை பெற்ற வரலாறும் உண்டு! இன்றோ இந்த மண்ணில் விவசாயிகள் கண்ணிர் விடும் நிலை இதற்கெல்லாம் காரணம்.*

*கிறு (எழுந்து) வறட்சி நிவாரணம் கொடுக்கல. வெள்ள நிவாரணம் கொடுக்கல. விவசாயக் கடன் தள்ளுபடி செய்யல. அதா கண்ணிர் விடுறோம்.*

*(செம்பருத்தி வந்து அவனை இழுத்துச் செல்ல).*

*வேலு : உண்மைநிலை அறியாமல் நிவாரணத்தை நினைத்துப் பாரம்பரிய விவசாயத்தை மறந்தோம் பசுமைப் புரட்சி என்ற பெயரால் பன்னாட்டு நிறுவனங்கள் நமது பாரம்பரிய நெல் ரகங்களை மறைத்து மரபணு விதைகளைக் கொடுத்து நமது இயற்கைச் சூழலைக் கெடுத்து உரம் என்ற பெயரால் வெடிமருந்தை நம்மிடம் விற்று கொள்ளையடித்த தோடு நமது விவசாயத்தை நாசமாக்கிவிட்டனர்.*

*செம்: இதிலிருந்து நாம் மீண்டு வர வழி?*

*வேலு : இருக்கிறது. அதுதான் இயற்கை விவசாயம் கெமிக்கல் உரத்தைத் தவிர்த்து, செலவைக் குறைத்து, இயற்கை உரத்தைப் போட்டு நஞ்சில்லா உணவைப் பெறுவது! பாடல் : உரமெல்லாம் வேண்டாம்*

*கெமிக்கல் உரமெல்லாம் வேண்டாம் விவசாயம் பண்ணி இனிமேல் கடன்பட வேண்டாம்.*

*கிறு : ஆங்! நீங்க சொல்லிட்டுப் பூடுவீங்க. உரம் போடாம*

*எப்படிப் பயிர் வளருமாம்?*

*வேலு : பாடல்*

*மரங்கள் வளருதே பழங்கள் தருகுதே – எந்த உரத்தைப் போட்டு அந்த மரத்தை வளர்க்கிறோம்.*

*செம் : ஏங்க சார் சொல்றது சரிதான். காடுகரையில தானா வளருதே செடி, கொடி, மரம் அதுக்கெல்லாம் யாரு உரம் போட்டா?*

*கிறு : நீ என்ன பேசுற பயிருக்கு ஊட்டச்சத்து வேண்டாமா?*

*வேலு : காற்றும் நீரும்தான் பயிருக்கு ஊட்டச்சத்து. மண்ணில் இருக்குற மண்புழுதான் பயிருக்குத்*

*தேவையான உரத்தை இயற்கையா கொடுக்குது. செம்: நீங்க சொல்றது சரியா புரியலியே t*

*வேலு : தாய்ப்பால் தானா சுரக்குது குழந்தை அத இயல்பா குடிக்குது அது மாதிரிதான் மண். மண்ணுதான் நமக்குத் தாய். அந்த மண் கொடுக்குற கொடையை நாம புண்படுத்தி எடுப்பது சரியாபாடல் : தாய்ப்பால் பெருகுதே இயல்பாய் பருகுதே மண்ணுல மட்டும் கலப்பை போட்டு தோண்டி எடுக்குறோம்.*

*உரமெல்லாம் வேண்டாம் கெமிக்கல் உரமெல்லாம் வேண்டாம் விவசாயம் பண்ணி இனிமேல் கடன்பட வேண்டாம்*

*(எல்லாரும் கைத்தட்டுதல்)*

*செம்: சரிகெமிக்கல் உரம் வேண்டாம்பூச்சிக்கொல்லி மருந்தும் வேண்டாம்! இயற்கை விவசாயத்துல பயிருக்குப் பாதுகாப்புதான் என்ன?*

*வேலு : மதிய உணவுக்குப் பிறகு மறுபடுயம் கூட்டம் உண்டு. அப்ப இன்னும் விவரமெல்லாம் தெரிஞ்சிக்குவோம்.*

*குரல் : பூச்சிக்கொல்லி கெமிக்கல் உரம் போட்டஉணவு சாப்பிட்டதால் விஷமாகிப் போனதடி கண்ணம்மா உடம்பு இனிமேலே தாங்கிடுமா சொல்லம்மா*

*போலியோ சொட்டு மருந்து பொறுப்போடு கொடுத்த பின்னே*

*கெமிக்கல் உணன்வக் கொடுக்குறியே கண்ணம்மா*

*பிள்ளைக்கு விஷத்தை நீயே ஊட்டுறது ஞாயமா!*

*(திரை)*

***காட்சி – 4***

*இடம் : மதகடி,*

*பாத்திரம் : கிறுக்கு சண்முகம், கொடுக்காப்புளி,*

*அமைப்பு : மதகடியில் கொடுக்காப்புளி ஆடிப்பாடுதல்.)*

*கொடுக்காப்புளி உம்பளச் சேரி மாடு கட்டி*

*உள்ளூரு ஏரு பூட்டி வயக்காட்டை உழுதுபோடு கண்ணம்மா இயற்கை விவசாயம் பண்ணப் போறேன் பொன்னம்மா நானும் இயற்கை விவசாயம் பண்ணப் பாறேன் பொன்னம்மா*

*கிறு.சண். குரல் : மாப்ளே!*

*கொடு: ஏ மாமோவ்.*

*கிறு : (வந்து) இன்னா மாப்னே மதகடியில ஆடிப் பாடிக் கிட்டு சந்தோஷமா இருக்கிய.*

*கொடு : நகர வாழ்க்கை நரகமா ஆயிடுச்சாம். நாம வசிக்கிற கிராமப்புறந்தாநல்லதுன்னு பேப்பர்லபடிச்சமாமோவ்,*

*கிறு : ஆமா கிராமத்திலயுந்தான் என்னா வாழுது. பாட்டபூட்டங் காலத்துல எப்படியோ இருந்துட்டு பூட்டாக,*

*கொடு : ஏ. மாமு மணப்பாற மாடு உயரம் இருக்கு. உம்பளச் சேரி மாடு சின்னதாஇருக்க நம்ம ஊருலு இந்த உம்பளச்சேரி மாட்டைக் கட்டி ஏர் உழுறாங்களே ஏன்?*

*கிறு : மாப்ளே நம்ம மண்ணு சேறு சகதியுமா இருக்கும். திடகாத்திரமா கனமா இருக்குற மணப்பாற மாட்ட ஏருல பூட்டி நம்ம வயல்ல எறக்குனா பாரந்தாங்காம சேத்துக்குள்ள அமுங்கி போயிடும் மாப்ளே,*

*கொடு ; அடேங்கப்பா மாடு கட்டி சேரடிக்கிறதுலே இப்படி*

*எல்லாம் சூட்சமம் இருக்கா? கிறு : நம்ம முன்னோர்கள் எல்லாம் சரியாதா செஞ்சி இருக் காங்க மாப்ளே*

*கொடு: சரி அத வுடு மாமு இந்தப் பொட்ட வெயில்ல எங்க பூட்டு வர்றிய.*

*கிறு : என்னமோ இயற்கை விவசாயமா அதுக்கு ஒரு கூட்டம் போட்டு, கூப்புட்டாகளேன்னு போனா, ஒரு டீதண்ணிக்குக் கூட வழியில்ல மாப்ளே. அதா வேண்டா வெறுப்பா வந்துட்டேன்.*

*கொடு : அட் என்ன மாமு! இயற்கை விவசாயம்னா நல்ல விஷயந்தான். அத கேக்காம. கிறு நீ என்ன மாப்ளே பேசுறே, விவசாயம்னா நமக்குத் தெரியாதா?*

*கொடு : ஏ மாமு, வெதைக்கப் போற அறுக்கப் போற இதுல என்ன கஷ்டமிருக்கு?*

*கிறு : அட என்னடா இவன்? வெவரங் கெட்டத்தனமா இருக்கான். சாகுபடின்னா சும்மாவா மனுசன அப்படியே சாகடிச்சிடாது. கடன உடன வாங்கி டிராக்டர வச்சி கோட உழவு உழனும்,*

*கொடு : எதுக்கு டிராக்டரு வீட்ல பழைய கலப்பை சும்மா கெடக்கு, ஓமாமன் வீட்ல உழவு மாடு இருக்கு ஆளும் பேருமாபுடிச்சா உழுது போடலாமுல்ல. 'கிறு உழுது போடலாம்தான். நவீன சாகுபடி வந்தபிறகு உடம்பு வளைய மாட்டேங்குதே மாப்ளே.*

*கொடு : வளைக்கணும் மாமு அப்பதா பொழைக்க முடியும் வயக்காட்ல வேலபார்த்தா கருவ காட்டுக்கு வருவியா நீயிர்*

*கிறு : நீ சொல்றதெல்லாம் சரிதான் மாப்ளே. வேல இல்லாம வெட்டித்தனமான இருக்குறதுனாலதா ஊரு சுத்த தோணுது. ஏகப்பட்ட செலவும் ஆகுது. கடனும் அதிகமாயிடுது.*

*கொடு : மாமு நமக்குத் தெரிஞ்சது விவசாயந்தான். அத செலவில்லாம செய்ய கத்துக்கணும்.*

*கிறு செஞ்சி பாத்தா தெரியும் மாப்ளே. சேரடிச்சு விதைக்கனும் விதை நெல்லு வாங்க காசு வேணும்*

*கொடு : ஏ போன அறுப்புல வெத நெல்லு எடுக்காம என்ன பண்ணின?*

*கிறு : இப்ப உள்ள நெல்லு. விதைக்கலாம் அறுக்கலாம். ஆனா அதுல வெதை எடுக்க முடியாது.*

*கொடு என்ன மாமு சொல்றே!*

*கிறு : ஆமா மாப்ளே மரபணு மாற்று விதையாம் கடையிலதான் வாங்கியாகணும். அப்படி வாங்கி*

*வெதைக்கிற விதைக்கு அடி உரம் கொடுக்கணும். ஆத்துல தண்ணி வந்தாலும் பங்கு தலமாட்டு வாய்க்காலுக்குத் தண்ணி பாயாது. கொஞ்ச நஞ்சம் வர்ற தண்ணியும் முன்னாடி வயக்காரன் தேக்கி வச்சிடுவான். அதுக்கு ராப்பகலா கண்ணு முழிச்சி தண்ணி வைக்கணும்.*

*கொடு : வெட்டுகுத்து கொல கேசு கோர்ட்டு போலிசுன்னு ஏகப்பட்ட ரகளை. தண்ணி பிரச்சனையில வருது. அத தடுக்க முடியாத?*

*கிறு: தடுக்கலாம். கெமிக்கல் உரம் போடாம இருந்தா*

*கொடு : அது எப்படி? கிறு கெமிக்கல் உரம் போட்டாதான் மாப்ளே தண்ணி ஏழு*

*மடங்கு அதிகமா செலவாகுது.*

*கொடு: அப்பற ஏ மாமு அத போட்றிய ? கிறு அத போடலன்னா பயிர் பச்ச குடுக்காது மாப்ளே. பழகி பூட்டுல்ல.*

*கொடு : கெமிக்கல் உரம் போட்டா பூச்சி புடிக்குமே?*

*கிறு : ஆமா பூச்சி புடிக்கதான் செய்து அதுக்கு உடனே பூச்சிக்கொல்லி மருந்து வாங்கித் தெளிக்கணும்.*

*கொடு : இதல்லாம் நெனச்சா பழைய பாட்டுதான் ஞாபகத்துக்கு*

*வருது. கிறு : என்ன பாட்டு மாப்ளே?*

*கொடு : என்ன வளம் இல்லை இந்தத் திருநாட்டில்*

*ஏன் கையை ஏந்த வேண்டும் வெளிநாட்டில்*

*கிறு : ஒழுங்காய்ப் பாடுபடு வயக்காட்டில்*

*உயரும் உன்நிலையோ அயல்நாட்டில் , விவசாயி விவசாயி.*

*கொடு : எல்லா வளமும் இந்த மண்ணுல கெடைக்குது. ஆனா நாம என்ன பண்றோம்? வெதை நெல்லுக்குக் கூட பன்னாட்டு நிறுவனங்கள நம்பி இருக்குறோம். இதுக்கெல் லாம் முற்றுப்புள்ளி வைக்கணும்னா.*

*கிறு : நெலத்தைத் தரிசா போடணும்.*

*கொடு : இல்ல மாமு. இயற்கை விவசாயம் பண்ணணும். ஏ மாமு இயற்கை விவசாயம் நல்லதுன்னு உனக்குத் தெரியுது அப்புறம் ஏஅத செய்ய மாட்டேங்குற*

*கிறு : மாப்ளே! எனக்கு மட்டுமில்ல எல்லாருக்குமே தெரியும். செயற்கை உரம் பூச்சிக்கொல்லி மருந்துனால உணவு நஞ்சா ஆயிடுதுன்னு.*

*கொடு : பிறகு ஏன் மறுபடியும் அதையே செய்றாங்க.*

*கிறு : யாருக்குமே தன்னம்பிக்கை இல்லை மாப்ளே சரி அந்தக் கதை எல்லாம் எதுக்கு மாப்ளே! விவரங்கெட்டத்தனமா இயற்கை விவசாயக் கூட்டத்துக்குப் போயி நொந்து வந்திருக்கேன். சரக்கு இருந்தா கொஞ்சம் ஊத்தச் சொல்லு. கொடு சரக்கு இருக்கு மாமு ஆனா உனக்குக் கிடையாது.*

*கிறு : என்ன மாப்ளே! இப்படிப் பொசுக்குன்னு சொல்லிப் பூட்டிய இந்த வேகாத வெயில்ல ஊரைவிட்டு ஒதுக்குப் புறமா வந்தேன்னா எதுக்கு...*

*கொடு : கடன் கேப்ப.*

*கிறு:அடகுடுத்தா என்ன மாப்ளோமாமா கொடுக்க மாட்டனா? கொடு ஏற்கெனவே கணக்கு எகிறிப்போச்சு மாமு. நானூத்தி அறுபத்தஞ்சு ரூபா நிக்கிது.*

*கிறு : இன்னிக்கு ஊத்துற சரக்க அதோட சேத்துக்க ரவுண்டா வைவி ஐந்நூறு ஆயிடுமில்ல.*

*கொடு : மாமு நீயும் நானும் சொந்தந்தே ஆனா வாயும் வயிறும் வேற பாரு.*

*கிறு : யாரு இல்லேன்னாக. நா கொடுக்கலேன்னா சொல்ற.*

*கொடு : மாமு மொறையான வெள்ளாம இல்லாமதா நானே வேண்டா வெறுப்பா இந்த ஈனங்கெட்ட தொழிலே பண்றே.*

*கிறு : தெரியாமலா மாப்ள இருக்கு. எல்லாருமே சூழ்நிலைக் கைதியா ஆயிட்டோம். அப்பிடி இப்பிடி அனுசரிச்சிதே போக வேண்டியிருக்கு.*

*கொடு : எல்லாரையும் அனுசரிச்சா ஏ குடும்பம் எப்படி மாமு ஒடும். நீயோ நெலத்தைத் தரிசா போட்டுட்டே கூலி வேலைக்கும் சரியா போகமாட்டே. இப்படி வருமானமே இல்லாம எப்படி வாங்குன கடனைக் குடுப்ப?*

*கிறு :அடபோ மாப்ளே மகளிர் சுய உதவிக் குழு எதுக்கு இருக்கு?*

*கொடு : மகளிர் சுய உதவிக்குழு மகளிர் மேம்பாட்டுக்காக இருக்கு. கிறு : மகளிர் மேம்பாடுன்னா எங்க போயிடப் போவுது. நம்ம கிட்டதான வரப்போகுது மாப்ளே. வரவு செலவு. கொடு : என்ன மாமு சொல்றே. கிறு : ஒரு கிளாச ஊத்து மாப்ளே ஏத்திகிட்டே பேசலாம். ஏ பொண்டாட்டி மகளிர் சுய உதவிக்குழுவுல சேர்ந்து மூனு தவணையாய்ப் பணம் கட்டிருக்கா மாப்ளே.*

*கொடு : பணம் கட்னா?*

*கிறு : அதா மாப்ளே. மகளிர் சுய உதவிக் குழுவுல உள்கடன்*

*கொடுக்குறாங்களே அதக் கேக்கச் சொல்லிருக்கேன்ல.*

*கொடு : ஏ மாமு மூனு தவணை பணம் கட்னா எப்படி உள்கடன் கொடுப்பாங்க!*

*கிறு ; அதல்லாம் ஏ மாப்ளே பேசற. உங்க அக்காள உள் கடன் வாங்கச் சொல்லி இருக்கேன். அவளும் இன்னிக்குக் குழுக் கூட்டத்துல கேட்டுடுவா. கொடு கெடைக்குமுல்ல!*

*கிறு : அட சமயத்துக்கு ஆகாத குழு எதுக்கு?*

*கொடு : ஏதோ குழுவுல கலகம் பண்ண அக்காள அனுப்பிட்ட போ. போ. முனியாண்டி இருக்கா டேய் முனியா, மாமு வருது. ஆங் ஆங்!*

*கிறு : முனியாண்டி நல்ல பயமாப்ளே அவனை வுட்றாதிய.*

*கொடு : ஆமா பெரிய பேக்ட்ரில மேனேஜர் உத்தியோகம் கொடுத் திருக்க. போலிச கண்டா மூலக்கி ஒருத்தரா ஓடணும்!*

*கிறு : இல்ல வல்லடி வழக்கு பண்ணமாட்டா. அதாஞ் சொன்னேன். (போகிறான்.)*

*கொடு: ஏண்டா மகளிர் மேம்பாட்டுக்காக மகளிர் சுய உதவிக்குழு அமைச்சா அதுல வர்ற கடனை நம்பி ஏந் தொழில விருத்திப் பண்ரீங்களே ஏண்டா*

*கிறு : (திரும்பி வந்து) மாப்ளே என்ன பேசறிங்க?*

*கொடு : ஒன்னுமில்ல மாமு சூரிய நமஸ்காரம் பண்றேன்.*

*கிறு : உச்சி வெயில் மண்டைய பொளக்குது. இப்பப் போயி சூரிய நமஸ்காரம் பண்றிங்களே நீங்க இன்னும் கொழந்தை யாவே இருக்கிங்க மாப்ளே! (போகிறார்கள்.)*

*(திரை)*

***காட்சி– 5***

*இடம் : மகளிர் சுயஉதவிக் குழுக் கட்டிடம்.*

*பாத்திரம் : பரிமளகந்தி, செம்பருத்தி, காந்தாரி, குந்தவை.*

*அமைப்பு : (எல்லாரும் கலந்துரையாடல்)*

*பரிமளகந்தி: இதுல சொல்றதுக்கு என்ன இருக்கு. காந்தாரி இந்தா பாரு செம்பருத்திக் குழுவோட விதிமுறை. எல்லாருக்கும் பொது!*

*குந்தவை: இததான் பலமுறை படிச்சி படிச்சி சொல்லியிருக்காங்*

*களே! தெரியாதா? . .*

*செம்பருத்தி : தெரியும் குந்தவை.*

*குந் தெரிஞ்சிக்கிட்டே கேட்டா என்ன அர்த்தம்? செம் : இல்ல ஏதோ அவசர செலவுன்னு என் புருஷந்தா கேக்க சொன்னாக! பரி : ஆமா பொல்லாத புருஷன். தோண்டிய வச்சி தண்ணி அடிக்கிற புருஷன்.*

*(எல்லாரும் சிரிக்க.)*

*காந் : ஏண்டி சிரிக்கிறீங்க பெரும்பாலும் எல்லா வீட்லயும் இதாண்டி நடக்குது.*

*குந்: ஆமா. ஆமா. நாம அங்க இங்க பாடுபட்டு கூட்டமைப்பா ஒரு சேமிப்பகொண்டு வந்தா அத நம்பி ஏகப்பட்ட எடத்துல தைரியமா கடன் வாங்குறாங்க.*

*பரி: குழுவுல இவளால எவ்வளவு குழப்பம் பாரு*

*காந் : அடியே செம்பருத்தி! உன் புருஷன் கேட்க சொன்னா ரேன்னு. நீ இங்க வந்து உள் கடன்*

*கேக்கறதே தப்பு.*

*குந் : உள்கடன் கொடுக்குறதுக்கும் ஒரு காலகட்டம் இருக்குல்ல! அத குழு உறுப்பினரா இருக்குற நாமல்லாம் கூடிதான் முடிவு செய்யப் போறோம்.*

*பரி : ஆமா. ஆமா. இதுல எந்த நிர்ப்பந்தத்துக்கும் இடம் கிடையாது.*

*செம் : நா கேட்டது தப்பு தா யாரும் என்னைத் தப்பா நெனக்காதீங்க.*

*பரி : சரி சரி அடுத்த விஷயத்துக்குப் போங்க!*

*குந் : நாற்று நட உரம் போட.*

*செம்: கதிர் அறுக்க நெல்லடிக்க.*

*குந்: மூட்டை கட்ட முழுவதுமாய்*

*செம் : இரும்புக் கரம் நீட்டி இயந்திர டைனோசர்கள்*

*குந் : கடிக்காமல் குதறாமல் கடுகளவு ரத்தமின்றிக் கொல்லும் புதிய டைனோசர்கள்.*

*செம்: நமது வயல்களிலே இறங்கி வரும்...*

*குந்: அவற்றிற்குப் புரியாது.*

*செம் : அவை வயல்கள் அல்ல நமது வாழ்க்கை என்று.*

*காந் : என்னாடி இது புரியாம பேசுறாளுக!*

*பரி : இயற்கை விவசாய கூட்டத்துல இயந்திரமயமாக்கல பத்தி ஒரு பள்ளிச் சிறுவன் சொன்ன கவிதை இது. அதான்டி இவங்க பங்கு போட்டு சொல்றாங்க.*

*காந் : இயற்கை விவசாயக் கூட்டத்துல என்ன பேசுனாங்க?*

*பரி :அடியே காந்தாரி ஒரு பசு மாடு இருந்தா போதுமாம். எட்டு ஏக்கர் நிலம் சாகுபடி செய்யலாம்.*

*காந் : ஒரு பசு மாடு இருந்தா போதுமர்?*

*குந் : ஆமாடி பயிருக்குத் தேவையான அஞ்சு வகை கரைசல் சுலபமா செய்யலாம்.*

*செம் : இந்தக் கெமிக்கல் உரம், பூச்சிக்கொல்லி மருந்து இதுக்கெல்லாம் இனிமே வேலையே இருக்காதுடி*

*பரி: கடன வுடனவாங்கி விவசாயம் பண்ணி கஷ்ட படனுங்குற அவசியமே இல்ல.*

*காந்: இததான் ஏ புருசபோன வருஷமே தெரிஞ்சுக்கிட்டு நெலத்த தரிசா போட்டு வச்சிட்டாரே.*

*செம் : ஏபுருஷனுந்தாதரிசா போட்டாரு.*

*பரி : நெலத்த தரிசா போட்றது புத்திசாலித்தனமாடி.*

*காந் :வேற என்ன செய்யுறதாம்.*

*பரி : இயற்கை விவசாயம் பண்ணனும். அதுல செலவு கிடையாது.*

*காந் : அது எப்படிச் செலவு இல்லாம.*

*குந் : அதுக்குத்தாண்டி அஞ்சு வகை கரைசல். பரி: ஏ அத வெளக்கமா சொல்லுங்கடி*

*செம் : அடியே காந்தாரி அமிர்த கரைசல் அடி உரமா கொடுக்கணும்.*

*காந் : அமிர் கரைசல்னா*

*குந் : அதாண்டி அப்போதைக்கே போட்ட சாணம், கோமியம் இதோட கைப்பிடி அளவு வீணாப் போன வெல்லத்தையும் போட்டு ஒருநாள் ஊறல் போட்டா போதும் அதா அமிர்த கரைசல்.*

*காந் : இத என்ன பண்ணனும்?*

*குந் : ஒரு லிட்டருக்குப் பத்து லிட்டர் தண்ணீர் கலந்து வயலுக்கு அடி உரமா கொடுக்கணும்.*

*காந்: ரொம்பச் சுலபமான வழிமுறையா இருக்கே.*

*செம் : அப்பறம் நடவு நேரத்துல இலை, தழை, மண் புழு உரம் போட்டா போதும்.*

*பரி : மண்புழு உரம் தயாரிப்பது எப்படின்னு சொல்லுங்கடி.*

*செம் : கொல்லையில் சுல்லிக் குச்சிகளைத் தரையில அடுக்கணும்.*

*குந் : அது மேல காய்ந்த இலை சருகுகளஒரு அடி கணத்துக்குப் பரப்பி அதுமேல சாணிப்பால் தெளிக்கணும் அதுக்கு மேல பசும் இலைதழைகள அரைஅடி கணத்துக்குப் பரப்பி சாணிப்பால் தெளிக்கணும். இப்படி ஆறு அடுக்கு வைக்கணும். செம் : நடுவுல ஒரு குச்சிய சொருகணும். அது எதுக்குன்னா குச்சிய எடுத்துப் பார்க்கும் போது குச்சி சூடா இருந்தா குப்பை மக்கி இருக்கும். மக்காம போயிட்டா குச்சியில சூடு இருக்காது. குந் : அப்போ அதுல மண்புழுவைப் போட்டு தண்ணி தெளிச்சா போதும் மண்புழு பெருகி மண்புழு உரம் கிடைக்கும். செம் : சாணியும் வெல்லமும் மண்புழு உற்பத்தியை அதிகப் படுத்தும் இருபத்தைந்து நாள்ல மண்புழு உரம் கிடைக்கும். காந் : அடேங்கப்பா உரத்தைத் தேடி கடை கடையா அலைய வேண்டாம். அப்புறம்.*

*பரி: நாத்து நட்டு பத்தாம் நாள் பழக்கரைசல் இலைவழி ஊட்டமா கொடுக்கலாம்.*

*காந் : அது என்ன பழக் கரைசல். பழமெல்லாம் விக்கிற விலையில அத காசு கொடுத்து வாங்க நமக்கு வசதி பத்தாது.*

*குந் : எவடி இவள காசு கொடுத்து வாங்கச் சொன்னா?*

*காந் : திருடலாங்குறியா? –*

*செம்: குய்யத்தியா பேசாதடி கடையில போயி இயற்கை எரு தயாரிக்கனும்ன்னு சொன்னா வீணாப்போன வாழ்ப்பழம். வீணாப்போன பரங்கிப் பழம், வீணாப்போன வெல்லம் எல்லாம்*

*கொறஞ்ச விலைக்குக் கொடுப்பாங்க. சில கடையில சும்மாவே அள்ளித் தருவாங்க. அத வாங்கிச் சேகரிச்சு அதுல தண்ணி கலந்து.*

*குந் : அதுல ரெண்டு முட்டையும் ஒடச்சி ஊத்தணுமடி.*

*பரி : முட்டை ஓடும் அதுலே போட்றணும்.*

*காந் : அவிச்ச முட்டை போடலாமா? பரி அவிச்சா உடைச்சி ஊத்த முடியாதுடி,*

*காந் : ஏ கேட்டன்னா பள்ளிக்கூடத்துல வாரத்துக்கு மூணு முட்டை போட்றாகள்ல.*

*செம் : அலுப்ப செறுக்கிடி நீ. கேளுங்கடி எல்லாம் கலந்து காற்றுப் புகாம மூடி வைக்கணும்.*

*குந் : பத்து நாள் கழிச்சு தொறந்து பார்த்தா மேல ஆடை மாதிரி படிஞ்சிருக்கும். அத எடுத்துட்டு மறுபடியும் மூடி நாற்பத் தஞ்சு நாள் இப்படி ஊறல் போட்டா ப்ழக் கரைசல் கிடைக்கும்.*

*காந்: சரி பயிர்ல பூச்சி வருமே அதுக்கு என்ன பண்றதாம்?*

*செம்: அதுக்குத்தான் மூலிகைக் கரைசல் இருக்கே. பூச்சி விரட்டி வருமுன் காப்பது.*

*காந் : பூச்சி விரட்றதுக்கும் கரைசல் இருக்கா?*

*பரி: ஆமாடி கசப்பான இலைகள் ஆடு மாடு திங்காத இலைகள் உடைத்தால் பால்வரும் செடிகொடி இலைகள்.*

*செம் : குறிப்பா சொல்லணும்னா. நொச்சி இலை, ஆடா தொடை இலை, எருக்கன் இலை இப்படி அஞ்சு வகை இலைகளைச் சம அளவு இடிச்சி கோமியம் கலந்து பத்து நாள் ஊறல் போட்டு. .*

*பரி: எடுத்து வடிகட்டி பத்து மடங்கு தண்ணீர் கலந்து பயிருக்குத் தெளிச்சா பூச்சியே வராதாம்.*

*காந் : இதல்லாம் தெரியாம பூச்சிக்கொல்லி மருந்தைக் காச கொடுத்து வாங்கி உணவையே விஷமாக்கிட்டோமே!*

*செம் : குணபாசாலம்ன்னு ஒரு கரைசல் சொன்னாங்க. அதைத் தயார் பண்ணி பயிர்ல தெளிச்சிட்டா எலி ஆடுமாடு கூட கிட்ட வராதாம்.*

*காந் : அப்போ இயற்கை விவசாயத்துல இயற்கையான பாதுகாப்பு பயிருக்குக் கெடக்கிதுன்னு சொல்லு.*

*செம் : அதனாலதாண்டி சொல்ற.*

*காந் : என்னடி நீட்டி நெளிக்கிற.*

*செம் : ஏ புருஷன் பக்கத்துல நிக்கிறதா நெனச்சி பாட்டு படிக்க போறேண்டி.*

*பரி : என்ன பாட்டு பாடப் பேறா இவ.*

*செம் : சொன்னா நீங்க கேட்டுக்கணும்*
*சொன்னதைக் காதில் போட்டுக்கணும்*

*மண்ணோட வளம் கொறஞ்சி போச்சி*
*மனித வாழ்க்கை மறைஞ்சு போச்சு.*

*எல்லாத்துக்கும் காரணம்*
*இந்தச் செயற்கை உரம் போட்டதாலே*
*நெல்லு வயலோட நெலம இப்ப சரியில்ல*
*அட காலங்காலமா விதைச்ச விதைய*
*கண்டுபிடிச்சிட வேணுமச்சா*
*கண்டுபிடிச்சிட வேணுமச்சா!*

*(எல்லாரும் சிரிக்க செம்பருத்தி வெட்கத்துடன் (நெளிகிறாள்.)*

*– திரை –*

***காட்சி – 6***

*இடம் : சாலை பாத்திரம் : கிறுக்கு சண்முகம், வேலுமணி.*

*அமைப்பு : கிறுக்கு சண்முகம் பாடியபடி வருதல். எதிரில்*

*வேலுமணி வர, கிறுக்குக் கூழைக் கும்பிடு போட, வேலுமணியும் கும்பிட்டுப் போக.)*

*கிறு : சாரு இவ்விட வாரும்! அன்னிக்கு நீங்கதான இயற்கை விவசாயம் பத்தி பேசினீங்க. அது என்னமோ சொன்னிங் களே என்ன கோ. கோ. கோமியம். ஹே. ஹே. ஹே. பாக்யராஜீபடத்த பார்த்துட்டு எங்கள கிண்டல் பண்றீங்க. அப்பறம் சாணம் சக்கரை ஏற்கெனவே பலபேருக்குச் சக்கர இருக்கு. இப்ப நீங்க வேற சக்கரையை அக்கறையா*

*சொல்றீங்க! போங்க போங்க உங்கள ஊருக்குள்ள விட்டதே தப்பா போச்சு. அது என்னய்யா சாணத்தையும், மாட்டுக் கோமியத்தையும் கைப்பிடி வெல்லம் போட்டு ஊற வச்சிட்டா அமிர்த கரைசலாயிடுமா! யார் காதுல பூ சுத்துறே. பிச்சுபிடுவேன் பிச்சி! என்ன மொறைக்கிற நீ என்ன பெரிய பிஸ்தாவா? என்னை அடிச்சிடுவியா? அடிச்சிப் பாரு!*

*(வேலுமணி அடிக்க, சண்முகம் கீழே விழுந்து எழுந்து.)*

*யப்பா இது கையா உலக்கையா?*

*வேலு: உலகத்தையே ரட்ஷித்து காக்கும் கை. கிறு: ஆமா. ஆமா. கிர்ர்ன்னு உலகமே சுத்துது*

*வேலு : சொல்லு உலகத்தையே ரட்சித்துக் காக்கும் கை என்ன கை?*

*கிறு : ‘யப்பா நா வலக்கை பார்த்திருக்கேன். தலையி வழுக்கையைப் பார்த்திருக்கேன். சோத்துல பருக்கை” யைப் பார்த்திருக்கேன். நெல்லு குத்தும் ஒலக்‘கை‘யைப் பார்த்திருக்கேன். உக்கார்ற இருக்கை யைப் பார்த்திருக் கிறேன். இலக்கணத்துல படர்க்கையைப் பார்த்திருக் கிறேன். இசைக் கருவிகள்ல உடுக்கையைப் பார்த்திருக் கிறேன்*

*அரசியல்வாதிங்க விடுற அறிக்கையைப் படித்திருக்கிறேன். விருந்தாளிகளோட வருகையைப் பார்த் திருக்கிறேன். குழந்தைகளோட அழுகையைக் கேட்டிருக் கிறேன். சினிமாவுல நடி‘கை‘யைப்*

*பார்த்திருக்கிறேன். படத்துல தணிக்கையைப் பார்த்திருக்கிறேன். வரவுசெலவு கணக்கைப் பார்த்திருக்கிறேன். அடிமை விலங்கை'ப் பார்த் திருக்கிறேன். துணியில அழுக்''கைப் பார்த்திருக்கிறேன். அழகான கல்யாண அரங்கைப் பார்த்திருக்கிறேன். சோம்பேறிகளின் வெறுங்கை'யைப் பார்த்திருக்கிறேன். காட்டுல விலங்'கை'பார்த்திருக்கிறேன். நாட்டுல மனிதக் குரங்கை பார்த்திருக்கிறேன். இப்படி ஒரு கையைப் பார்த்ததில்லையப்பா.*

*வேலு :டேய் டேய் போதும் நிறுத்துடா எல்லாக் கையும் பார்ர்த்த நீ, இயற்கையைப் பார்த்தியா? அதான்டா ரட்சித்துக் காக்கும் கை. டேய் நீ கிறுக்கு சண்முகம்தானே. கிறு: ஆமா. நீ அவந்தானா?*

*வேலு : ஆமா. கிறு வேலுமணி. வேலு : சண்முகம் (தழுவிக்கொள்ளுதல்) டேய்! எனக்கு அவசரமா ஓர் அறை வேணும்.*

*கிறு: ஆகா கொடுத்ததைத் திருப்பிக் கேக்கிறானே!*

*வேலு : அட அது இல்லடா ஒரு சின்ன வீடு வேணும்.*

*கிறு : சின்ன வீடா என் தொழிலையே மாத்தறியா நீ.*

*வேலு :ஐயோ தங்க வீடு வேணுண்டா?*

*கிறு : ஆமா அவ அவன் ஒலைக்குடிசையே கெடைக்காம*

*தவிக்கிறா இவருக்குத் தங்கத்துல வீடு வேணுமா?*

*வேலு: ஏ கிறுக்கு தங்க வீடு இல்லடா தங்கி இருக்க சின்னதா*

*ஓர் அறை. கிறு வீடா சரி சரி பாக்கலாம்.*

*திரை*

***காட்சி – 7***

*இடம் வீடு*

*பாத்திரம் : கிறுக்கு சண்முகம், செம்பருத்தி, வேலுமணி.*

*அமைப்பு : (கிறுக்கு ஆவேசமாக.)*

*கிறு : ஏண்டி! வாங்கிட்டு வந்த முட்டைய ஆம்லெட் போட்டு குட்றின்னு கேட்டா ரெண்டு முட்டையயம் உடைச்சு. அந்தக் கேன்ல போட்றே வீணா போன வெல்லத்த வாங்கிட்டு வந்தே போனா போகுதுன்னு. கொழுக்கட்டை*

*சுட்டுக் கேட்டா அதையும் அந்தக் கேன்ல கரைச்சுப்புட்ட அடியே என்னைக் கேனையனா நெனக்கிறியா? என்று எல்லாவற்றையும் போட்டு உடைத்து ரகளை (செய்கிறான்.)*

*செம் : அடப்பாவி மனுசா அங்க இங்க கடன வுடன வாங்கிப் புள்ளைக்கு ஒரு வாயி சோறாக்கி வச்சே, அதத்தூக்கி மண்ணுல கொட்டிட்டியே பாவி மனுசா (போட்டு அடிக்கிறாள்.)*

*கிறு: ஏய் நிறுத்துடி! குழுக் கூட்டத்துல போயி உள்கடன் கேட்டு வாங்கிட்டு வாடின்னு சொன்னா சும்மா வெறுங்கையை வீசிக்கிட்டு வந்து நிக்கிற.*

*செம் : இப்ப உள் கடன் வாங்கி என்னய்யா செய்யப் போற?*

*கிறு :அடமட பொறுக்கி மவளே செலவாடி இல்ல. இத நம்பி நான் ஐந்நூறு ரூபாய்க்கு மாப்ள கரடிகிட்ட பத்து வலி பண்ணிருக்கேன்டி நாளைக்கி ஏ மாப்ள முகத்துல எப்புட்றி முழிக்கிறது.*

*செம் : நா என்னய்யா! பண்றது நானும் எவ்வளவோ கேட்டுப் பார்த்தேன். கூட்டத்துல யாரும் சம்மதிக்கல. –*

*கிறு :அவுங்க என்னாடி சம்மதிக்கிறது. போடி போயி குழுவுல கட்ன பணத்தைத் திருப்பி வாங்கி வாடி. குழுவும் வேண்டாம். ஒர் எழவும் வேண்டாம்!*

*செம் : கட்ன பணம் இப்ப கிடைக்காது.*

*கிறு :புருஷனையே எதிர்த்துப் பேசுறியா நீயி.*

*(அவன், அவளை அடிக்க, அவள் திருப்பி அடித்தபடி)*

*செம்:ஐயோ வள்ளியக்கா செல்வியக்கா பாவி மனுச குடிச்சிட்டு வந்து அடிக்கிறானே! இந்த அநியாயத்தைக் கேட்க யாருமே இல்லியா?*

*(அவன் முடியைப் பிடித்துவிட.)*

*கிறு : ஆ.ஆ. முடிய வுட்றி முடிய வுட்றி.*

*செம் : நாத்து முடியா இது? தலமுடி இனிமே அடிப்பியா?*

*கிறு : முடிய விட்டுட்டுப் பேசுடி வக்காளி மவளே! ஆம்பள சிங்கமடி.*

*(வேலுமணி வந்தபடி)*

*வேலு : இந்தாம்மா ஏ.. அவன இப்படிப் போட்டு அடிக்கிற?*

*கிறு : யார்ராவன் கிறுக்கனா இருக்கான் அவளா என்னை அடிக்கிறா நால்ல அவள வெளுத்து வாங்குற.*

*வேலு : எல்லாம் தெரியுண்டா கிறுக்கா குடிச்சுபுட்டா இப்படியா அசிங்கமா நடக்குறது.*

*செம்: நல்லா கேளுங்க சார்! நல்ல வேலை நீங்க வந்தீங்க இல்ல.*

*(ஆவேசமா கொண்டை முடிதல்.)*

*கிறு : என்னடி செய்வே? கிறுக்கு சிறுக்கி மவளே!*

*வேலு: ஏய் மூட்றா வாய. செம்பருத்தி என்னை அடையாளம் தெரியலே.*

*செம் : தெரியலியே*

*கிறு: ஏண்டி மருதமுத்து பிள்ளை மகன் வேலுமணிய தெரியாது.*

*செம்: ஆமா சின்ன வயசுல பார்த்தது. அந்த அண்ணனா இவுக.*

*வேலு : ஆமா பல வருஷங்களுக்கு முன்னால வெள்ளாம சரி இல்லேன்னு நெலத்தை எல்லாம் கெட்டதுக்குப் பாதியா வித்துப்புட்டு ஊரை விட்டுப்போன மருதமுத்து பிள்ளை யோட மகன்தான் நான்.*

*செம்: உம் நீங்க வித்துட்டு பூட்டிய நாங்க போக்கிடம் தெரியாம நாளுக்குநாள் சாகுறோம்.*

*வேலு : இல்ல செம்பருத்தி இனிமே நாமல்லா இங்கேதான் இருக்கணும்.*

*செம்: இன்னுமா இந்த வூர்ல கஷ்டப்படனும்.*

*வேலு : கஷ்டத்த நாமதான் உருவாக்கிப்புட்டோம். ஆமா செம்பருத்தி வீடு வாச நெலத்தை எல்லாம் வித்து புட்டு, இந்த வூரை விட்டுப் போன பிறகுதான் இயற்கை விவசாயம் பற்றி ஆராய்ச்சி பண்றவங்களோட அறிமுகம் எனக்குக் கெடச்சிது. அப்பதான் நாம எவ்வளவு முட்டாள் தனமாநம்ம விவசாயத்தைக் கெடுத்து வச்சிருக்கோம்ன்னு“தெரிஞ்சுது. தீவிரமான பயிற்சிக்குப் பிறகு நம்ம வூர்ல இத மக்களுக்குச் சொல்லிக் கொடுக்கணும்னுதா ஒரு குழுவா இந்த வூருக்கு வந்தோம்.*

*செம் : நீங்க வந்ததும் நல்லதா போச்சுன்னே!*

*கிறு : ஏ வேலுமணி இவ போட்ட போடுல சுதி எறங்கிட்டுடா. ஒரு பத்து ரூபா இருந்தா குடேன்.*

*வேலு : எதுக்கு?*

*கிறு : கருவ காட்ல போயி கொஞ்சம் சுதி ஏத்திக்கிட்டு வர்றேண்டா.*

*வேலு:செம்பருத்தி! நீ உம்ன்னு ஒரு வார்த்தை சொல்லு. இந்தக் கிறுக்குப் பயல கால கைய ஒடச்சி ரோட்ல போட்டர்றேன்.*

*செம் : நா செய்ய நெனச்சத நீங்க செஞ்சா வேண்டான்னா சொல்லப்போறேன். நல்லா ஒடிச்சிப் போடுங்கண்ணே!*

*கிறு : ஆங்..! (நைசாக நழுவுதல்.)*

*வேலு : (சண்முகத்தைப் பிடித்து) எங்கடா நழுவுற?*

*கிறு: அதுவந்து மாப்பிளஅடுத்தவூட்டு சேவக்கோழி கொல்லையில மேயுது. ஈரத்துணிய போட்டு அப்படியே அமுக்கி கொண் டாரதான்.*

*வேலு : எதுக்கு?*

*கிறு : மச்சான் வந்திருக்க இல்ல! உனக்கு விருந்து வைக்க வேண்டாம்?*

*வேலு : இன்னும் திருட்டுக்கோழி புடிக்கிற புத்தி போகுதா பாரேன்.*

*செம் : ஏண்ணா தெருவெல்லாம் பறையோசை காதைப் பொளக்குது என்ன விஷயம்? வேலு: உனக்குத் தெரியாதா? திருத்துறைப்பூண்டி தெற்கு வீதியில விடிய விடிய கலை இரவு நடக்கப் போகுது. அதுல இயற்கை வழி வேளாண்மை பத்தி, நம்ம நாடக நாடி கரிகாலன் ஒரு சிறிய கலை நிகழ்ச்சி நடத்தப் போறாரு.*

*கிறு : நாடக நாடி விவசாயத்தையும் நாடி வந்துட்டாரா?*

*கிறு உம். நாடக நாடி கரிகாலன் எழுதுன குந்தியின் செல்வன் கிற நாடக நூலுக்கு அணிந்துரை எழுதிய பாடலாசிரியர் இராம. கண்ணன் என்ன எழுதினார் தெரியுமா?*

*செம் : என்ன எழுதினார்?*

*வேலு : கரிகாலன் கதைகளைத் தருவதில் ஒரு ஏகலைவன் – கருத்துகளை மொழிவதில் கார்முகில் – நாடகக் கழனியில் இவர் ஏர் உழவன்னு எழுதினாரு.*

*கிறு : உண்மையிலேயே கரிகாலன் ஏர் உழவன் ஆயிட்டாரு.*

*வேலு : எழுத்தாளன் செர்ல்றது எப்படியோ பலிச்சிடுது.*

*கிறு: பின்னே இல்லையா? வயலு பக்கமே தல காட்டாம இருந்தவரு இப்ப எல்லாரும் இயற்கை வழி வேளாண்மைக்கு வாங்கன்னு பிரச்சாரம் பண்ண ஆரம்பிச்சிட்டாரு.*

*வேலு : எல்லாம் அவரோட சுயநலம்தான்.*

*கிறு : சுயநலமா?*

*வேலு :ஆமா, அவரு மட்டும் இயற்கை விவசாயம் பண்ணிட்டா அவரு சந்ததிக்கு நஞ்சில்லா உணவு கிடைச்சிடுமா? ஊர் பூரா இயற்கை விவசாயம் நடக்கணும் நாடு பூரா இயற்கை விவசாயம் பரவணும். அப்பதான் அவரோட சந்ததிங்க எந்த வூருக்குப் போனாலும் நஞ்சில்லா உணவைச் சாப்பிட முடியும். r*

*செம் : அண்ணே அவரோட சுயநலத்துலதான் பொது நலமும் கலந்திருக்கு கவனிச்சிங்களா?*

*வேலு : அததாம்மா அம்பது வருஷத்துக்கு முன்னமே நம்ம திருக்குவளை ஐயா அழகா சொல்லிட்டாரு.*

*கிறு :அவரு என்ன சொல்லிருக்காரு 2*

*வேலு : என் சுயநலத்திலேதான் பொதுநலமும் கலந்திருக்குன்னு வசனம் எழுதி இருக்காரே!*

*செம் : ஏண்ணா நம்ம சந்ததிக்கு நஞ்சில்லா உணவு கிடைக்கணும்ன்னா நாம என்ன பண்ணனும்?*

*வேலு:உடனே நம்ம பாரம்பரிய நெல் ரகங்களைத் தேடிப் பிடிக் கணும். இயற்கைவழி வேளாண்மைக்கு நாமளும் மாறணும்.*

*கிறு : இயற்கை வழி வேளாண்மை பத்தி எங்களுக்கு எதுவும் தெரியாதே! :*

*வேலு : அது ஒன்னும் பெரிய கம்பசித்திரமல்ல. சாதாரண விஷயம்.*

*செம் : சாதாரண விஷயமா? அது எப்படி? வேலு : அத பத்தி விவரமா தெரிஞ்சுக்கத்தான்.*

*செம் : நாடக நாடி கரிகாலன் நடத்துற கலை நிகழ்ச்சியைப் பார்க்கப் போறோம்.*

*– திரை –*

***காட்சி – 8***

*இடம் விழா மேடை*

*பாத்திரம் : பாகவதர் – காதர்*

*அமைப்பு : (காதர் மேடையில் தோன்றி.)*

*காதர் : வணக்கம் காலம் காலமா நம் முன்னோர்கள் போற்றிப் பாதுகாத்து வந்த இயற்கை வளம் இன்று மேல்நாட்டுக் கலாச்சார மோகத்தில் அழிந்து வருகிறது. செயற்கை உரங்களாலும் பூச்சிக் கொல்லி மருந்துகளாலும் மண் மலடாக்கப்பட்டு உணவு நஞ்சாக தாய்ப்பாலும் விஷமாக, மனிதன் நோயாளியாக மாறிவிட்டான். இந்தச் சீரழிவி லிருந்து மீளவும் எதிர்கால நம் சந்ததிகளின் வாழ்வு சிறக்க வும். இயற்கைவழி வேளாண்மை இம்மண்ணில் மலர இந்த மேடை நமக்கு வழிகாட்டும் என்ற நம்பிக்கை யோடு தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம் நடத்தும் கலை இலக்கிய இரவில் சங்கமித்து இதோ ஒற்றையடிப் பாதையில் எமது பயணம் தொடர்கிறது. (பாகதவர் பாடிக்கொண்டே வருதல்.)*

*பாகவதர் ; பப்பாளிக்காயைப் போடு– அது*<br>*எலிகளை ஒழிக்கும் பாரு*<br>*எல்லாருக்கும் நஞ்சில்லாச் சோறு*<br>*தருகின்ற இயற்கையைத் தேடு*

*ஹா. ஹா. ஹா.*

*காதர் : நிறுத்து நிறுத்து இது என்ன பாட்டு ? பப்பாளிக் காயைப் போடு அது எலிகளை ஒழிக்கும் பாருன்னு பாட்றே?*

*பாக : அட அதிகப்படி பப்பாளிக்காயைப் பறிச்சி அத துண்டுத் துண்டா வெட்டி பேப்பர்ல பொட்டலமா கட்டி எலிகள் நடமாடும் இடத்த சுத்தி போட்டு வச்சா. அதோட் பால் மணம் எலிக்கு ரொம்பப் பிடிக்கும்! அதனால எலி பப்பாளிக்காயை விரும்பிச் சாப்பிடும் அதசாப்பிட்ட எலி எங்கயாவது போயி துடிதுடிச்சி செத்துப் போயிடும்.*

*காதர் ; இத எவனாவது காதுல வச்சிக்கிட்டு வருவான் அவ கிட்ட போயி சொல்லு, ஏய்யா பப்பாளிக்காயில என்ன விஷமா இருக்கு? அது சாப்பிட்டா எலி எப்படிச் சாகும்?*

*பாக : அட மக்கு பப்பாளிக்காயில விஷமில்ல. அதோட பாலு பிசுபிசுப்பா இருக்கும். அந்தப் பாலு சாப்பிட்ட எலியோட சின்னக்குடலை சேர்த்து ஒட்டிடும். அதனால அந்த எலி இறை எடுக்க முடியாம துடிதுடிச்சி செத்துப் போயிடும்.*

*காதர் :அடேங்கப்பா! ஆரம்பத் தகவலே பயனுள்ளதா இருக்கே!*

*இயற்கை முறையில எலிகளை ஒழிக்க இப்படி ஒரு வழிமுறை இருக்கா?*

*பாக ; அதனாலதான் சொல்றேன். இனிமே வீட்டுக்கு வீடு தோட்டத்துல பப்பாளி மரத்த அவசியம் வளர்க்கணும். பப்பாளி மரத்தோட இலைகள் பூச்சி விரட்டியாகவும் பயன்படும்பப்பாளிக்காய்ல பஜ்ஜி சுட்டும் சாப்பிடலாம்.*

*காதர் சாமி இனிமே நான் வயல் வரப்புலேயும் பப்பாளி மரத்தை வளர்க்கிறதுன்னு முடிவு பண்ணிட்டேன்.*

*பாக: ரொம்ப நல்ல விஷயம்!*

*மூட்டைக்கட்டு மூட்டைக்கட்டு!*

*(கோஷம் போடுதல்)*

*காதர் : மூட்டைக்கட்டு மூட்டைக்கட்டு*

*(எதிர்கோஷம் போடுதல்.)*

*பாக : என்னத்த மூட்ட கட்டணும்?*

*காதர் : அதான என்னத்த மூட்டை கட்றது? தெரியாம எதுக்கு எசபாட்டு பாட்ற?*

*காதர் : அது பழக்கதோஷம்*

*பாக : மூட்டைகட்டு மூட்டை கட்டு!*

*(கோஷம் போடுதல்.)*

*காதர்: மூட்டை கட்டு மூட்டை கட்டு.*

*பாக: நெய்வேலி காட்டாமணக்கை மூட்டைக்கட்டு.*

*காத : ஆங். ஆமா நெய்வேலி காட்டாமணியதான்*

*அரசாங்கம் காசு கொடுத்து அழிக்குதே! நீங்க மூட்டை கட்டச் சொல்றீங்களே எதுக்கு? பாக : நெய்வேலி காட்டாமணியை துண்டுத் துண்டா வெட்டி பழைய சாக்குல போட்டு சின்ன சின்ன மூட்டையா கட்டி வயல்ல அங்கங்க தண்ணில போட்டு வச்சா அது ஊறி சாறா எறங்கி வயல்பூரா பரவி பயிர் வளர்ச்சி ஊக்கியாகவும் பூச்சி விரட்டியாகவும் பயன்படும்.*

*காதர் : காசு கொடுத்து அழிக்கிற காட்டாமணக்கு பயிர் வளர்ச்சி ஊக்கியா பயன்படுதா ஆச்சரியமா இருக்கே! உரச்செடியாதான் இந்தியாவுக்குள்ள கொண்டு வரப் பட்டது. ஆனா பன்னாட்டு நிறுவனங்களோட சதியால அது விஷச் செடியா புறக்கணிக்கப்பட்டது.*

*காதர் : ஆமா அத ஏன் மூட்டைக்கட்டி போடச் சொல்றீங்க?*

*பாக: மூட்டைக் கட்டாமசும்மா போட்டா அது வளர்ந்து நிற்கும்.*

*காதர் : ஓகோ! அது வளராம இருக்கத்தான் மூட்டை கட்டச்சொல்றீங்களா?*

*பாக:ஆமா.(பாடுகிறார்)*

*காப்பி ஒன்று எட்டனா*
*கார்டு சைசு பத்தனா*

*காண வெகு ஜோராயிருக்கும்*
*காமிராவைத் தட்டினா!*

*காதர் : நிறுத்தும் நிறுத்தும் இங்க நீங்க எதுக்கு வந்தீங்க?*

*பதக : இயற்கைவழி வேளாண்மையைப் பற்றிச் சொல்ல வந்தேன்!*

*காதர்: வந்த விஷயத்தைச் சொல்லாம வேற எதையோ பாடுறீங்க! பாக : எதுக்கும் ஒரு முன்னோட்டம் வேண்டாமா?*

*காதர் : அப்ப பாடுங்க!*

*பாக : நா பாட்டு பாடினா தாளக்காரர் ரொம்பக் கஷ்டப் படுவார்!*

*காதர் : ஏன்?*

*பாக : நான் பாடும்போது தாளம் போகும்.*

*காதர் : தாளம் போனா அவரு இழுத்துப் புடிப்பாரு*

*பாக : இழுத்துப் புடிக்க இது என்ன உம்பளச்சேரி பொலிக்காளையா ?*

*காதர் : உம்பளச்சேரி பொலிக்காளை எல்லாம் இப்ப பலிகடாவா மாறிட்டு, மாடுகளை லாரி லாரியா அடிமாடா அனுப் பிட்டோம். இல்லாமதான் நம் நாட்டு விவசாயம் சீர்கெட்டு கெடக்கு. அந்தச் சீர்கெட்ட வேளாண்மையைச் சீர்திருத்தம் பண்ணதான் இயற்கைவழி வேளாண்மைக்கு வழிகாட்ட வந்திருக்கார் நம்மாழ்வார். அவருக்கு வணக்கம் சொல்லிட்டு விஷயத்துக்குப் போவோம்.*

*பாடல்: வருக வருக வாழ்க என்போம்*
*வானமும் பூமியும் வாழ்ந்திடவே*
*அறிஞர் பெரியவர் நம்மாழ்வார்*
*ஆயிரம் ஆண்டுகள் வாழ்க என்போம்.*
*மண்ணில். இயற்கை. வளமும் இருக்கு.*

*காதர் : மண்ணுல இயற்கை வளம் இருக்குன்னு சொன்னது யாருங்க? . . .*

*பாக : இயற்கை வேளாண் முன்னோடி இவரது கருத்துக்கு ஏற்படி உழவர்கள் பழைய வழக்கப்படி செய்திட வேண்டும் சாகுபடி மாட்டை. வளர்ப்போம். கலப்பை எடுப்போம்.*

*காதர் : மட்டை எடுப்போம் விக்கட்டை அடிப்போம்*

*பாக : நிறுத்து நிறுத்து என்ன பாட்ற நீ?*

*காதர் : பின்ன என்னங்க நாட்ல நிறைய பேருக்குப் பித்தப் பைல கல்லு இருக்கு அதனால எங்களுக்கு பித்தப்பை தெரியும் அதிகாரிகள் கையூட்டு வாங்கிச் சாக்குல போட்றதனால சாக்குப் பை தெரியும் பிளாஸ்டிக் கழிவுகள் மல மாதிரி கொட்டி வச்சிருக்குறதால குப்பைய தெரியும் சாப்பாட்டுல போடறதால உப்பைத் தெரியும் நீங்க புதுசா கலப்பைன்னு ஏதோ சொல்றீங்க.*

*பாக : நா சொல்ற ஏர்க்கலப்பையை நீ எபயாவது பிடிச்சிருந்தா உனக்கு நோயே கிடையாது. பசுமை தாவர விஞ்ஞானி பாமர உழவனின் வழிகாட்டி பயிர்களை இயற்கையாய் வாழவைக்கும் பதினோராவது அவதாரம். மாட்டின் சாணம். எருவைக் கொடுக்கும்.*

*காதர் : மாட்டுச் சாணம் மக்க வச்சா எருவாகும் அது பிளாஸ்டிக் குப்பையோட கலந்தா?*

*பாக கொசு உற்பத்தியாகும்*
*பன்னாட்டு நிறுவனத்திற்கு*
*அதனால இலாபம்.*
*காற்றும் மழையும் கதிரொளியும்*
*கணக்காய் தருகின்ற வளமெல்லாம்*
*கருத்தாய்க் கொண்டு செய்ய வைத்தார்*
*கழனிகள் தோழன் நம்மாழ்வார்*

*பஞ்சம்... போக்க பசுவை... வளர்ப்போம்.*

*காதர் : தண்ணிய பாக்ட்ல அடைச்சு லிட்டர் பதினெட்டு ரூபா*

*விக்கிறான். வீட்ல வளக்குற மாட்டுப்பால எட்டு ரூபாய்க்கு எடுக்க மறுக்குறான். தண்ணிக்கு உள்ள மதிப்புகூட பாலுக்கு இல்ல! இதுல எங்கய்யா மாட்ட வளர்த்துப் பஞ்சம் போக்குறது.*

*பாக : மாடு வளக்குறது பாலுக்காக மட்டுமில்ல.*

*காதர்: ஆமா. ஆமா..! அடிமாட்டுக்காக!*

*பாக : அது பாவம். பெரும்பாவம்,*

*காதர் : எனக்குத் தெரியும் விஷயத்துக்கு வாங்க.*

*பாக : நாட்டுப் பசு மாடுகள் நமது உரக்கிடங்கின் நோஞ்சான்*

*மாடுகளும் வயலுக்கு உரம் கொடுக்கும். ஆகவே மாடுகளை அடிமாடுகளாக விற்றுவிடாதீர்கள்.*

*செயற்கை உரத்தைத் தினம் போட்டு சிதைந்தது வயல்கள் மண்ணெல்லாம். இழந்ததை மீட்போம் இயற்கையினால் என்றே சொன்னவர் நம்மாழ்வார் அமுத. கரைசல். தெளிப்போம்.வயலில்*

*காதர் அமுதகரைசலா? அதுக்குத் தேவலோகத்துக்குல்ல போகணும்.*

*பாக : கையில வெண்ணெய வெச்சிக்கிட்டு நெய்க்கு ஏன் அலையனும்? காமதேனு கற்பக விருட்சம் நம்ம நாட்டுப் பசு அதோட சாணமும் மூத்திரமும் தம்மாத்துண்டு வெல்லத் தைப் போட்டு கரைச்சு ஒருநாள் ஊறல் போட்டா அதுதான் அமுதக் கரைசல். அதுதான் பயிர் வளர்ச்சி ஊக்கி.*

*காதர் : அதாவது.*

*பாக : யூரியா போட்டா பச்சையம் கூடும் பூச்சிக்கு வரவேற்புக் கொடுக்கும்.*

*காதர் அதனால....*

*பாக : யூரியாவுக்குப் பதில் யூரின்? யூரின் தெளிச்சா அந்த வாடைக்குப் பூச்சிவராது அதோட பயிருக்குத் தேவையான 4% நைட்ரஜன் யூரின்ல இருக்கு.*

*காதர் :அடேங்கப்பா செலவே இல்லாத உரமா இருக்கே.*

*பாக : ஆமா யூரியா மூட்டையில வருது. யூரின் மாட்டுல வருது யூரியா உருண்டை வடிவில் இருக்கு யூரின் திரவ வடிவில் இருக்கு*

*காதர் : பப்பாளிக்காய் எலியை ஒழிக்குது! நெய்வேலி காட்டாமணி பயிர் வளர்ச்சிக்கு உதவுது மாட்டு மூத்திரம் நைட்ரஜனைக் கொடுக்குது இதெல்லாம் ஒருங்கிணைக்க வழி...?*

*பர்க: ஒன்றாய்க் கூடணும் விவசாயி.*

*காதர் : அது முடியாது.*

*பாக : உண்மையை உணரனும் தினம் பேசி.*

*காதர் : நாங்க புறம்பேசித்தான் பழக்கம். பயிர்களை நேசிக்கும் விசுவாசி.*

*காதர் : பயிர்கள நேசிக்கிறதாலதா யூரியாவை மூட்டை மூட்டையா கொட்றோம். களைக்கொல்லி பூச்சிக் கொல்லின்னு லிட்டர் கணக்கா தெளிக்கிறோம்.*

*பாக : பாருக்குச் சோறிடும் சுகவாசி.*

*காதர் : யாரு?*

*பாக : விவசாயி. காதர் : உம். பாடுங்க பாடுங்க.*

*பாக : ஒன்றாய்க்கூடணும் விவசாயி.<br>உண்மையை உணரணும் தினம்பேசி<br>பயிர்களை நேசிக்கும் விசுவாசி<br>பாருக்குச் சோறிடும் சுகவாசி<br>பாருக்குச் சோறிடும் விசுவாசி<br>வருக. வருக. வாழ்க என்போம்<br>இயற்கை... வழியில்... வெல்வோம்....உலகை*

*காதர் : இப்ப சொன்னிங்களே இது நிச்சயம் நடக்கும்.*

*பாக :வாழ்க வளமுடன்*

*காதர் : புல்லரிக்குது உடம்புல.*

*பாக : மாடு மேஞ்சிடப் போவுது.*

*காதர் : இப்ப உள்ள மாடு புல்லு திங்காதே.*

*பாக : வேற என்ன திங்கும்?*

*காதர் : ஆரோக்யா மாட்டுத் தீவனந்தான் திங்கும். மேய வுட்டா குப்பையா கிடக்குறி பிளாஸ்டிக் பேப்பரதான் முழுங்கும்.*

*பாக : அது மாடு இல்லை மாடு வடிவில் உள்ள பன்றி. சரி இயற்கையை நாம் சிதைத்தால் அது நம்மை அழிக்கும்.*

*காதர் : ஆமாம் இயற்கையை நாம் சிதைத்தால் அது நம்மை அழிக்கும். இந்தச் செய்தியை, இந்தச்*

*சபையில் பதிய வைப்போம்.*

*பாக் சரி சபை வணக்கம் சொல்வோமா?*

*காதர் : சொல்வோம் வெல்வோம்.*

*பாக : வந்திருக்கும் எல்லாருக்கும்*
*வணக்கம் சொன்னா நல்லாருக்கும்*
*வயலும் வாழ்வும் நடத்தப் போறோம்*
*கேட்க வாங்களேன்*
*வாழ வச்ச வயலு இங்கே*
*வாடிப் போயி கிடக்கு தூங்க*
*காரணந்தா செயற்கை*
*உரம் போட்ட தாலே.*
*டிராக்டர் ஒட்டி உழுது வச்சோம்*
*யூரியாவைக் கொட்டி வச்சோம்*
*மண்ணு வளம் கெடுத்துப் புட்டோம் உண்மையாக – இத –*
*@மாத்தனும் மாத்தணும் மாத்தனுங்க*
*மாறவே இல்லேன்னா நோய்தானுங்க*
*மண்ணு வளத்தை நாம இங்கே காக்கணும் –*
*இதில் மரபணு விதைகளையே நீக்கணும்*
*இனிமேலே இயற்கை உரம் போடலன்னா எதிர்காலச்*
*சந்ததியை நோய்கள் வந்து தாக்குமே –*
*இது எல்லாருக்கும் புரியணும் நல்லாதானே தெரியணும்*
*கண்ணுபோல வயல்நாம காக்கணும் – நம்ம*
*கண்ணுபோல வயல நாம காக்கணும்.*

*காதர் : இத மாத்தணும். மாத்தனும் மாத்தணுங்கற.*
*மாறவே இலலேனனா நோய்தானுங்க.*

*பாக : பழைய கால விதை எல்லாம் மறந்துட்டோம்.*

*காதர் : ஆமா, பழையகால விதை எல்லாம் மறந்துட்டோம்.*

*பாக : நம்ம உழைப்பை எல்லாம் வீணாக்கி இருந்துட்டோம்*

*வாடன்சம்பா குடவாழை மாப்பிளைச் சம்பா நெல்விதை தேடிப் பிடிச்சி நாம இங்கே விதைக்கணும்– இதில் இயற்கை உரம் போடணும் எல்லாருக்கும் தெரியணும் இரசாயன உரத்த நாம மறக்கணும்–இந்த இரசாயன உரத்த நாம மறக்கணும் இத மாத்தனும் மாத்தனும் மாத்தனுங்க மாறவே இல்லேன்னா நோய்த்னுங்க*

*காதர் : ஏமாத்தனும் ஏமாத்தனும் ஏமாத்தனுங்க ஏமாத்தவே இல்லேன்னா பட்னிதானுங்க பாக ஏய் நிறுத்து.*

*காதர்: ஹி..ஹி..ஹி.. பாக ஏ சிரிக்குற.*

*காதர் : உங்கள பாத்தா பாவமா இருக்கு ஏன்னா நாட்டுக்கு நல்லதெல்லாம் சொல்றீங்க.*

*பாக: நல்லத நான் சொல்லக் கூடாதா?*

*காதர் : பைத்தியம் சொல்றத யார்னா கேப்பாங்களா?*

*காதர் : விஞ்ஞானம் வேகமா முன்னேறிக்கிட்டிருக்கு இன்னும் கொஞ்சநாள்ல பொம்பளங்க ஆம்பளதுணை இல்லாம ஊசி போட்டுக்குழந்தை பெக்குற நெலம உருவாகும் போலேருக்கு.*

*பாக : ஊசி மூலமா கொழந்த பெக்குறது தப்பில்ல ஆனா அஞ்சு வயசுல குழந்தைய பள்ளிக்கூடத்துல சேக்கும்போது அப்பன் பேரு என்னான்னு கேட்டா ஊசின்னா சொல்ல முடியும்?*

*காதர் : ஆங்.*

*பாக :வாய பொளக்காத ஈ பூந்துட போகுது. இயற்கையா நடக்க வேண்டிய நடைக்கே வாக்கிங்கின்னு ஒருபேருவச்சிட்டான் மனுசன்.*

*காதர் : வாக்கிங் போறது ரொம்ப ஜாலியான விஷயம்.*

*பாக :எப்படி? –*

*காதர் : அதிகாலையில அழகான பொண்ணுங்க கூட வாக்கிங் போகுது அது உமக்குத் தெரியாதா?*

*பாக : உம். அம்மிக் குளவி ஆட்டுக்கல் திருகை உரலு உலக்கைன்னு. இயற்கை வழியில பெண்கள் பழகி இருந்தா.*

*காதர் : வீட்டு வாசல்ல சாணத்த தெளிச்சிப்புட்டு கோலத்த போட்டு வச்சிக்கிட்டு அந்தக் காலமாட்டம் தோட்டத்து வேலைய பாத்துக்கிட்டு இருக்கும்! நல்ல வேல இந்த கிரைண்டர், மிக்ஸி, வாஷிங் மெஷின், குக்கர் எல்லாம் வந்ததால அதுகளும் வாக்கிங் வருது. நாங்களும் ஜாலியா சைட் அடிச்சிட்டுக்கிட்டே வாக்கிங் போக முடியுது. காணக் கிடைக்காத காட்சி ஐயா இதெல்லாம். .*

*பாக : அடச்சீ வாயை மூடும்.*

*காதர் : சரி சரி இரும் இரும். ஆமா இயற்கை விவசாயம் ஏன் செய்யணும்? எதுக்குச் செய்யணும்?*

*பாக : பெஸ்ட் கொஸ்டின் நல்ல கேள்வி கேட்டிருக்கே. குட்பாய். இதுக்கு நான்பதில் சொல்லித்தான் ஆகணும். ஆனா அதுக்கு முன்னாடி நாற்பது வருஷமா நாம செய்துகிட்டிருக்குற செயற்கை உர சாகுபடியால நாம கண்ட பலன் என்ன?*

*காதர் : என்னத்த பலன் கண்டோம்?*

*பாக : ஏன் இப்படிச் சலிச்சுக்கிறே?*

*காதர் : காசு பணத்த கொட்டி கடனாளியா ஆனதுதான் கண்ட பலன் – திரைகடலோடியும் திரவியம் தேடுன்னாங்க. என் வயசுக்கு எனக்குப் பிளட்பிரஷர் இருக்கு, எங்க அண்ண னுக்கு இரத்தக் கொதிப்பு, என் தம்பிக்கு பெராலிஸ் அட்டக் பண்ணிருக்கு, என் தங்கைக்குப் பக்கவாதம், எங்க அக்கா புருஷனுக்குச் சுகரு, அவரு தம்பிக்கு சக்கரை நோய், அவரு பேரன் கேட்கவே வேண்டாம். பொறந்ததுலேருந்து ஆஸ்பத்திரியே கதியா கெடக்குறான். எங்க பக்கத்து வீட்டு பொண்ணு சாந்தாஉக்காந்தாகுந்த மாட்டேங்குறா குந்துனா உட்கார மாட்டேங்குறா.*

*பாக : ஏன்?*

*காதர் : அவளுக்கு இடுப்பு எலும்பு தேஞ்சிருக்காம்.*

*பாக : எல்லாத்துக்கும் காரணம். ?*

*காதர் : இரசாயன உரம் பூச்சிக்கொல்லி மருந்துதான்.*

*பாக : எல்லாந் தெரிஞ்சிக்கிட்டு அதே தப்பை ஏய்யா திரும்பத் திரும்ப செய்றிங்க?*

*காதர்: வேற வழி தெரியல! தெரிஞ்சாலும் பூனைக்கு மணி கட்றது யாருங்கற கதையா இருக்கு. இன்னிக்கு விவசாயியோட மனநிலை, தன்னம்பிக்கை இல்லை. முன்னால போற ஆட்டைப் பின்தொடர்ந்து போற செம்மறி ஆட்டுக்கூட்டம் மாதிரி ஆயிட்டோம். சொந்த புத்தியுமில்ல சொல்புத்தியும் இல்ல. தண்ணி கூட காசு கொடுத்து வாங்குற அளவுக்குச் சூழ்நிலைக் கைதியா மாறிட்டோம். பாக : உம் காந்தி போராடி விடுதலை வாங்கித் தந்தாரு. காலனி ஆதிக்கத்துலேருந்து விடுபட்டோம் – இப்போ காலனி வீட்டுக்குள்ள முடங்கிக் கிடக்கிறோம். '*

*காதர் :இதை எல்லாம் மாற்ற வழி.*

*பாக : இருக்கு, . . .*

*காதர் : எப்படி?*

*பாக : இயற்கைவழி வேளாண்மைக்கு மாறணும்.*

*காதர் : அது சாத்தியமா?*

*பாக : நிச்சயமா காதர் : அது எப்படி?*

*பாக : (பாட்டு)*

*வளமான மண்ணுதான்*
*வயலெல்லாம் மின்னுதாம்*
*விவசாயி மனசு வச்சா*
*விளையுமே பொன்னுதான்*
*மண்வெட்டி களை கொட்டாலே*
*மண்ணெல்லாம் கொத்தனும்*
*களையெல்லாம் ஏரு பூட்டி வேரோட வெட்டணும்*
*காற்றெல்லாம் மண்ணுக்குள்ளே எளிதாகப் போகனும்*

*ஓ.....*
*மண்மேலே வைக்கோல் போட்டு மூடிட்டா போதுமே*
*மண்புழு அலை அலையாக மண்டிதான் வாழுமே.*

*(வளமான)*

*விவசாய செலவுகள் எல்லாம்*
*வெகுவாகக் குறையுமே*
*வீணான முறைகள் இல்லா*
*இயற்கை விவசாயமே விதைப்பதும் அறுப்பதும்தான்*
*விவசாய வேலைகள்*
*வீட்டுக்கு ஒரு பசுமாடு*
*கண்டிப்பாக இருக்கணும்*
*சாணியும் சாம்பலும் தானே*
*சத்தான அடியுரம் (வளமான)*

*(பாடல் முடிந்து)*

*பாக : எல்லாருக்கும் எல்லாம் தரும் சக்தி படைத்ததுதான் இயற்கை. ஒரு பசு கன்று ஈனுவதற்கு முன்பே அந்தக் கன்றுக்குத் தேவையான பாலை மாட்டினால் கொடுக்க வழிவகுத்துள்ளது இயற்கை இல்லையா?*

*காதர் :ஆமாம்.*

*பாக இடம்விட்டு இடம் நகரும் ஜீவராசிகளுக்கெல்லாம் கொடை கொடுக்கும் இயற்கை. இடம்விட்டு இடம் நகரும் சக்தி யற்ற பயிர்களுக்குத்தேவையானதைக் கொடுக்காதா என்ன?*

*காதர் : கொடுக்கும் கொடுக்கும். அதனாலதான் மரத்த வச்சவன் தண்ணி ஊத்துவான்னு பழமொழியே சொல்லி இருக்காங்க. இருந்தாலும் இந்த யரியா போடலன்னா.*

*பாக : இயற்கை உரமே மண்ணுல இருக்கு.*
*செயற்கை உரம் ஏன் போடணும்*
*அதுக்கு காற்றும் நீரும் இருந்தா*
*போதுமுங்க சத்தாய் கிடைக்குமே –*
*ஊட்டச் சத்தாய்க் கிடைக்குமே*

*காதர் : காற்றும் நீரும் பயிருக்குப் போதுமா அது எப்படி?*

*பாக : காற்றாலும் நீராலும் ஊட்டச்சத்துக் கிடைக்குது.*
*பசுந்தாள் உரம் போட்டா தழைச்சத்தும் இருக்குது*
*மணிச்சத்தும் சாம்பல் சத்தும் அதுகூட இருக்குது*
*இயற்கையாக நிலம் இங்கே பயிர் வளர்க்க உதவுது*

*காதர் : ஆனாலும் பாருங்க மூட்ட மூட்டையா உரத்த கொட்டலன்னா கண்டு முதல் குறைஞ்சிடாதா?*

*பாக : கட்டாந் தரையில புல்பூண்டு முளைக்குதே அதுக்கு யாரு உரம் போட்டா? தரிசு நெலத்துல செடி கொடி மரம் வளருமே அதுக்கு யாரு உரம் போட்டா? காட்டுல மரம் செடி கொடி வளருதே அதுக்கு யாரு உரம் போட்டா? மாடி வீட்டுல சிமிண்ட் காரையில மரம் செடி கொடி முளைக்குதே அதுக்கு யாரு உரம் போட்டா? தண்ணி யார் கொடுத்தாங்க.*

*காதர் : ஆழமா யோசிச்சிப் பார்த்தா, இயற்கையில இவ்வளவு அதிசயம் இருக்கா?*

*பாக: இப்ப சொல்லு பயிருக்கு இரசாயன உரம் தேவையா தேவை. இல்லையா?*

*காதர் : இல்ல. இல்ல. இல்ல. டு நத்திங் பார்மிங். விவசாயத்திற்கென்று எதுவும் செய்யத் தேவையில்லை*
*விதைப்போம் அறுப்போம்.*

*பாடல் : பழைய விதைகளைப் பட்டியல் போட்டா*
*பல பேருக்குத் தெரியல கேட்டா*
*எல்லாருக்கும் புரியும்படியா*
*எடுத்துச் சொல்லுறோம்– நாங்க*
*வழியைச் சொல்லுறோம்.*

*மடுமுழுங்கி நெல்லுக்குப் பேரு*
*மண்ணில் போட்டா வெளஞ்சிடும் பாரு*
*நெடுநெடுன்னு நீருக்கு மேலே*
*நிமிர்ந்து நிற்குமே நீண்ட கதிரைக் கக்குமே*

*காதர் : ஏங்க நம்ம பாரம்பரிய விதைநெல் இப்ப இருக்கா?*

*பாக! உம் வயதான பெரியவங்க பொக்கிஷமா போற்றிக் கொஞ்ச நஞ்சம் பாதுகாத்து வச்சிருக்குற விதைகளைத் தேடிப் பிடிச்சி பெருக்கிகிட்டிருக்காங்க அந்த வகையில் கர்நாடகா வுல 72 ரகம் இருக்கு. நம் தமிழ் நாட்டுல தொன்னூறு வகையான நெல் ரகங்கள் புழக்கத்துல வந்துகிட்டிருக்கு. இன்னும் பல நெல் ரகங்களைத் தேடிக்கிட்டிருக்காங்க.*

*காதர் :ஆமா நம்ப பாரம்பரிய நெல்லுல என்ன சிறப்பு இருக்கு?*

*பாக : கல்லைத் தூக்க மாப்பிள்ளைச் சம்பா*
*வறட்சி தாங்க வாடன்சம்பா*
*வாழ வைக்கும் குடவாழை மச்சானே*
*கழிசல் நோய் நீக்க பிச்சவாரி கண்டேனே*
*மாட்டுக்குக் கழிசல்நோய் நீக்க பிச்சாரி கண்டேனே!*

*காதர் : அடேங்கப்பா.*

*பாக:ஒட்டடையான் நெல் விதைச்சா*
*இருமுறை நாம் அறுத்திடலாம்.*
*செலவு குறையும் பலன் அதிகம் அத்தானே*
*ஒரே கல்லில் இருமாங்காய் கண்டேனே*

*காதர் : அப்படியா?*

*பாக: வெள்ளப் பெருக்கைத் தாங்கி வரும்*
*கார் நெல்லை வெதச்சிப் புட்டா – படகில்*
*போயி அறுத்திடலாம் அத்தானே*
*அங்கே ஆடிப்பாடி மகிழ்ந்திடலாம் மச்சானே!*

*காதர் : அப்புறம்.*

*பாக : உப்பு நிலத்தில் உவர் முண்டான்*
*பயிராக்கி பார்த்திடலாம்*
*சதுப்பு நிலத்தில் களர் சம்ம்பா மச்சானே*
*அங்கே குழிவெடிச்சான் நெல்லுமுண்டு அத்தானே*

*காதர் : மேலே சொல்லுங்க.*

*பாக : அறுபதாம் குறுவையுண்டு வாழைப்பூச் சம்பா கண்டு*
*மடுமுழுங்கி நெல்லுமுண்டு மச்சான்*
*அது மானத்தைக் காத்து விடும்.மச்சானே*

*காதர் : ஆமா ஒட்டடையான் நெல் விதைச்சா இருமுறை நாம் அறுத்திடலாம்ன்னு சொன்னீங்களே அது எப்படி?*

*பாக : அறுபதாம் குறுவையுண்டு வாழைப்பூ சம்பா கண்டுன்னு சொன்னல்ல அந்த அறுபதாம் குறுவை அதோட ஒட்டடை யான்நெல் இரண்டையும் கலந்து ஒரே விதைப்பா விதைச் சிட்டா அறுபதாம் குறுவை முன்னாடி அறுவடைக்குத் தயாராயிடும் நீண்டகாலப் பயிர் ஒட்டடையான் பிறகு வளரும்.*

*காதர் : ஒரே கல்லுல ரெண்டு மாங்கா!*

*பாக: கிராமங்கள்ல அதுக்குமுன்ன இளவட்டக் கல்லுன்னு ஒன்று இருந்திருக்கு. அந்தக் கல்லைத் தலைக்கு மேல தூக்குற இளைஞனுக்குத்தான் பெண் கொடுப்பாங்களாம். அப்படி அந்தக் கல்லைத் தலைக்கு மேல தூக்குற அளவுக்குச் சக்தியைக் கொடுக்குமாம் மாப்பிள்ளைச் சம்பா அரிசி மூலமா கிடைக்குற நீராகாரம்.*

*காதர் : வேடிக்கையா இருக்கே!*

*பாக: வேடிக்கை இல்ல சீர்காழி, புதுக்கோட்டை பக்கமெல்லாம் இந்த இளவட்டக் கல் இருந்திருக்கு.*

*காதர் : மாட்டுக்குக் கழிசல் நோய் நீக்க பிச்சவாரி நெல்லு. அது சரி வாழ வைக்கும் குடவாழைன்னு சொன்னீங்களே அது எப்படி? . . .*

*பாக : குடலைச் சுத்தப்படுத்தி நோய் வருமுன் காப்பதால் குடவாழை குடலை வாழ வைப்பதால் குடவாழை!*

*காதர் : ஆமா உலகிற்கு உணவளிப்பீர், செம்மை நெல் சாகுபடி செய்வீர்ன்னு வேளாண்மைத் துறையில சொல்றாங்களே, அந்தச் செம்மை நெல் எங்க கிடைக்கும்.*

*பாக : செம்மைங்குறது நெல் ரகத்தோட பேரு இல்ல. திருந்திய நெல் சாகுபடின்னு முன்ன சொன்னாங்க. இப்ப இலக்கிய ரீதியா செம்மைன்னு சொல்றாங்க. மரபணு மாற்று விதைகளைக் கொண்டு வந்து பன்னாட்டு நிறவனங்கள் கிட்ட் நம்மள கையேந்தும் சூழ்நிலையை உருவாக்குற திட்டம் அது நமக்கு உதவாது.*

*காதர் : ஆமா ஒற்றை நாற்றுநடவு முறையில சாகுபடி செய்ய ஏற்ற நெல்ரகம் எது?*

*பாக : எந்த நெல் ரகமா இருந்தாலும் ஒற்றை நாற்று நடவு முறையில் சாகுபடி செய்ய முடியும். .*

*காதர்: ஒற்றை நாற்று நடவு முறையில் சிறப்புச் செய்தி ஏதாவது?*

*பாக : ஒரு ஏக்கருக்குக் கால் கிலோ விதை போதுமுன்னு கண்டுபிடிச்சிருக்காங்க.*

*பாக : அது எப்படி?*

*காதர் : இரண்டடி இடைவெளி விட்டு ஒரு நாத்து வீதம் நட்டா ஒரு ஏக்கருக்குக் கால் கிலோ விதை போதும்.*

*காதர் : இரண்டடி இடைவெளி தேவையா?*

*பாக: இடைவெளி அதிகமாகும்போது அதிக தூர் வெடிக்குதாம். ஒரு நெல்விதை நூற்றி இருபது தூர் வரை கட்டுதாம். அதிலிருந்து கால் கிலோ நெல் விதை கிடைத்திருக்காம்.*

*காதர் ; இத நீங்க நம்புரீங்களா?*

*பாக : மண்ணில் மண்புழு இருந்து காற்றோட்டம் வேருக்குக் கிடைத்தால் இது சாத்தியமே!*

*காதர் : உங்களுக்கு அனுபவம் இருக்கா.*

*பாக : ஒற்றை நாற்று நடவு முறையில் ஒரு அடிக்கு ஒரு அடி இடைவெளியில் நட்ட பயிரில் எழுபது தூர் வரை எண்ணிப் பார்த்திருக்கிறேன்.*

*காதர் : பாரம்பரிய நெல்லில் அதுபோல் தூர் வெடிக்குமா? இயற்கையின் சமன்பாடு சரியாக இருந்தா எல்லா நெல் ரகமும் தூர் வெடிக்கும்.*

*காதர் :தூர் வெடிப்பதைப் பற்றி விளக்கமா சொல்ல முடியுமா?*

*பாக: அதுபற்றியும் சொல்லி இருக்காங்க, ஒரு தாய் நாற்று பத்தாம் நாள் ஒரு குட்டி போடுமாம். அதன்பிறகு அந்தத் தாய் நாற்று ஐந்து நாட்களுக்கு ஒரு முறை குட்டி போடுமாம். அந்தக் குட்டி பத்தாம் நாள் ஒரு குட்டி போடுமாம். பிறகு ஐந்து நாட்களுக்கு ஒருமுறை அதுவும் குட்டி போட்டுக்கொண்டே இருக்குமாம். இப்படித் தூர் வெடிப்பதைக் கணக்குப் போட்டுப் பார்த்தால் மண்டை காய்ந்து விடும்.*

*காதர் : நெருக்கி நட்டு நெல்லைப் பார்ன்னு புதுசா ஒரு பழமொழி இருக்கே தெரியுமா?*

*பாக : நெருக்கி நட்டா நெல்லதான் பார்க்கலாம். கலக்க நட்டாதான் கதிரைப் பார்க்க முடியும்.*

*பாடல் :*
*விவசாயம் இயற்கை விவசாயம் – இந்த*
*விவரம் தெரிஞ்சு உழவு செஞ்சா ஆதாயம்*
*பலனாகும் நல்ல பலனாகும் – இதுக்கு இ*
*யற்கை உரம் போடுவது பலனாகும்*
*பயிர்செய்ய மண்ணு வளமே இருக்குங்க–*
*அதுக்கு பழுதில்லாத விதைகளையே விதைக்கணுங்க.*

*(விவசாயம் )*

*இந்தக் கால விவசாயி வாரிசையே பழக்கலே*
*சொந்தமா நிலமிருந்தும் சேற்றில் இறங்கி நடக்கல*
*சந்ததிக்குச் சத்தில்லாத உணவு தந்தோம்*
*நமக்கும் சரஞ்சரமாய் நோய்கள் வர வழிவகுத்தோம்.*

*காதர் : பழக்கமில்லாம நம்ம பிள்ளைகள எப்படி விவசாயத்துல ஈடுபடுத்துறது?*

*பாக : பள்ளியில இதுக்குப் போயி படிக்கணுமா?*
*இல்ல பயிர் வளரும் நிலத்தில் இறங்கி நடக்கணுமா?*
*ஆட்டு எரு அந்த வருஷம் அறியணுமா? –*
*அட மாட்டு எரு மறுவருஷம் புரியணுமா?*

*கிறு : (மேடையேறி வந்து) சரியா சொன்னிங்க சாமி எங்க தத்தா அடிக்கடி சொல்லிக்கிட்டே இருப்பாரு.*

*பாக: என்ன சொல்வாரு*

*கிறு: பொண்ணோட குணத்தாலே*
*குடும்பம் நல்லா நடக்குது*
*மண்புழுவோட செயலாலே*
*இயற்கை உழவும் சிறக்குது*

*வேலு : அப்படிப் போடு*

*செம்: எம் புருஷனுக்கு ஞானம் வந்துடுச்சி. கிறு அட போ புள்ள எனக்கு வெக்கமா இருக்கு.*

*வேலு : இதுல வெக்கப்பட என்ன இருக்கு? உன் மனசுக்குள்ளே உள்ள விஷயம் வெளிப்பட்டிருக்கு.*

*செம் : ஆங். அப்பறம் சொல்லு மச்சான்.*

*கிறு : தக்கப்பூண்டு வெதச்சாலே முளைச்சிடுங்க – அத மடிச்சடிச்சா அடிஉரமா ஆயிடுங்க. – `*

*எல்லாரும் : விவசாயம் இயற்கை விவசாயம் – இந்த*
*விவரம் தெரிஞ்சு உழவு செஞ்சா ஆதாயம்*

*கிறு : சாமி தொழு உரமே போடாம கடை உரத்தைப் போட்டே சாகுபடி செஞ்சதால நிலம் பூரா இறுகி கட்டாந்தரையா கெடக்கு. இத மாத்த வழி இருக்கா?*

*பாக : முயற்சி செஞ்சா முடியாதது எதுவும் இல்ல. *

*செயற்கை உரத்தாலே*
*செயல் இழந்த வயலெல்லாம்*
*இயற்கை உரம் போட்டா*
*ஏரு பூட்ட அழைக்குமே!*

*வேலு : செம்பருத்தி.....*
*காட்டுமனை யாக்கும் நிலைவிட்டிடணும் –*
*நிலத்தைத் தரிசில்லாம சாகுபடி செய்திடணும்*

*எல்லாரும் : விவசாயம் இயற்கை விவசாயம் – இந்த*
*விவரம் தெரிஞ்சு உழவு செஞ்சா ஆதாயம்*

*பாக : காற்றாலும் நீராலும் ஊட்டச்சத்து கிடைக்குது*
*பசுந்தாள் உரம்போட்டா தழைச் சத்தும் இருக்குது*

*வேலு : மணிச்சத்தும் சாம்பல் சத்தும்*
*அதுகூட இருக்குது – தம்பி இயற்கையாக*
*நிலம் இங்கே பயிர் வளர்க்க உதவுது.*

*எல்லாரும் : விவசாயம் இயற்கை விவசாயம் –*
*இந்த விவரம் தெரிஞ்சு உழவு செஞ்சா ஆதாயம்*

*பாகவதர் : நன்றி! வணக்கம்.*

## *6. அனுபவ உண்மைகள்*

**வரலாற்றுத் தகவல்**

*தமிழர்களின் வரலாறு மிகவும் பழைமையானது. கரிகாலன் ஆண்ட காலத்தில் 6.6 ஏக்கர் நிலத்தில் அதாவது ஒரு வேலி நிலத் தில் ஆயிரம் களம் அதாவது 30,000 கிலோ நெல் விளைந்ததாகக் கூறப்படுகிறது. அதாவது ஒரு ஏக்கரின் விளைச்சல் 4545 கிலோ!*

*அந்தக் காலத்தில் பசுமைப் புரட்சி கிடையாது. செயற்கை உரம் பூச்சிக்கொல்லி மருந்து கிடையாது. இன்றைய கம்பெனி விதைகள் எதுவும் அந்தக் காலத்தில் கிடையாது.*

*இந்தத் தொகுப்பில் தொடக்கத்தில் கூறப்பட்டுள்ள நெல் ரகங்களைக் கொண்டுதான் அந்தக் காலத்தில் விவசாயம் செய்து இருககிறார்கள்.*

*அந்தப் பாரம்பரிய நெல் ரகம்தான் ஏக்கருக்கு 4545 கிலோ விளைச்சலைத் தந்துள்ளது. அப்படிப்பட்ட சிறந்த நெல் ரகங்களை நாம் மீண்டும் கொண்டு வரவேண்டும். நம் சந்ததிக்கு நஞ்சில்லா உணவைத் தரவேண்டும். அதுவே இந்தத் தொகுப்பின் நோக்கம்!*

**எலியை ஒழிக்க பப்பாளிக்காய்**

*எலியைக் கட்டுப்படுத்த பப்பாளிக்காய் பயன்படும் என்ற தகவல் மா. ரேவதி அவர்கள் சொன்னபோது, எனக்கும் வியப்பாக இருந்தது. மறுநாள் அதைச் சோதிக்கும் பொருட்டு பப்பாளிக் காயைத் துண்டுத்துண்டாக வெட்டி என் வீட்டைச்சுற்றி, போட்டு வைத்தேன். . . . .*

*மூன்றாம் நாள் காலையில் தூங்கி எழுந்து வெளியில் வந்தேன். மாடிப்படியருகே கிடந்த பப்பாளிக்காயைச் சாப்பிட்ட எலிதுடிதுடித்துக் கொண்டிருந்தது.*

*ஓஹோ எலியை ஒழிக்க இதுவும் ஒரு சுலப வழி என்பதை அனுபவ ரீதியாக அறிந்துகொண்டேன். இந்தத் தகவலைப் பலரிடமும் பகிர்ந்து கொண்டேன். இன்றும் என் வயலைச் சுற்றி அடிக்கடி பப்பாளிக்காயைப் போட்டு வைப்பதை வழக்கமாக்கி விட்டேன். நீங்களும் சோதித்துப் பாருங்கள்.*

**எலிகளைக் கொல்ல எளிய வழி**

*எலிகளை அழிக்க ஜப்பானில் கடைப்பிடிக்கும் முறை ஒன்று உள்ளது. அவர்கள் எலியை உயிருடன் பிடித்து அதன் மர்ம ஸ்தானத்தை நரம்பு கொண்டு இறுகக் கட்டிவிடுவார்களாம். பிறகு அந்த எலியை வளைக்குள் விட்டு விடுவார்கள். வலிதாங்காமல் வெறிபிடித்துத் தலைதெறிக்க ஓடும் எலி, ஆத்திரத்தில் வழியில் சிக்கும் மற்ற எலிகளைக் கடித்துக் குதறிவிடுமாம். எப்படியும் ஒரு எலி 15 எலிகளுக்குக் குறையாமல் கொன்று விடுமாம், ஆதிரெங்கம் ஆக்கம் அறக்கட்டளையில் நடந்த பயிற்சியின்போது நம்மாழ்வார் சொன்ன தகவல் இது. இதை நாமும் கடைபிடித்துப் பார்த்தால் வெற்றி பெறக்கூடும்.*

**பூச்சிகளைத் தாக்கும் பறவைகள்**

*நடவு செய்த வயலில் T வடிவச் சட்டங்களைப் பல இடங்களில் நட்டு வைக்கவேண்டும். பறவைகள் அதில் வந்து அமர்ந்து ஓய்வு எடுக்கும். வயலில் உள்ள பூச்சிகளைப் பிடித்துத் தின்று விடும்.*

*சிட்டுக்குருவிகள் புழுக்களை விரும்பிச் சாப்பிடும். கரிக்குருவிகள் அந்துப் பூச்சிகளை அழித்துவிடும். இரவில் ஆந்தைகள் அமர்ந்து எலிகளைப் பிடித்து விடும்.*

*நமது நிலத்தில் ஒரு பகுதியில் காடுபோல் பலன்தரும் மரங்கள் செடிகொடிகள் இருப்பது இன்னும் கூடுதல் பலன்தரும். பறவைகளின் எச்சம் நிலத்தில் சேர்வதால் மண்வளம் கூடும்.*

*செயற்கை உரம் பூச்சிக்கொல்லி மருந்துகளால் பறவை இனங்கள் அழிக்கப்படுகின்றன. எனவே இயற்கையின் சமநிலை பாதிக்கப்படாமல் இருக்க இயற்கைவழி வேளாண்மை அவசியம்.*

**வேர் கரையான்**

*வேப்பம்புண்ணாக்கைச் சணல் சாக்கில் கட்டி வயலில் நீர் பாயும் தடத்தில் வைத்து விட்டால், புண்ணாக்கு கரைந்து நீரில் கலந்து வயலில் பரவி வேர் கறையானை விரட்டும்.*

**அமுத கரைசல்**

*அப்போதைக்கே போட்ட சாணம் 10 கிலோ, கோமியம் 10 லிட்டர், கருப்பட்டி அல்லது வெல்லம் அரை கிலோ மூன்றும் மண்பானை அல்லது பிளாஸ்டிக் குடம் சிமெண்ட் தொட்டி இவற்றில் ஏதாவது ஒன்றில் போட்டு கலந்து ஒருநாள் ஊற வைத்துக் கொள்ளவும்.*

*இந்தக் கரைசலை வயலுக்கு ஓடும் நீரில் சிறிது சிறிதாக ஊற்றி, பாய்ச்ச வேண்டும். இந்த அமுதக் கரைசல் நிலம் முழுவதும் பரவி மண்ணை வளமாக்கும். இந்த அமுதக் கரைசலை மட்டுமே இயற்கை வழி வேளாண்மைக்குப் போதுமானது என்பது என் அனுபவம். அதனால்தான் சொல் கிறேன். செலவில்லாத இயற்கை விவசாயம் செய்வோம்.*

**எலிக்கும் வேலை கொடு**

*கட்டாந்தரையாய் எதற்கும் பயன்படாமல் கிடக்கும் நிலத்தை உழுவதற்கு எலிகளைப் பயன்படுத்தலாம். எலிகளை வேலை வாங்க இது ஒரு வழி. கட்டாந்தரையாய்க் கிடக்கும் பகுதியில் வைக்கோல் போர் மற்றும் இதர பொருட்களைப் போட்டு அடசலாக்கிவிட்டால் அங்கு எலிகள் குடியிருக்க வசதியாகிவிடும். எலிகள் அங்கு வசிக்க ஆரம்பித்துவிட்டால் அந்த நிலத்தை நன்றாகக் கிளறி மண்ணைப் பொலபொலப்பாக்கி விடும். பிறகு அந்த அடசலை அப்புறப்படுத்தி நிலப்பகுதியை விவசாயத்திற்குப் பயன்படுத்த வசதியாகிவிடும். பொதுவாக இயற்கையின் சமநிலை பாதிக்கப்படாமல் பார்த்துக் கொண் டாலே போதும் இயற்கைச்சூழல் பாதிப்பு இல்லாமல் இருக்கும்.*

**காட்டு விலங்குகள்**

*காடுகளை அழித்ததால்தான் பூச்சிகள் வயலை நாடி வரத் தொடங்கிற்று. காட்டு விலங்குகளும் நாட்டிற்குள் புகுந்து நாசமாக்கும் நிலைக்கு வந்துவிட்டது. ஒவ்வொரு பகுதியிலும் இயற் கையின் சமநிலை பாதுகாக்க தேவையான மரம், செடி, கொடிகள் ஆடு,மாடுகள்,பறவை மற்றும் இதர ஜீவராசிகள் தேவையான அளவு இருக்க வேண்டும். இவை அதிகமானாலோ அல்லது குறைந்து போனாலோ இயற்கையில் சமநிலை பாதிக்கப்படும்.*

**மீன அமிலம்**

*இதை வடமொழியில் குணபசலம் என்று சொல் கிறார்கள். குணபம் என்றால் இறந்த உடலைக் குறிக்கும் சொல். ஆடு, மாடு, கோழி, மீன் இப்படி இறந்து போன ஜீவராசி களின் உடலைத் துண்டுத் துண்டாக வெட்டி எடுத்து அத்துடன் சம அளவு வீணா போன வெல்லம் கலந்து பிளாஸ்டிக் தொட்டி யில் போட்டு மூடிவைக்க வேண்டும். இந்த இரண்டு கலவையும் ஒரு மாதத்தில் கரைந்து தேன்போலாகிவிடும். இதைப் பத்து லிட்டர் நீருக்கு அரை லிட்டர் கலந்து பயிருக்குத் தெளித்தால் பயிரில் பச்சையம் கூடும். பயிர் நன்கு வளரும். பூச்சிகள் நெருங் காது. ஆடுமாடுகள் கூட வாய் வைக்காது. இந்த மீனமிலம் மட்டுமே விவசாயத்திற்குப் போதும் என்பது சில விவசாயிகளின் கருத்தாகும்.*

**குணபசலம்**

*சந்திர குப்தர்கள் காலத்தில் பயன்படுத்தப்பட்டதாம். இதைப் பல கழிவுப் பொருட்களைக் கொண்டு தயாரிக்கும் வழிமுறைகள் கூறப்பட்டுள்ளது. ஆதிரெங்கம் ராஜேந்திரன் இறந்துபோன ஒர் ஆட்டை வெட்டி பெரிய பிளாஸ்டிக் கேனில் போட்டு, அதில் எருமை மாட்டு கோமியம் இன்னும் சில பொருட்களைக் கலந்து குணபலசம் தயார் செய்து வைத்திருந்தார்.அந்தக் கரைசலை நான் வாங்கித் தண்ணீர் கலந்து கோடையில் பயிரிட்டிருந்த பூங்கார் நாற்றுக்கு தெளித்தேன்.*

*தூரத்தில் நின்ற சில மாடுகள் மோப்பம் பிடித்தபடி வேகமாக வந்து வயலுக்குள் இறங்கியது. இப்படியும் அப்படியும் முகர்ந்து பார்த்த மாடுகள் தலைதெறிக்க ஓட ஆரம்பித்தன.*

*இன்னுமொரு நாள் மாலையில் கரைசலைத் தெளித்துவிட்டுப் புறப்பட்டபோது, நரிகள் ஓடிவந்து பயிருக்குள் மறைந்தன.*

*இந்த வாடைக்குப் பாம்புகளும் வருகை தரும் எனவே மீனமிலம் (குணபசலம்) கரைசலை மக்கள் வசிக்கும் இடத்திற்கு அருகில் பயன்படுத்தாமல் இருப்பது நல்லது.*

***பட்டுப்போன செடிதுளிர் விட்ட கதை***

*ஒரு கருவேப்பிலைக் கன்று கோடை வெயிலில் காய்ந்து கருகிப் போய் நின்றது. மீதமிருந்த குணபசலம் கரைசலை அதன்மேல் தெளித்தேன். அந்தக் காய்ந்துபோன கருவேப்பிலைக் கன்று துளிர்விட்டு வளர்ந்து இன்று செடியாகச் செழித்து நிற்கிறது. சீர்காழி திரு நகரியில் சப்பாத்தி பூச்சித் தாக்குதலால் பருத்திச் செடிகள் நாசமாகிவிட்ட நிலையில் சப்பாத்திப் பூச்சிகள் எந்த மருந்துக்கும் கட்டுப்படவில்லை.*

*இதுபற்றி அறிந்த தமிழ்நாடு இயற்கை உழவர் இயக்க நிர்வாகி மா, ரேவதி அவர்கள் குணபசலம் கொடுத்துத் தெளித்துப் பார்க்கச் சொல்லி இருக்கிறார்.*

*வேண்டா வெறுப்பாக வாங்கிச் சென்ற ஒரு விவசாயி கடைசியில் இதையும் சோதித்துப் பார்த்துவிடுவோம் என்ற நினைப்பில் குணபசலம் தெளித்திருக்கிறார்.*

*குருத்துக்களைச் சாப்பிட்டுக் குஷியாக வாழ்ந்த சப்பாத்திப் பூச்சி குணபசலம் வாடை கண்டதும் பயிரைச் சாப்பிடாமல் பட்டினி கிடந்து இறந்து இனவிருத்தியாகாமல் போனது.*

*பட்டுப்போன பருத்திச் செடிகளும் பக்கவாட்டில் கிளை வெடித்து வளர்ந்து நின்றதாம்.*

*ஆடுமாடுகள் இந்த வாடை கண்டால் சில நாட்கள் இறை எடுக்காமல் பட்டினி கிடப்பது கண்கூடாகக் காண முடிகிறது. இதே நிலையில்தான் பூச்சிகளும் இறை எடுக்காமல் மடிகின்றன.*

*குணபசலம் ஓர் உயிர்க்கொல்லி அல்ல; இதன் வாடையில் வரும் ஒவ்வாமைதான், பூச்சிகளைச் செயல் இழக்கச் செய்கிறது. பயிர் பாதுகாக்கப்படுகிறது. பயிருக்குச் சிறந்த வளர்ச்சி ஊக்கி யாகவும் குணபசலம் பயன்படுகிறது. –*

*வீரமுத்து என்ற ஒரு விவசாயத் தொழிலாளியிடம் குணபசலம் தயாரிப்பு முறை மற்றும் பயன்பாடுகளைச் சொல்லி வயலில் தெளிக்கப் பணித்தேன்.*

*தொடக்கத்தில் அதன் வாடை தயாரிப்பு முறையும் அவனுக்கு மனத்தளவில் ஒவ்வாமையை ஏற்படுத்திவிட்டது. இது ஒன்றும் விஷமல்ல கவலைப்படாமல் தெளி என்று ஊக்கப்படுத்தினேன். ஒரு சுற்று தெளிப்பதற்குள் அவனுக்குக் குமட்டல் வந்துவிட்டது.*

*உடனே கலவையை நான் வாங்கிக்கொண்டேன். அவன் வேகமாக ஓடிப்போய் வாய்க்காலுக்குள் அமர்ந்து குடலைச் சுருட்டிக்கொண்டு குமட்ட ஆரம்பித்தான். அவனது அந்த நிலைப்பாடு எனக்கே சற்றுப் பயத்தை உண்டுபண்ணியது.*

*பிறகு மெல்ல மெல்ல அவனை ஆசுவாசப்படுத்தி இயல்பு நிலைக்குக் கொண்டு வந்தேன். அன்று இரவு அவன் பட்டினி கிடந்தான் என்பது கூடுதல் தகவல்.*

*அந்தக் கூலித் தொழிலாளிக்கு ஒவ்வாமையை ஏற்படுத்திய குணபசலம் எனக்கு எந்த ஒவ்வாமையையும் ஏற்படுத்தவில்லை. அதற்குக் காரணம் என் மனநிலை.*

*இயற்கைவழி வேளாண்மையை ஏற்றுக்கொண்ட என்மனம், அதற்குத் தேவையான இடுபொருளையும் மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டு விட்டதால், அந்தக் குணபசலம் எந்தத் தாக்கத்தையும் எனக்குள் ஏற்படுத்தவில்லை. மனமிருந்தால் மார்க்கமுண்டு!*

***பஞ்சகாலத் தானியங்கள்***

*சோளம், கம்பு, கேழ்வரகு, மக்காச்சோளம், சாமை, தினை, வரகு, குதிரைவாலிபோன்ற தானியங்களே மனிதனுக்குரிய சத்துள்ள உணவாகக் கூறப்படுகிறது. அரிசி, கோதுமையைவிடத் தானியங் களில் சத்துக்கள் அதிகம்.*

*இன்று முழுநேர அரிசி உணவுக்கு மனிதன் பழகிவிட்டான். அதுவும் நன்றாகத் தீட்டிய கெமிக்கலைக் கலந்து பாலிஷ் செய்யப் பட்ட மல்லிகைப் பூப்போன்ற வெண்மை அரிசியே உயர்ந்த அரிசியாக, மனிதன் கருதுகிறான். நாகரிகம் என்ற பெயரால் நவ தானியங்கள் சாப்பிடுவதைக் குறைத்தான். கூழ் சாப்பிடுவதைக் கௌரவக் குறைவாகக் கருதினான். நாகரிக மோகத்தில் மோட்டா ரக அரிசிக்கும் குட்பை சொல்லிவிட்டான்.*

*வேதாரண்யம் பஞ்சநதிக்குளம் நடுசேத்தியில் எனக்குப் பெண் பார்த்து முடிவு செய்தபோது, அங்கெல்லாம் கருப்பரிசி சோறுதான் போடுவார்கள் என்று என் நண்பர்களும் உறவினர் களும் கேலி செய்தார்கள்.*

*ஆனால் எனக்குத் திருமணமான 1984 ஆம் ஆண்டிலே அங்குக் கார் நெல் கலாச்சாரம் மாறி, பசுமைப் புரட்சி கொடி கட்டிப் பறந்தது. மருந்துக்குக்கூட உயர்ந்த நெல் பயிரை நான் அங்குப் பார்க்கவில்லை.*

*1960 இல் தொடங்கிய பசுமைப் புரட்சி குறுகிய காலத் திலேயே இந்திய கிராமங்களில் இண்டு இடுக்கெல்லாம் புகுந்து நாசமாக்கி விட்டிருந்தது.*

***கோபுரக் கலசங்களில் நவதானியங்கள்***

*நெல்லை ஓர் ஆண்டுதான் சேமிப்பாக வைக்க முடியும். நவதானியங்களை நூறு ஆண்டுகள்கூட சேமிக்கலாம் என்று சொல்வார்கள். அதனால்தான், இன்றும் கோபுரக் கலசங்களில் நவதானியங்களைப் போட்டு சேமிக்கும் முறை உள்ளது.*

*நெல்லுக்கு நிறைய நீர் பாய்ச்ச வேண்டும். நவதானியப் பயிர்களுக்குக் குறைந்த அளவு நீர் போதுமானது. கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை. மீண்டும் துளிர் விடட்டும் அந்தக் கால வாழ்க்கை! –*

*நவதானியங்களைப் பயிரிட்டால் அவற்றைப் பல வருடங்கள் பாதுகாப்பாகச் சேமிக்கலாம் என்கின்றபோது நமக்குப் பஞ்சம் எப்படி வரும் அதனால்தான் அவற்றைப் பஞ்சகால தானியங்கள் என்று நம் முன்னோர்கள் வர்ணித்திருக்கிறார்கள்.*

*நாமோ ஒட்டுமொத்தமாக நெல்லை மட்டுமே ஏகபோக மாகப் பயிரிட்டு விளைச்சலைக் கூட்டி விலையைக் குறைக்க வைத்திருக்கிறோம். தவிடு கிலோ 5 ரூபாய் விற்கும் போது அரிசி கிலோ 1 ரூபாய்க்குப் போடுகிறது அரசு. தவிட்டுக்கு உள்ள மதிப்பு கூட அரிசிக்கு இல்லாமல் போனது. சிந்திக்கும் ஆற்றலை மனிதன் இழந்ததால் வந்த வினை இது.*

**சோளக்கொல்லை பொம்மை**

*எனக்குத் திருமணமான காலத்தில் நான் மிகவும் ஒல்லியாக இருந்தேன். அப்போது நாடகங்களில் நடித்துக் கொண்டிருந்தேன். ஒருமுறை எனது நாடக நடிப்பைப் பார்த்த எனது மைத்துணி சோளக்கெர்ல்லை பொம்மைபோல் இருந்தது என்று வருணித்தார். இப்போது சோளக்கொல்லை பொம்மையும் இல்லை. அப்படி ஒரு சொல் வழக்குமில்லை.*

*உலகில் வாழும் பறவை இனங்கள் பெரும்பாலும் பூச்சி களையே தங்கள் முழு உணவாகக் கொண்டவை!*

*ஒரு ஜோடி மைனாக்கள் ஒர் ஆண்டில் சுமார் இரண்டு இலட்சம் பூச்சிகளைத் தங்கள் இரைப்பைக்குள் நிரந்தரமாய்த் தூங்க வைக்கின்றன!*

*மீன்கொத்திப் பறவைகளும் வாலாட்டிகளும் கரிச்சான் குருவிகளும் பஞ்சுருட்டான்களும் ஈ பிடிப்பான் களும் ஆட்கொல்லி நஞ்சுகளால் காணாமல் போய்விட்டன!*

*மௌன சாட்சிகளால் நடந்து கொண்டிருக்கும் இந்த ரசாயனப் போரை வேடிக்கை பார்க்கும் நிலையில் சோளக் கொல்லை பொம்மை பற்றி சொல்லத் தோன்றவில்லை.*

*வயலுக்குள் வரும் பறவைகள் உட்கார்ந்து ஒய்வெடுப் பதற்கு வைக்கோலைக் கொண்டு நமது முன்னோர்கள் உருவாக்கிய பொம்மை சோளக்கொல்லை பொம்மை இன்று ஆட்கொல்லி நஞ்சுகளால் அதையும் இழந்து விட்டோம்.*

**ஆந்தைகளுக்கு அழகு சிம்மாசனம்**

*ஐம்பது வருடங்களுக்கு முன் வயலைச்சுற்றி வேலி அட்ைப்பதும் வரப்பை வெட்டி எலிகளைப் பிடிப்பதும் தான் நம் முன்னோர்கள் மேற்கொண்ட பயிர்ப் பாதுகாப்பு முறை. தோட்டத்து மூலைகளில் உடைந்த பானைகளை அடுக்கி வைத்து அழகு பார்த்ததுகூட எலிகளைப் பிடிக்க வரும் ஆந்தைகள் அமர்வதற்கான அழகு சிம்மாசனம் என்பது இப்போதுதான் எனக்கும் புரிகிறது.*

*ஆனாலும் நிசப்தமான அந்தக் கால இரவில் நான் கேட்ட அந்த ஆந்தைகளின் அலறல் சத்தம் இப்போது கேட்கவில்லையே!*

**களை கட்டுப்பாட்டில் காணம்**

*வேண்டாத களைச் செடிகளைச் செம்பாலான அறிவாளைக் கொண்டு வெட்டினால் அவை மறுபடியும் வளராமல் அப்படியே குட்டையாகவே இருந்துவிடுமாம். நான் ஒரு பத்திரிகையில் படித்த தகவலை இங்கே தந்திருக்கிறேன். இன்னும் இதை நான் சோதித்துப் பார்க்கவில்லை. கோரையைக் கொல்ல கொள்ளை விதை என்ற ஒரு பழமொழி உண்டு. மூன்று வருடங்கள் கொள்ளு (காணம்) தெளித்தால் வயலில் களை கட்டுப்படும் என்று பசுமை விகடனில் மண்புழு மன்னாரு சொல்லி இருந்ததைப் படித்தேன். வீட்டுத் தோட்டத்தில் சிறிது கொள்ளு தெளித்தேன். அது அடர்த்தியான கொடியாகப் படர்ந்து சூரிய ஒளி மண்ணில் படாதவாறு மறைத்துவிட்டது. அந்த இடத்தில் வேறு செடிகள் முளைக்கவில்லை. மண்புழு மன்னாரு சொல்லி இருப்பது சாத்தியமான செயல்தான். விரைவில் வயலில் இதைச் சோதித்துப் பார்க்க முயன்றுள்ளேன். நீங்களும் செய்து பாருங்கள். கொள்ளின்*

*இன்னொரு பெயர்தான் காணம்.*

***கானல் நீர்***

*நதிநீர் இணைப்பு பிரச்சனை இன்று பிரம்மாண்ட மாகப் பேசப்படுகிறது. வேலையற்றவன் எருமையைப் பிடித்துச் சிரைத்தானாம் அதுபோலத்தான் இதுவும்!*

*அணைக்கட்டுகளை நவீன இந்தியாவின் கோவில் களாகப் போற்றிய ஜவகர்லால் நேரு பிற்காலத்தில் அதற்காக வருத்தமடைந்தாராம். அவரது பேரன் முன்னாள் பிரதமர் இராஜீவ் காந்தி 1986 இல் மாநிலப் பாசன மந்திரிகள் மாநாட்டில் பேசியதாக வந்த செய்தி. 1951 ஆம் ஆண்டிலிருந்து இன்றுவரை 246 பெரிய பாசனத்திட்டங்கள் தொடங்கப்பட்டுள்ளன. இவற்றில் 64 திட்டங்கள்தாம் முடிக்கப்பட்டிருக்கின்றன. 181 திட்டங்கள் இன்னும் முடிந்த பாடில்லை. இந்தத் திட்டங்களால் மக்களுக்கு ஒரு பலனும் கிடைக்கவில்லை என்று தைரியமாகச் சொல்லலாம். 16 ஆண்டுகளாகப் பணத்தை வாரி இறைத்துள்ளோம். ஆனால் மக்களுக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. பாசன வசதி தண்ணீர் விளைச்சல் எதுவுமே கிடைக்கவில்லை. அவர்களது வாழ்க்கைத் தரம் அப்படியே இருக்கிறது என்று வெளிப்படையாகவே பேசி இருக்கிறார்.*

*சமீபத்தில் நதிநீர் இணைப்புத் திட்டம் என்பது சாத்தியமற்ற செயல் என்று இராகுல் காந்தி பேசியதும் இதன் அடிப்படையில் தான்.*

*கோடிக்கணக்கான மக்களைப் புலம்பெயர வழிவகுக்கும் நதிநீர் இணைப்புத் திட்டம் சாத்தியமற்ற செயல்தான். ஒட்டு பெறுவதற்கான வழிமுறைகளையே குறிக்கோளாகக் கொண்ட*

*அரசியல்வாதிகள் கானல் நீர் போன்ற ஒரு திட்டத்தைக் காட்டி மக்களை ஏமாற்றுகிறார்கள் என்பதே உண்மை!*

*இயற்கையை நாம் சிதைத்தால் அது நம்மை அழிக்கும்!*

*வாழையடி வாழையாக, இயற்கையோடு இணைந்து வாழ்ந்த மக்களை முன்னேற்றப் பாதையில் அழைத்துச் செல் கிறோம் என்று சொன்னவர்கள் இன்று பன்னாட்டு நிறுவனங் களின் கைக்கூலியாக மாறிவிட்டனர்.*

*ஆங்கிலேயர் காலத்தில் இருந்த பாடம் மண்புழு குடியான வனின் நண்பன். அதைக்கூட நமது மறைத்து விட்டனர் அறிவியல் அறிவாளிகள்*

*உள்ளூர் குளத்திற்கு வரும் பாசனக் கால்வாயும் வடிகால் வழியும் தெரியாத பிள்ளைக்கு எங்கோ இருப்பதாகச் சொல்லப் படும் நைல் நதியைப் பற்றிப் பாடம் சொல்லி என்ன பயன்?*

*வெள்ளையர்களை விரட்டி காலனி ஆதிக்கத்திலிருந்து விடுபட்டதாகப் பெருமைப்படுகிறோம். இன்று நாம் என்ன செய்கிறோம்?*

*கிராமத்தில் உள்ள நிலபுலன்களை விற்றுவிட்டு நகரத்திற்கு வந்து காலணி வீடுகளில் அடைபட்டுக் கிடக்கிறோம்.*

***பசுமை விகடன்***

*சமீபத்தில் பசுமை விகடனில் ஒரு செய்தி. லார்டு மெக்காலே 1835 ஆம் ஆண்ட பிப்ரவரி 2 இல் இங்கிலாந்து பாராளுமன்றத்தில் பேசியது.*

*‘நான் இந்தியாவின் குறுக்கு நெடுக்காகப் பயணம் செய்தபோது பிச்சைக்காரன் என ஒருவனையோ திருடன் என்று ஒருவனையோ பார்க்கவில்லை. அத்தகையது அந்த நாட்டின் செல்வ வளமும்*

*உயர்நியாய உணர்வுகளும், வெளிநாட்டிலிருந்து வருகின்ற எல்லாமே சிறந்தது! ஆங்கிலமாக இருக்கின்ற எல்லாமே தன்னுடையதைவிட உயர்ந்தது என்று எண்ணுகின்ற இந்தியர்களாக அவர்களை மாற்ற வேண்டும். இந்தியாவை அடக்கி ஆளப்படும் ஒரு நாடாக மாற்ற, அந்த நாட்டின் பழைய கல்வி முறை மற்றும் பாரம்பரியத்தை மாற்றி அமைக்க வேண்டும்''*

**மெழுகு பிஸ்கட்**

*அவரது பரிந்துரைப்படி மாற்றப்பட்ட இந்திய மக்களாகிய நமது மேல்நாட்டு மோகம் இன்னும் மாறவில்லை.*

*வீட்டில் சுடும் முறுக்கைவிட கவர்ச்சி அட்டையில் கிடைக்கும் ரொட்டிதான் நமக்குப் புத்துணர்ச்சி தருகிறது.*

*எத்தனை பேர் அறிந்திருப்பார்கள். பிள்ளைக்குக் கொடுக்கும் பிஸ்கட் மெழுகினால் ஆனது என்று?*

*பிஸ்கட்டை எடுத்துக் கொளுத்திப் பாருங்கள் அது நின்று எரியும்!*

*துருவை எடுக்கப் பயன்படும் கலர்பானங்கள் உங்களுக்கு உஷ்ணம் போக்கும் குளிர்பானங்கள் ஆகிவிட்டன.*

*இயற்கை அளித்த இளநீரைப் பயிர்செய்ய மறந்து பகட்டான வாழ்வில் பழகிவிட்டீர்களே ஏன்?*

*அன்று வெள்ளையர்கள் வென்றார்கள் அதே வழியில் இன்று நம் அரசியல் ஆட்சியாளர்கள் நடைபோடுகிறார்கள்.*

*நாமும் அதற்கு வெண்சாமரம் வீசிக்கொண்டிருக்கிறோம். இராமன் ஆண்டால் என்ன இராவணன் ஆண்டால் என்ன எல்லாம் ஒன்றுதான்.*

**இரண்டாம் உலகப்போர்**

*இரண்டாம் உலகப்போர் முடிந்த காலகட்டம். உலகமே நிம்மதிப் பெருமூச்சு விடத் துவங்கிய நேரம் தாடைகளை வருடியபடி ஆழ்ந்த யோசனையில் இருந்தது ஒரு கூட்டம்.*

*வெடிமருந்து தயாரிப்பதற்கான மூலப்பொருள் அம்மோனியாவைத் தயாரிக்கும் ஆலைகளின் அதிபர்கள்தான் அவர்கள்.*

*தொடர்ந்து சண்டை நடந்தால்தான் இந்த ஆலைகளுக்கு வேலை.*

*இராணுவ ஆராய்ச்சி மையங்களும் மூடுவிழா காண வேண்டிய சூழ்நிலை உருவானது. அந்த நிலையில் வேளாண்மை ஆராய்ச்சி மையமாக அவை பெயர்மாற்றம் செய்யப்பட்டது.*

*தேவையற்றதாகிப் போன அமோனியா சில விளை நிலங்களில் கொட்டப்பட்டது. அமோனியா கொட்டப்பட்ட நிலங்களில் பயிர்கள் இயற்கைக்கு மாறாக வளர்ச்சி கண்டதைக் கூர்ந்து கவனித்த சிலர், அமோனியாவை விவசாயத்தில் வளர்ச்சி ஊக்கியாகப் பயன்படுத்தலாம் என யோசித்ததன் விளைவே வேளாண்மை ஆராய்ச்சி மையம் உருவாகக் காரணமானது.*

*அமோனியா உரமானது. நெல்லும் கோதுமையும் வழக்கத் தைவிட அதிகமாக விளைந்தது.*

*உயர்ந்த நெல் ரகங்கள் அதிகக் கதிர்கள். பாரம் தாங்காமல் தண்டுகள் முறிந்து சாய்ந்தன.*

*விளைவு...*

*மரபணு மாற்றம் செய்து, நெல் நாற்றின் உயரத்தைக் குறைத்தனர்.*

*அரசை நடத்தியவர்களையும் அரசு அதிகாரிகளையும் அறிவியல் விஞ்ஞானிகளையும் பண பலம் அழுத்தியது.*

*நமது பாரம்பரிய நெல் ரகங்கள் சேமித்து அழிக்கப்பட்டது. குட்டை ரகமான ஒட்டு ரகங்களை நோக்கி நமது விவசாயம் திருப்பிவிடப்பட்டது.*

*பண்ணைக் கழிவுகள் விலகி, இரசாயனக் கழிவுகள் கிராமத் திண்ணைகளில் வந்து இறங்கியது.*

*குட்டை ரக நெல் ஏராளமான தண்ணீரை விழுங்கியது. பயிர்கள் நோய் எதிர்ப்புத் திறன் இன்றிப் பூச்சி தாக்குதலைச் சந்தித்தது.*

*பூச்சிக்கொல்லி மருந்துகள் புகுந்தன.*

*. குட்டை ரகமானதால் வைக்கோல் குறைந்தது.*

*மாடுகளுக்குத் தீவனம் பற்றாக்குறையானது.*

*மாடுகள் குறைந்தன.*

*டிராக்டர்கள் விளைநிலங்களில் புகுந்தன.*

*இரசாயனங்களைக் கொட்டிய்தால் மண்புழு மறைந்தது.*

*பூச்சிக்கொல்லிகளைக் கொண்டு வந்ததால் பறவை இனங்கள் அழிந்தன.*

*ஆழ்குழாய்க் கிணறு வெட்டி நிலத்தடி நீரை வற்றச் செய்தோம்.*

*பசுமைப் புரட்சியின் விளைவால் உழவர் நிலம் நிர்மூலமாக் பட்டது*

*விஞ்ஞானம் விளைநிலங்களைப் பாழடித்தது.*

*விவசாயிகளைக் கடனாளியாக்கிவிட்டது.*

*தாய்ப்பாலை விஷமாக்கிவிட்டது.*

*பிறக்கும் குழந்தையும் நோயோடு பிறக்கிறது.*

*குழந்தை ஊனமாகிவிடும் என்று பயந்து, பொறுப்போடு போலியோ சொட்டு மருந்து கொடுக்கும் நாம், அந்தக் குழந்தை நோயில்லா வாழ்வு பெற நஞ்சில்லா உணவைத் தரவேண்டும் என்று என்றாவது சிந்தித்துச் செயல்படுகிறோமா என்றால் இல்லை.*

*சிந்தித்தால் நாம் சேற்றில் இறங்கி விடுவோம். சேற்றில் இறங்கிவிட்டால் நாம் இயற்கைக்கு மாறி விடுவோம்.*

*குண்டுச்சட்டிக்குள் குதிரை ஒட்டும் காலணி வீடுகளைக் காலிசெய்துவிட்டு காணி நிலங்களைத் தேடி வருவோம்.*

*மரத்தடியில் மல்லாந்து படுத்தால் எல்லாச் சுகமும் இயற்கையாக நமக்குக் கிடைக்கும்.*

*மனிதா மனம் மாறிவிடு*
*மரத்தில் ஏறி விடு*
*ஜெண்டில்மேன் வேடம் போட்டு*
*உடலை வருத்தியது போதும்.*
*காட்டானாகக் கவலை இல்லா*
*மனிதனாக மனிதா மனம்*
*மாறிவிடு மரத்தில் ஏறிவிடு.*

**கர்நாடக மாநில பாரம்பரிய இரகங்கள்**

*Rain fed Paddy Varietes*

1. *அனே கோம்பினா பதா*
2. *கிட்டாபதா*
3. *கரிமுண்டுகா*
4. *புட்டாயதா*
5. *கெம்ப டோடி*
6. *காம கட்லே*
7. *மாற பதா*
8. *ஜெனு குடு*

***ட்ரை லேண்ட் பேடி (Dry Land Paddy)***

*9, பங்காரகுண்டு*
*10. பர்மா பிளாக்*
*11. பாசு மதி*
*12. சின்னப்பொன்னி*
*13. நாரி கெலா*
*14. கிட்ட பதா*
*15. கிட்டா ராஜ் கெய்யமே*
*16. கெளரி சன்னா*

***டீப்வாட்டர் பேடி (Deep Water Paddy)***

*17. நீரகுழி பதா*
*18 சன்ன வால்ய பதா*
*19. நீ நெட்டி பதா*
*20. காறிகண்டக பதா*
*21. காரி நெல்லு*
*22. காரி ஜாடு பதா*
*23. பிலிஜாடு பதா*
*24. பத்ம ரேகா*

*பாரம்பரிய நெல் ரகங்களில் சில.*

***Paddy Varieties***

*25.Gonfaré Gut (Medicinal Paddy)*

*26.Nagaland Batha Jade Rajmudi Dulha*

*27.Navali batha Dehardonebasumathi*

*28.Naadi batha*

*29.dehav done Basumathi*

*30.Manduga .*

*31.Rathmachoodi*

*32.Salem sanna*

*Aakailu batha*

*Aalur Sanna*

*Anaandi batha*

*Bangara Sanna*

*Choomal*

*Helesaalu chilluga*

*Karuvaani batha*

*Kasmas*

*mahadi*

*Mysore mallige*

*Nannen Kelti*

*Uggi batha*

*Vaari sanna*

*Yedikuni*

*Medicinal paddy*

நவரா ஒயிட்

சன்னகி

அம்பி மோரி

நவார பிளாக்

துவட பாரியு நெல்லு

காரிகண்டக

காரி கலே

காகிசாலே

**பேடி வெரைட்டிஸ் *(Paddy Varieties)***

*57. HMT பத்தா*

*58. கண்டதும்பா*

*59. காட்டு யானே*

*60. மெட்ராஸ் சன்னா 61. கெம்பு புத்தா*

*62. மலாடி சன்னா*

*63. மசூரீ*

*64. மிசி பத்தா*

*65. முக்கன்னா சன்னா*

*66. ராஜி பூகா*

*67. நாகா பத்தா*

*68. சார்ஜன்*

*69. புத்ர சாலி*

*70. ராஜ்கமல்*

*71. ராஜ் கேவே*

*72. ராஜ் முடி*

***தலையாரி***

*பெரிய மீசை கையில் மூங்கில் தடி, தலையில் முண்டாசு, பெரிய போர்வை, மடித்துக் கட்டிய வேஷ்டி, ஆஜானுபாகுவான தோற்றம், நான் இளம் வயதில் பார்த்துப் பயந்த தலையாரி!*

*வயல்களில் ஆடுமாடுகள் இறங்கி நாசப்படுத்திவிடாமல் பாதுகாப்பதற்காக, கண்காணிப்பாளர் ஒருவரை கிராமம்தோறும் நியமிப்பது உண்டு. இவரைத் தலையாரி என்று அழைப்பார்கள்.*

*சாகுபடி செய்யப்பட்ட நிலங்களைச் சுற்றி கண்காணிப்பது, ஆடுமாடுகள் மேய்ந்தால் அவற்றைப் பிடித்துப் பட்டியில் கொண்டு போய் அடைப்பது இவரது பணிகள்.*

*ஒவ்வொரு விவசாயியும் அறுவடையின்போது இவருக்கு நெல்லைக் கூலியாகக் கொடுப்பார்கள். இதுபோக இவரது கவனம் முழுவதும் வயல் கண்காணிப்பில் இருப்பதற்கான இன்னோர் ஏற்பாடும் உண்டு.*

*நடவுக் காலங்களில் இவர் சில நாற்று முடிகளை எடுத்து அருகில் உள்ள வாய்க்கால், கன்னி போன்ற நீர்நிலைகளில் நட்டு வைப்பார். அதில் விளையும் நெல்லை அவரே அறுவடை செய்து கொள்வார்.*

***நீராணிக்கம்***

*நீராணிக்கம் பார்ப்பவர் கையில் மண்வெட்டி இருக்கும். நீர் மேலாண்மையைப் பராமரிப்பது இவரது பணி. இவருக்கும் அறுவடைக் காலங்களில் நெல்லைக் கூலியாகக் கொடுப்பார்கள்.*

*சில இடங்களில் தலையாரிகளே இந்தப் பணியைச் சேர்த்து பார்ப்பதும் உண்டு.*

***தானியக்குதிர்***

*இன்னும் சில பெரிய விவசாயிகள் பண்ணையில் வேலை செய்யும் கூலியாட்களுக்கு விளையும் நெல்லில் ஒரு பகுதியைத் தனது பண்ணையிலே தானியக் குதிர் அமைத்து, கொட்டி வைப்பர். அந்த நெல் முழுவதும் அந்த விவசாயத் தொழிலாளர் கள்தான் அனுபவிக்க வேண்டும். காது குத்து சடங்கு, திருமணம் போன்ற தேவைகளுக்கும் பிற தேவைகளுக்கும் அந்த விவசாயி அந்த நெல்லை எடுத்துக் கொள்வார். பண்ணை மாடுகளைப் பராமரிப்பது முதல் உரலில் நெல் இடிப்பது வரை இந்தக் கூலித் தொழிலாளர் பொறுப்போடு செய்து வந்தனர்.*

*பண்ணைக்கும் பண்ணைத் தொழிலாளர்களுக்கும் அப்படி ஒரு பிணைப்பு அக்காலத்தில் இருந்தது.*

*இப்போது தலையாரி கையில் தடி இல்லை. தலையில் முண்டாசு இல்லை, பெரிய மீசையும் இல்லை. சைக்கிளில் வருவார் போவார். அதுதான் இன்றைய நிலை.*

**விதைநெல் கோட்டை**

*மடி விதையைவிட பிடி விதைதான் முன்னே முளைக்கும் என்று ஒரு பழமொழி உண்டு. மழை விழுந்ததும் விதை விதைக்க வேண்டும். விதையைத் தேடிப்போனால், நிலத்தில் ஈரம் காய்ந்துவிடும் இதைத்தான் அந்தப் பழமொழி சொல்கிறது.*

*விதையைத் தேடி எங்கும் செல்லக்கூடாது என்றுதான் மூன்று அமாவாசையில் காய வைத்த விதையை சித்திரையில் கோட்டை கட்டி வைப்பார்கள். அந்த அளவுக்கு விதைக்கு முக்கியத்துவம் கொடுத்தார்கள் நம் முன்னோர்கள்.*

*களர் நிலத்துக்குக் களர் சம்பா உவர் நிலத்துக்கு உவர் முண்டான் வறட்சியைத் தாங்க வாடன் சம்பா - வெள்ளத்தை வென்றெடுக்க மடுவு முழுங்கி, குறைந்த நாட்களில் நிறைவான விளைச்சலுக்கு அறுபதாம் குறுவை என்று வேட்டி மடிப்புக்குள்ளே விதைகளைப் பொக்கிஷமாய் பாதுகாத்தனர் நம் முன்னோர்.*

*இன்று எல்லா விதைகளுக்கும் கடையைத் தேடி ஓடும் நிலை - அரிய விதைகளை எல்லாம் கைக்கு அருகே வைத்திருந் தும், வீரிய விதை என்ற விஷ வித்தைத் தேடி மரபணு மாற்றப் பட்ட மலட்டு விதைகளில் மயங்கிப் போய் மரண வாசலில் அடியெடுத்து வைத்து விட்டோம்.*

*நமது விதைகளில்தான் நமது வாழ்வு நமது சுதந்தரம் நஞ்சில்லா உணவு, தன்மானம், வீரம் எல்லாமே அடங்கி இருக்கிறது. இயற்கையின் ஆற்றலை மறந்து, திறக்கக் கூடாத அபாய கதவுகளை எல்லாம் திறந்து, உயிர்களின் அடிப்படைப் பூட்டுக்களை எல்லாம் அடித்து நொறுக்கி பரிணாம வளர்ச்சியின் அடிமடியிலே கை வைக்கப் பார்க்கும் மரபணு மாற்று விதைகள் என்ற பெயரில் கிளம்பி இருக்கும் பன்னாட்டுக் கம்பெனிகளின் மலட்டு விதைகளை மரண விதைகளை இந்திய மண்ணில் நுழைய விடாமல் கல்லறையில் சிறைவைப்போம்.*

**விதைகளே பேராயுதம்**

*விதைகள்தான் நமது பேராயுதம். அது நமது பாட்டியின் கையில் இருக்கவேண்டும். நமது வீட்டு அடுக்குப் பானையில் இருக்கவேண்டும் பண்டமாற்று முறையிலே அவை பாதுகாக்கப் படவேண்டும்.*

*அதை விடுத்து நமது நாட்டு விதைகளைப் புறந்தள்ளி புறக்கடை வழியாக நுழையும் மலட்டு விதைகளை நாம் ஏற்றுக் கொண்டால் பன்னாட்டு நிறுவனங்களிடம் விதைகளுக்காக நாம் கையேந்தி நிற்க வேண்டி வரும்.*

*வெண்டைவிதைக்கும், கத்தரிவிதைக்கும் நெல் முதல் எல்லா விதைகளுக்கும் ஏகப்பட்ட ரூபாய் செலவு செய்ய வேண்டிவரும். மொத்தத்தில் நமது விதைகளை நாம் இழந்து விட்டால் இந்திய தேசம் அமெரிக்கக் கம்பெனிகளின் கைப்பாவையாக மாறிவிடும். பிறகு அந்தக் கம்பெனிகள் மூலம் அமெரிக்கா நம்மை அடிமைப்படுத்தும். ஆம்.!*

*நம்மவர் முதல்வராக இருப்பார். இந்தியர் பிரதமராக இருப்பார். பன்னாட்டுக் கம்பெனிகள் மூலம் இவர்களை ஆட்டிப் படைப்பது அமெரிக்காவாக இருக்கும்.*

*நம் நாட்டு விதைகளை நாம் இழந்துவிட்டால் வீரிய விதை என்ற பெயரால் மரபணு மாற்றப்பட்ட மலட்டு விதைகளை மரண விதைகளை நாம் ஏற்றுக்கொண்டால் நாம் அடிமை இந்தியர்களாக அடமான்ம் வைக்கப்படுவது நடக்கும்.*

*இதைத்தான் இன்றைய இந்திய அரசும் சில மாநில அரசுகளும் பன்னாட்டு நிறுவனங்களின் கைக்கூலியாக செயல்படும் வேளாண் விஞ்ஞானிகளும் முழுமூச்சாகக் கொண்டுவர முயல்கின்றனர்.*

*இவர்கள் சிந்திக்கவில்லை இவர்கள் பேராசையின் விளைவால் அவர்களது வாரிசுகளும் சந்ததியினரும் பாதிக்கப்படு வார்கள் என்பதை! -*

*காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு என்பார்கள் விதைக்கும் இது பொருந்தும்.*

*நம் நாட்டு விதைகளே நமக்குப் பேராயுதம்! விவசாயிகளே நமது முப்பாட்டன் விட்டுச் சென்ற முத்து போன்ற விதைகளைத் தேடிப்பிடித்து விதைத்துப் பாருங்கள்.*

*விளைநிலம் பொன் விளையும் பூமியாக மாறும்!*

**வீட்டுக்குள்ளே வெள்ளம்**

*காடுதிருத்தி உழுது விதைத்து*
*பசிப்பிணி போக்க பயிருவிளைந்தது*
*அந்தக்காலம் ஒ... அந்தக்காலம்*

*கழனி கெடுத்து கட்டடம் எழுப்பி*
*வீட்டுக்குள்ளே வெள்ளம் புகுவது*
*இந்தக்காலம். ஒ... இந்தக்காலம்*

*பூச்சி புழுக்களை தின்ற நம் கோழி*
*முட்டையிட்டு குஞ்சுகள் பொறித்தது*
*அந்தக்காலம் ஒ.... அந்தக்காலம்*
*பூச்சியும் பொட்டும் கோழியைத் தாக்க*
*கூண்டுக்குள்ளே கோழி சாவது*
*இந்தக் காலம். ஒ... இந்தக்காலம்*

*ஆடுமாடு படுத்து எழுந்த இலைதழை*
*எருவையிட்டு நெல் விளைந்தது*
*அந்தக் காலம் ஒ. அந்தக்காலம்*
*பூமியில் உப்பு வெசங்களைக் கொட்டி*
*தாய்தரும் பாலும் வெசமாய்ப் போனது*
*இந்தக் காலம் ஒ... இந்தக்காலம்*

*விளைந்த விதையைக் குதிரினில் வைத்து*
*பருவத்தில் விதைத்து பயிரு விளைந்தது*
*அந்தக்காலம் ஒ... அந்தக்காலம்*
*கம்பெனி விற்கும். மலட்டு விதையைக்*
*காசுக்கு வாங்கி நட்டப்படுவது*
*இந்தக் காலம் ஒ...இந்தக்காலம்*

*மலையைப்போல் போர்கள் அமைத்து மாடுகன்னு*
*பேணுவது எல்லாம் அந்தக்காலம் ஒ... அந்தக்காலம்*
*உழவு மாட்டுக்கும் தீவனம் இன்றி கறிக்கடை நோக்கி கால்நடை நடப்பது*
*இந்தக் காலம் ஒ... இந்தக் காலம்*

*அந்தக் காலம் என்ற தலைப்பிட்டு வாழ்வியல் பேரிகை என்ற மாதஇதழில் நம்மாழ்வார் எழுதி பாடல் இது. காலத்தின் கோலத்தை அற்புதமாகச் சித்திரிக்கும் அருமையான பாடல்.*

*இந்தப் பாட்டுக்குள்ளே என் உள்ளம் சென்றதால் வீட்டுக்குள்ளே வெள்ளம் என்று இந்தப் பாடலுக்கு நான் தலைப்புக் கொடுத்திருக்கிறேன்.*

**கைராட்டையும் காந்தியும்**

*வெள்ளையர்கள் இந்தியாவை ஆண்டபோது, ஆங்கிலேயக் கம்பெனிகள் இந்தியாவைக் கொள்ளையடித்துக் கொண்டு போனது. பஞ்சமும் நோய்களும் பர்ரத மக்களைப் பிய்த்துத் தின்றது. அவர்களின் கண்ணீரைத் துடைப்பதற்கே மகாத்மா காந்தி போராடினார்.*

*கைராட்டை கொண்டு நாங்களே நூல் நூற்று, நாங்களே நெய்து, நாங்கள் உடுத்திக் கொள்கிறோம். மில் துணிகளை உடுத்தமாட் டோம். ஆலைகள் எங்களை அடிமைப்படுத்துகிறது. மில் எங்களை வேலை இல்லாதவர்களாக்கி வறுமையில் தள்ளுகிறது என்று போராடினார்.*

*இன்று இந்தியர் ஆட்சியில் பன்னாட்டு நிறுவனங்கள் நம்மைக் கொள்ளை அடிக்க அனுமதி கொடுக்கப்பட்டிருக்கிறது. காந்தி கண்ட கிராம ராஜ்யம் பூஜ்யமாகிவிட்டது.*

**உழவனை உழவனாக இருக்கவிடு**

*சிறு விவசாயிகளைச் சும்மா விட்டாலே போதும். அவருக்குப் பாரம்பரிய விதையும் நாட்டுப் பசுமாடும் சாக்கடை கலக்காத தண்ணியும் இருந்தால் போதும். இவருக்கு ஆராய்ச்சி நிலையமும் வேண்டாம். மரபணு மாற்று விதைகளும் வேண்டாம். உழவனை உழவனாக இருக்க விட்டாலே போதும். அவனும் வாழ்வான் வந்தாரையும் வாழ வைப்பான்.*

**பொன் விதைகள்**

*உலகமெல்லாம் பேரெடுத்தவன் – இந்த*
*ஊருக்கெல்லாம் சோறு கொடுத்தவன்*
*கார்காலச் சம்பா நெல்லு – என்னைக்*
*கண்டவர்கள் உண்டோ சொல்லு. (உலக*

*மானவாரி நிலத்தினிலே என்னைத் தூவினால்*
*மழையும் அந்த நேரம் பார்த்து பொழிந்து வைக்குமே*
*நீர்உயர நிலம் உலர நானும் உயருவேன்*
*வேர்விட்டு தூர்கட்டி கதிரைக் கொடுப்பவன்(உலக*

*மனித உழைப்புக்காக இந்த மண்ணு தந்தது*
*மகசூலை அள்ளித்தர தெய்வம் வந்தது*
*இயற்கை உரம்போட்டதாலே வந்த சிறப்பிது*
*இந்த நாட்டின் விவசாயம் என்றும் சிறந்தது (உலக*

*உலகமெல்லாம் பேரெடுத்தவன் – இந்த*
*ஊருக்கெல்லாம் சோறு கொடுத்தவன்*
*ஒட்டடையான் என்றே சொல்லு – என்னைக்*
*கண்டவர்கள் உண்டு*
*விஞ்ஞான வளர்ச்சி இல்லா அந்தக் காலத்தில்*
*விவசாயி இயற்கை உரம் போட்டு வளர்த்ததால்*
*செயற்கை உரம் மரபணு விதை எதுவுமே இல்ல*
*மாடுபூட்டி உழவு செஞ்ச மகசூல் தானே (உலக*

*நெல்லு கதிரு தாங்கித் தாங்கி நிமிர்ந்து நிற்கவே*

*இயற்கைவழி வேளாண்மையில் வாழ்ந்து காட்டவே*

*என்னைப் போன்ற பொன்விதைகள் மண்ணைக் கண்டதே*

*கொண்டு வந்த உழவர்க்கெல்லாம் கோடி வணக்கமே.*

*உலகமெல்லாம் பேரெடுத்தவன் – இந்த*

*ஊருக்கெல்லாம் சோறு கொடுத்தவன்*

*பாரம்பரிய நெல்லு வகை - எல்லாம்*

*கண்டுபிடித்து மண்ணில் விதை!*

### *தொப்பிக்காரன் சம்பா*

*தொப்பி அணிந்த வெள்ளைத் தோல்காரன் கொடுத்த நெல், தொப்பிக்காரன் சம்பா. சாலையில் போனபோது நிலத்தில் செழிப்பாக வளர்ந்த நெல் கதிரைக் கண்டெடுத்து அடுத்த பருவத் தில் விதைத்தான் அதிலும் சிறந்த கதிர்களைத் தேர்வு செய்தான். மீண்டும் விதைத்தான் இப்படிப் பலமுறை பொறுக்கு விதை களைத் தேர்வு செய்து விதைத்தபின் கிடைத்ததுதான் கிச்சடிசம்பா!*

*ஒரு விதை பல கிளைகளாகக் கிளைக்கின்ற செடி நெற்செடி செடியின் அடித்தூரில் இருந்தே சிம்பு வெடிக்கின்றது. இங்கே வித்தியாசங்கள் உண்டாகின்றன.*

*இவற்றைப் பயன்படுத்தி நமது மலைவாழ் மக்கள் இலட்சக்கணக்கான ரகங்களை உண்டு பண்ணினார்கள். அவை மண்ணிற்கு ஏற்றவை. பருவத்திற்கு ஒத்தவை.*

*மருந்தாக்கூட பயன்படுபவை. இப்படிப் பல வகைப்பட்ட விதைகள் இருந்தன. அவற்றை மீட்டெடுக்க விவசாயிகளால்தான் முடியும். விவசாயிகளால் மட்டுமே உலகம் பிழைத்திருக்க முடியும்.*

# 7. வீரிய விதைகளின் சோகக்கதை

*1966 இல் ஐ.ஆர். 8 வெளியிடப்பட்டது.*

*1968 இல் ஐ.ஆர். 8 நெல்லை பிளைட் நோய் தாக்கியது.*

*1970-71 இல் ஐ.ஆர். 8 நெல்லை துங்ரோ வைரஸ் தாக்கியது.*

*1969 இல் ஐ.ஆர். 20 வெளியிடப்பட்டது.*

*1973 இல் ஐ.ஆர். 20 நெல் ரகத்தைப் பழுப்பு தத்துப் பூச்சி (புகையான்) தாக்கியது. கூடவே வைரசாலும் தாக்கப்பட்டது.*

*1973 இல் ஐ.ஆர். 26 நெல் ரகம் வந்தது*

*. 1976 இல் இதையும் ஒரு புதுவகை நோய் தாக்கியது. 1980 இல் ஐ.ஆர் 50 வெளியிடப்பட்டது. பிளாஸ்ட் என்னும் குலைநோய் இதைத் தாக்கியது. வாடல் நோய்க்கு ஆளாகி தத்துப்பூச்சியாலும் தாக்கப்பட்டது.*

*அன்று நமது பாரம்பரிய விதைகளை இயற்கை பாதுகாத்தது.*

*இன்று அறிவியலால் உருவாக்கப்பட்டது அறிவிய லாலே தாக்கப்பட்டது. இதுதான் பசுமைப் புரட்சியின் விளைவு. (பாடல்)*

*பெண் : சொன்னா நீங்க கேட்டுக்கணும்*

*சொன்னதைக் காதில் போட்டுக்கணும்*

*மண்ணோட வளம் குறைஞ்சி போச்சு*

*மனித வாழ்க்கை மறைஞ்சு போச்சு*

*எல்லாத்துக்கும் காரணம் – இந்தச்*

*செயற்கை உரம் போட்டதாலே*

*, நெல்லுவய லோட நெலம இப்ப சரியில்ல - அடக்*

*காலம் காலமா வெதைச்ச*

*விதையைக் கண்டுபிடிச்சிட வேணுமுங்க.*

*ஆண் : சொன்னா நானும் கேட்டுக்குறேன்*

*சொன்னதைக் காதில் போட்டுக்குறேன்*

*மண்ணோட வளம் மாறி வரும்*

*மனித வாழ்க்கையே தேறி விடும்*

*எல்லாத்துக்கும் காரணம் – இங்கே*

*இயற்கை வழி வேளாண்மையில் - நெல்லு வயலோட நெலம இனி சரியாகும் - அட காலம் காலமா விதைச்ச விதையை*

*தேடிப் பிடிச்சிடும் நேரமிது!*

*பெண் : காடு கழனியைக் காக்க இனி - நாம காண வேண்டியது என்ன வழி?*

*ஆண் : தேடிப் பிடிச்சு நல்ல விதையோட இயற்கை உரம் போடணுமே*

*பெண் ; நோய் நொடிகள் பெருகி இங்கே*

*மனித இனம் வாடுவதேன்*

*ஆண் : பூச்சிக்கொல்லி மருந்துகளால்*

*உணவும் விஷம் ஆனதனால்*

*பெண் : பச்சை பசுமையாய் பயிர்வளர்ந்திட போட வேணடியது என்ன எரு*

*ஆண் : அமுத கரைசல் உருவாக்கி*

*அடி உரமாய் போட வேணும்*

*பெண் : பூச்சி தாக்கம் இல்லாமலே*

*காக்கும் மார்க்கம் சொல்லுங்களேன்*

*ஆண் : மூலிகைக் கரைசல் இருக்குதுங்க*

*முடக்கி வைக்கும் பூச்சிகளை*

*இருவர் : அட இயற்கை வழி வேளாண்மையே*

*நஞ்சில்லா உணவு தரும்*

*செலவில்லா வரவு வரும்*

*இயற்கை வளம் பெருகிவிடும்*

**தேமோர் கரைசல்**

*கலப்படம் இல்லாத தேங்காய்ப்பால், நன்றாகப் புளித்த மோர் இரண்டையும் சம அளவு கலந்து ஒரு மண்பானையில் ஊற்றி, துணி போட்டு மூடிவைக்க வேண்டும். பத்து நாளில் தேமோர் கரைசல் தயாராகிவிடும். இதை ஒரு லிட்டருக்கு பத்து லிட்டர் தண்ணீர் கலந்து எழுபதாவது நாளில் பயிருக்குத் தெளிக்க பூக்கும் திறன், பால் பிடிக்கும் திறன் அதிகரிக்கும். பயிர் வளர தேவையான பல சத்துக்கள் இருப்பதால் நல்ல பலன் கிடைக்கும். பூக்கும் பருவத்தில் எல்லாத் தோட்டப் பயிர்களுக்கும் இந்தக் கரைசலைத் தெளிக்கலாம். 1 லிட்டருக்கு 20 லிட்டர் தண்ணீர் கலப்பது நல்லது.*

**பழ கரைசல்**

*பப்பாளிப் பழம் 1 கிலோ, கனிந்த பரங்கிப் பழம் 1 கிலோ, கனிந்த வாழைப்பழம் 1 கிலோ, கழிவு வெல்லம் 1 கிலோ முட்டை ஒன்று தண்ணீர் 5 லிட்டர் - இவை அனைத்தையும் சேர்த்து நன்றாகக் கலக்கி பிளாஸ்டிக் டிரம்மில் போட்டு காற்றுப் புகாமல் மூடிவைத்து பத்து நாட்கள் கழித்துத் திறந்து பார்த்தால் மேலே ஆடை போல் படிந்திருக்கும். அதை எடுத்துவிட்டு மீண்டும் காற்றுப் புகாமல் மூடி வைக்க வேண்டும. 30 நாட்களில் பழ கரைசல் கிடைக்கும். இதை 1 லிட்டருக்கு 20 லிட்டர் என்ற அளவில் தண்ணீரில் கலந்து நாற்று நட்ட 10 ஆம் நாள் பயிருக்குத் தெளித்தால் நல்ல வளர்ச்சி கொடுக்கும். மண்ணில் உயிரோட்டம் இருக்கும்.*

**மூலிகைப் பூச்சி விரட்டி அல்லது ஐந்திலைக் கரைசல்**

*கசப்பான இலைகள், ஆடு மாடு திங்காத இலைகள், உடைத்தால் பால் வரும் செடி கொடி இலைகள், இவற்றில் ஏதாவது ஐந்து வகை இலைகளை (குறிப்பாக எருக்கன் இலை, நொச்சி இலை, பீநாறி இலை (ஆற்றோரம் எலுமிச்சை இலைபோல் காணப்படும்.) ஆடாதொடா, (நெய்வேலி காட்டாமணக்கு) சம அளவு எடுத்து இடித்து, கோமியம் கலந்து 10 நாட்கள் ஊறல் போட்டால் மூலிகைப் பூச்சி விரட்டி தயாராகிவிடும். இந்தக் கரைசல் தெளித்தால் பூச்சிகளுக்குப் பயிர்வாடை தெரியாது. இது 75% பூச்சி விரட்டியாகவும் 25% பயிர் வளர்ச்சி ஊக்கியாகவும் பயன்படுகிறது. பூச்சி வருவதற்கு முன் இதைத் தெளிக்க வேண்டும்.*

*பூச்சி வந்தபின் அழிக்க 4 துண்டு இஞ்சி, 10 பல் பூண்டு, 10 பச்ச மிளகாய் சிறிது பெருங்காயம் சேர்த்து, துவையலாக அரைத்து, ஐந்திலை கரைசலோடு கலந்து தெளிக்கவும். (தேவையானால் மண்ணெண்ணெய் சேர்க்கலாம்.) அவசரத் தேவைக்கு ஐந்திலைக்கரைசல் தயாரிக்க எல்லா இலைகளையும் சம அளவு எடுத்து இடித்து நீரில் போட்டு நன்கு கொதிக்க வைத்து சாறாக எடுத்து ஆறியபின் 1-10 என்ற அளவில் நீர் சேர்த்துத் தெளிக்கலாம். கோமியம் கலந்தால் பலன் அதிகம்.*

**மகாநதி**

*விவசாயம், எய்ட்ஸ், மகளிர் சுய உதவிக்குழு. மூன்று வழிகளில் பணிபுரிய பட்டதாரிகள் தேவை. என்ற விளம்பரம் நாளிதழில் கண்டேன். எய்ட்ஸ் பற்றிய விழிப்புணர்வு என்றால் அதில் நாடகம் நடத்த வாய்ப்பு கிடைக்கும் என்ற நப்பாசை எனக்கு. ஆனால், அவர்கள் கேட்ட கல்வித் தகுதி என்னிடம் இல்லை. இருப்பினும் போய் பாருங்கள் என்று தூண்டினாள் என் இல்லத்தரசி.*

*பனைமேடு - சிக்கலுக்கு முன் உள்ள சிறிய கிராமம். அங்கே ஒரு சிறிய பங்களா. அங்கேதான் தேர்வு. ஒரு படிவம் கொடுத்து பூர்த்தி செய்து தரும்படிக் கேட்டார்கள். எல்லாப் பட்டதாரிகளும் பைலோடு நின்றார்கள். நான் மஞ்சள் பையோடு நின்றேன். கல்வித் தகுதி கேட்டிருந்தார்கள். பத்தாம்*

வகுப்பு படித்திருப்பதை மறக்காமல் குறிப்பிட்டேன். தெரிந்த மொழி என்று கேட்டிருந்தார்கள். தமிழ் மட்டும் என்று அழுத்தமாகக் குறிப்பிட்டேன்.

நானும் தேர்வுக்கு அழைக்கப்பட்டேன். ஐந்து பேர் அங்கு இருந்தார்கள். நாடக ஆல்பத்தைக் கொடுத்தேன். ஆர்வத்தோடு பார்த்தார்கள்.

"நீங்கள் நாடக நடிகரா?' என்றார்கள்.

"ஆம், நாடக ஆசிரியரும்கூட' என்றேன்.

"அப்படியா?' என்றார்கள். - .

ஐவர் குழு என்னுடன் ஆர்வமாக உரையாடி விடை கொடுத்தார்கள்.

மறுநாள். நான் தேர்வு ஆன விவரம் அலைபேசி மூலம் தெரிவித்தார்கள்.

அங்கு மற்றவர்களுக்குக் கொடுக்கப்பட்ட எல்லாப் பயிற்சிகளிலும் நான் கலந்து கொண்டேன்.

நான் எய்ட்ஸ் பற்றிச் சிந்தித்தேன். அங்கே இயற்கை விவசாயம் பற்றி பாடம் சொன்னார்கள்.

எனக்குள் ஏதோ ஒரு பறவை சிறகடித்தது.

விவசாயத்தைப் பொறுத்தவரை 'விதைப்போம் அறுப்போம்"என்பது எனது கொள்கையாக இருந்தது. செயற்கை விவசாயத்தின் பக்கம் நான் கவனம் செலுத்தவே இல்லை. எந்தவிதப் பக்கபலமும் இல்லாத நிலையில் 'விதைப்போம், அறுப்போம்"என்ற சிந்தனை எனக்குள் சிறைப்பட்டு போனது.

இதோ விதைப்போம் அறுப்போம் என்று பாடம் நடத்துகிறார் சீனிவாசன் சார்.

"விதைப்போம் அறுப்போம் என்பது சாத்தியமா? கம்பீரத்தோடு கேள்வி எழுந்தது என்னிடமிருந்து.

"சாத்தியமே!?? என்றார் சீனிவாசன் சார்.

அதன்பிறகு நான் விவசாயம் சார்ந்த எல்லாப் பயிற்சி களிலும் கலந்து கொண்டேன்.

ஆழியூர் பண்ணையில் களப் பயிற்சிக்குச் சென்றேன். பாரம்பரிய நெல் ரகங்கள் 10 நாள் நாற்று பறித்து நட்டார்கள்.

முப்பது நாட்களுக்கு மேலான நாற்றுகளை நடவு செய்வதையே பார்த்த எனக்கு அது வியப்பாக இருந்தது. அதையும் நிறைய இடைவெளி விட்டு நட்டார்கள். இல்லை இல்லை. சேற்றின் மேலே வைக்கச் சொன்னார்கள். சாய்ந்த நாற்றுகள் மறுநாள் நிமிர்ந்து நின்றன. இயக்குநர் மா. ரேவதி அவர்கள் இயற்கை விவசாயம் பற்றி நாடகம் எழுத பணித்தார்கள். பசுமை புரட்சியின் விளைவுகளைப் பற்றி எனக்குப் பல விஷயங்களைச் சொன்னார்கள்.

நாடக நடிகரான, நாடக ஆசிரியரான என்னை, இயற்கை வழி வேளாண்மை பயிற்சியாளராகப் பட்டை தீட்டினார்கள்.

இன்று நான் ஒரு விவசாயி. அதுவும் முழுமையான இயற்கை விவசாயி!

எனது வயலில் "டிராக்டர் உழுவதில்லை. ஏர் மாடுகளே எனது வயலை உழுதுகின்றன. இயற்கை எரு போடுவதால் மண்புழு பெருகிவிட்டது.

மலட்டு விதைகளை நான் பயிரிடுவதில்லை. பாரம்பரிய விதைகள் மட்டுமே நான் பயிரிடுகிறேன். விதை நெல் அளவு குறைவு-நாற்று பறி வேலை இல்லை. ஒற்றை நாற்று நடவு

முறையில் 10 நாள் நாற்றை எடுத்து வைக்கிறேன். அமுதக் கரைசல் மட்டுமே தெளித்தேன். ஒரு முறை களை எடுத்தேன். கோனோ வீடர் பயன்படுத்துவ தில்லை. அறுவடை அடிப்பது எல்லாம் ஆட்களின் வேலைதான். இயந்திர மயமாக்கல் எனது விவசாயத்தில் அறவே கிடையாது.

விதைப்போம் அறுப்போம்"என்ற இந்தத் தொகுப்பு நூல் எழுதுவதற்கும் தூண்டுகோலாக இருப்பது மகாநதி என்ற அந்த மாபெரும் அமைப்பில் நான் கற்ற பாடங்கள் தாம் காரணம்

இப்படித் தமிழ்நாடு இயற்கை உழவர் இயக்க இயக்குநர் மா. ரேவதி அவர்கள் காட்டிய வழியில் வெற்றி நடை போட்டுக்கொண்டு என் பயணம் தொடர்கிறது.

**விஷமாகிப் போனது உடம்பு**

*ஏத்தங்கட்டி எறைக்கப் போற*
*கமலை இறவை பிடிக்கப் போற*
*வயக்காட்டில் உழைக்கப்போற பாரப்பா*
*இயற்கை விவசாயம் பண்ணப் போற கேளப்பா*

*பூச்சிக்கொல்லி கெமிக்கல் உரம்*
*போட்ட உணவு சாப்பிட்டதால்*
*விஷமாகிப் போனது என் உடலப்பா*
*தேகம் இனிமேலே தாங்கிடுமா சொல்லப்பா*

*போலியோ சொட்டு மருந்து*
*பொறுப்போடு கொடுத்தபின்னே*
*கெமிக்கல் உணவைக் கொடுக்குறியே கண்ணம்மா-உன்*
*பிள்ளைக்கு விஷத்தை நீயே ஊட்டுறது ஞாயமா? -*

*கோட்டை கட்டி வாழ வைத்த*
*பாரம்பரிய விதை ரகங்கள்*
*தேடிப்பிடித்து போட்டு வைத்தேன் தோட்டத்தில்*
*அது அறுவடைக்கு வந்துவிடும் தை மாதத்தில்*

*கல்லைத் தூக்க மாப்பிளைச் சம்பா*
*வறட்சி தாங்க வாடன்சம்பா*
*வாழ வைக்கும் குடவாழை என்றானே*
*கழிசல் நோய் நீக்க பிச்சவாரி கண்டேனே – மாட்டுக்கு*
*கழிசல் நோய் நீக்க பிச்சவாரி கண்டேனே!*

*ஒட்டடையான் நெல் விதைச்சா*
*இருமுறை நாம் அறுத்திடலாம்*
*செலவு குறையும் பலன் அதிகம் என்றானே*
*ஒரே கல்லில் இரு-மாங்காய் கண்டேனே!*

*வெள்ளப் பெருக்கைத் தாங்கி வரும்*
*கார்நெல்லை வெதைச்சி புட்டா*
*படகில் போயி அறுத்திடலாம் கிட்டப்பா*
*அங்கே ஆடிப்பாடி மகிழ்ந்திடலாம் செட்டப்பா*

*உப்பு நிலத்தில் உவர் முண்டான்*
*பயிராக்கிப் பார்த்திடலாம்*
*சதுப்பு நிலத்தில் களர் சம்பா நட்டேனே*
*பக்கத்தில் குழிவெடிச்சான் நெல்லும் போட்டு வச்சேனே*

*அறுபதாம் குறுவையுண்டு*

*வாழைப்பூசம்பா கண்டு*

*மடுமுழுங்கி நெல்லுமுண்டு மங்கம்மா – அது*

*மானத்தைக் காத்துவிடும் தங்கம்மா!*

**மோதிரக்கை போட்ட குட்டு**

*ஒருசமயம் பயிற்சி வகுப்பு நடைபெற்றபோது என்னைப் பற்றிக் குறிப்பிட்ட ரேவதி அவர்கள் இப்படிக் கூறினார் : "நேர்முகத் தேர்வு நடந்தபோது பட்டதாரிகளுக்கு நடுவே பத்தாம் வகுப்பு என்ற குறிப்போடு ஒரு படிவம் இருந்தது. நாம் கேட்ட கல்வித் தகுதி இல்லை. இருந்தாலும் இந்த நேர்முகத் தேர்வில் தன்னம்பிக்கையோடு கலந்து கொண்டு இருக்கிறாரே யார் அந்த நபர் என்று பார்ப்போம் என்று அவரையும் அழைத்தோம். ஏழு நிமிடம் அவரிடம் பேசினோம். அந்த ஏழு நிமிடத்தில் அவரைப் பற்றிய தகவல் கலை வடிவில் அவரைப் பயன்படுத்த எனக்குள் சிந்தனை வந்தது" என்று குறிப்பிட்டார். அந்த வார்த்தைகள் அந்த இளைஞர்கள் மத்தியில் எனக்கு மகுடம் சூட்டியதுபோல் இருந்தது.*

***பஞ்சகவ்யா***

*இயற்கை வழி வேளாண்மையின் உயிரோட்டமாகப் பயன்படும் அற்புதக் கரைசல். தமிழில் ஆவூட்டம் என்று பெயர். ஆ. என்றால் பசு, நாட்டுப் பசு மாட்டின் சாணம் - கோமியம், பால், தயிர், நெய் பசுதரும் இந்த ஐந்து பொருள்களின் கலவை பஞ்சகவ்யா சித்த மருத்துவநூல்களில் பஞ்சகிருதம் என்ற குறிப்பும் உள்ளது. வந்த நோயைப் போக்கும், வரும் நோயைத் தடுக்கும் அற்புத மருத்துவக் குணம் கொண்டது. இறைவழிபாட்டுக்கு உரிய பொருள் பஞ்சகவ்யா. இன்று பயிர் வளர்ச்சி ஊக்கியாக இயற்கை வழி வேளாண்மையில் சிறப்பிடம் பெற்றுவிட்டது. இத்துடன் கனிந்த வாழைப்பழம் கரும்புச் சாறு, இளநீர் மற்றும் கள் இவற்றையும் சேர்த்து பிளாஸ்டிக் அல்லது மண் தொட்டியில் போட்டு, தினமும் காலை மாலை இருவேளை கலக்கிவிட வேண்டும். இப்படி முப்பது நாட்கள் ஊறல் போட்டுக் கலக்கி வர பஞ்சகவ்யா தயாராகிவிடும். இந்த ஆவூட்டத்தை 10 லிட்டர் தண்ணீரில் 300 மில்லி என்ற அளவில் கலந்து பயிருக்குத் தெளிக்க வேண்டும். இது பயிர் வளர்ச்சி ஊக்கியாகவும் 25% பூச்சி விரட்டியாகவும் பயிருக்குப் பலன்தருகிறது.*

*இந்தக் கலவையில் நெய்க்குப் பதில் கடலைப் புண்ணாக்கு சேர்க்கலாம். கரும்புச்சாறு கிடைக்காதபோது, வெல்லம் சேர்க் கலாம். கள் கிடைக்காத போது ஈஸ்ட் சேர்த்துக் கொள்ளலாம்.*

***சைவப் பூச்சிகள்***

*வயலில் பூச்சியைக் கண்டவுடன் உடனே பூச்சிக் கொல்லி மருந்தை வாங்க கடைக்கு ஓடுகிறோம். அது தவறு*

*பயிரில் பூச்சி எப்படி வருகிறது?*

*யூரியாவைப் போட்டவுடன் பயிரில் பச்சயம் கூடுகிறது. கூடுதலான பச்சயத்தை எடுக்க பூச்சிகள் வருகின்றன.*

*பூச்சிகளைக் கண்டதும் உழவர் பூச்சி மருந்துக் கடைக்கு ஒடுகிறார்.*

*இயற்கைவழி வேளாண்மமையில் பூச்சிகள் தொல்லை கொடுப்பதில்லை.*

*அதுவும் பாரம்பரிய நெல் ரகங்களில் பூச்சி தாக்குதல் அறவே இல்லை.*

*இதற்குக் காரணம் பாரம்பரிய நெல் நாற்றுகள் தடிமனாகவும் சுரசுரப்பான சுனை கொண்டதாகவும் இயற்கையே அதற்குப் பாதுகாப்பாக இருக்கிறது*

*செயற்கை வழி பயிரில் இலைகள் நெகிழ்ந்து கொடுப்பதால் பூச்சிகள் சிரமமின்றி பச்சயத்தைச் சாப்பிட முடிகிறது.*

*பூச்சிகளில் சைவப்பூச்சி அசைவப் பூச்சி என இருபெரும் பிரிவு உண்டு.*

*இதில் சைவப் பூச்சிகள் பச்சயத்தைச் சாப்பிட்டு பயிரை நாசப்படுத்துகிறது. மேலும், இந்தச் சைவப் பூச்சிகள் பயிருக்கு மறைந்து வாழும்.*

*உழவர் பூச்சிக்கொல்லி மருந்து தெளிக்கும்போது இந்தப் பூச்சிகள் பயிருக்குள் பாதுகாப்பாகப் பதுங்கிக் கொள்ளும்.*

*இந்தப் பூச்சிகளைப் பிடித்துத் தின்னும் அசைவப் பூச்சிகள் வெளியில் நடமாடும் உழவர் தெளிக்கும் பூச்சிக்கொல்லி மருந்துகள் அசைவப் பூச்சிகளை அழித்து விடுவதால் சைவப் பூச்சிகள் தனக்கு வெளியில் எதிரிகள் இல்லாத நிலையில் புது வேகத்தோடு பல்கிப் பெருகி பயிரை நாசப்படுத்தும்.*

*பலமுறை பூச்சிக்கொல்லி மருந்து தெளித்ததும் பூச்சி கட்டுப்படவில்லை என்று உழவர் புலம்ப ஆரம்பித்து விடுவார்.*

*இதுதான் இன்றைய விஞ்ஞான வளர்ச்சியில் நாம் கண்ட வேளாண்மை! எனவே பூச்சிகளைக் கண்டதும் கடைக்கு ஓடாதீர்கள்.*

### ***தீமை செய்யும் பூச்சிகள்***

*பயிருக்குள் மறைந்து வாழும் பச்சயத்தைச் சுரண்டித் தின்னும் சைவப் பூச்சிகள்கள்தாம் பயிருக்குத் தீமை செய்யும் பூச்சிகள். அவை :*

*1. குருத்துப் பூச்சி, 2. பச்சை தத்துப் பூச்சி, 3. இலை சுருட்டுப்புழு, 4. புகையான்.*

### ***அசைவப் பூச்சிகள்***

*பயிருக்கு வெளியில் வாழும் சைவப் பூச்சிகளைப்*

*பிடித்துத் தின்னும் பயிருக்கு நன்மை செய்யும். அவை :*

*1. குளவிகள்,*

*2. நீர்தாண்டி,*

*3. ஓநாய் சிலந்தி,*

*4. தரை வண்டு,*

*5. பொறிவண்டு,*

*6. குள்ள சிலந்தி,*

*7. நீர்மிதப்பேன்,*

*8. நீளக்கொம்பு வெட்டுக்கிளி,*

*9. வட்ட சிலந்தி,*

*10. மிரிட் நாவாய்ப் பூச்சி.*

*மேலும் பயிருக்கு நன்மை செய்யும் பூச்சிகள் பொறிவண்டு, சிலந்தி, சிர்பிட் ஈ, மஞ்சள் குளவி, பச்சைக் கண்ணாடி இறக்கை பூச்சி, சால்சிட் குளவி, ஒல்லி இடுப்புக் குளவி, இறை விழுங்கி குளவி, எறும்புக் குளவி, அகன்ற இடுப்புக் குளவி, கொலைக்கார நாவாய்ப் பூச்சி, தட்டான் ஊசி தட்டான், ஆந்தகோரிட் நாவாய்ப் பூச்சி, நோபிட் நாவாய்ப் பூச்சி.*

*இவ்வளவு நன்மை செய்யும் பூச்சிகள் வயலில் இருக்கின்றன.*

*இவற்றையெல்லாம் பிடிக்கப் பறவைகள் வருகின்றன. தண்ணீருக்குள் வாழும் தவளையும் தேரையும் பாம்பும் மீன்களும்கூட பூச்சிகளைக் கொல்லும்.*

*இப்படி இயற்கையே பயிருக்குத் தேவையான பாதுகாப்பை உறுதி செய்யும்போது, சில தீமை செய்யும் பூச்சிகளை அழிக்க, நாம் பயன்படுத்தும் பூச்சிக்கொல்லி மருந்துகளால் தவளையும் தேரையும் பறவையும் பாம்பும் மீன் மற்றும் பயிருக்கு நன்மை செய்யும் பூச்சிகளும் அழிக்கப்பட்டு இயற்கையின் சமநிலை கெட்டு, பயிருக்குத் தீமை செய்யும் பூச்சிகள் சுதந்தரமாக வாழும் வழியைத்தான் நாம் செய்கிறோம்.*

*குறிப்பு: குருத்துப் பூச்சி இருந்தால் பயிர் நிறைய தூர் கட்டும் என்பது வேளாண்துறை அலுவலரின் புதிய தகவல்.*

***RICE IS LIFE***

*Rice is one or Asia's most deeply revered and treasured crops. It is central to the Asian way of life. The Culture spirituality tradions and norms. Rice constitutes the staple food of three billion Asians. which is half the world's Population. Rice has been growe in Asia for the last 7000 years.*

***RICE INFUTURE HANDS***

*Agriculture is a sector where our children are effectively denied education which blights their future. It is necessary to introduce. agriculture in the schools so that future of this country will be in safe hands. Ourability to improve lives depends on a crucial characteristic - genetic diversity. The legacy of our country. We have to create a legacy for the future of our children and their children, ensuring a better*

*quality of life for all.*

***RICE DEVERSITY***

*India had a host of rice varieties, the versatility in climate, soil, topography and method of cultivation in our Country has made, it a souice of diversity in rice. There is also a significant inter specificdiversity includes dry & wetland, Medicinal aromatic deepwater and so on that are of importance in terms of their genetic value.*

***DEEPWATERRICE***

*The Varada basin is a host for deepwater rice varieties. Which can with stand flooded fields for nearly a month. These varieties are still being. grown in this area as modern highlyeiding varieties. cannot survive in the climatic conditions prevalent in this area.*

***MADCNAL RICE***

*India has a rich diversity of rice especially madicine rice varieties. Unfortunately the entire genetic resources are getting extinct, as the Crop species are no longer cultivated. Reviving and restoring this valuable resource is most important, test we lose this wonderful Culfural heritage.*

***RICE AND WOMEN***

*Rice and women are inseparable. Women intralitional societies. say that rice is more than life to them. They treat rice as their monther and take care of her. Moreover rice provide a livelihood and Sustenance to women more than any other crop in india. Women believe that if we poison our mother our future would be in danger. .*

***RICE CULTURE***

*Rice means life it has been the cornerstone of our food, systems Our languages, Our Cultures and Our livelihoods for thousands of years. Rice which is considered. the epitome of sacredness is rooted in all festivals and rituals and a celebration either when the crop is being planted or harvested.*

***RCEAS FOOD***

*Rice can be eaten raw and also in processed forms. There are different varieties of rice which can be made in to different delicacies, each with Special qualities. When high yielding varieties were introduced to increase productivity, farmers lost many of their local seeds which lead to erosion of food diversity and to many healthdisorders.*

***RICE ASFODEER***

*Farmers in South India believe that paddy is for the household fodder is for the cattle and the roots are for the soil. cattle is part of the household. Famers used to Cultivate certain varieties of paddy mainly of feed the cattle. When short statured varieties of rice were introduced farmers experienced todder shortage and many termers had to sell their cattle. -*

***RCE SAVERS***

*inspite of all the diffeculties, paddy farmers continue to cultivate and save paddy and ensure food Security of the Country. They continue to save local seed and thus maintain a good germplasm for future generations without any support from the government.*

***FARMERS ARE BREEDEES***

*Our traditional varieties are the products of millions of yeras where informers have developed varieties that have evolved through their experiences, practices and undersytanding. Farmer scientists like Shankargure, Debul Das, Linamadaiah, rajendra and so on have developed rice varieties which are performed better than high yielding varieties.*

***RICE ASART***

*A rare traditional art form in the malnad region is the paddy festoon. Making these decorative pieces from paddy straw is an exacting process. Chandarashekar and family have expanded their repertoire and have blended both modern and traditional patterns to Create unique and ethinic items.*

***மரத்திருகை***

*சமீபத்தில் கர்நாடக மாநிலம் சிவமோகாவில் நடந்த நெல் திருவிழாவில் கலந்துகொண்டேன். அங்கே கண்காட்சியில் பெரிய மரத்திருகை விற்பனைக்கு வைத்திருந்தார்கள். மரத்திலும் திருகை உண்டா என்ற வியப்பு எழுந்தபோது கடந்த காலங்களில் நாகை மாவட்டம் வேதாரண்யம் குருகுலத்தில் மரத்திருகை கொண்டுதான் அரிசியை அரைப்பார்களாம். உமியை மட்டும் போக்கி சத்துள்ள அரிசி கிடைக்குமாம்.*

***உரலும் உலக்கையும்***

*இது என்ன? மறந்ததை எல்லாம் நினைவூட்டுகிறேன் என்று பார்க்கிறீர்களா? இயற்கை விவசாயத்திற்கு மாறினால் மட்டும் போதாது. நமது பாரம்பரிய நெல் ரகங்களைப் பயிரிடவேண்டும். இயற்கை வழியில் உற்பத்தியாகும் நமது நெல்லை உலக்கையால் குத்தி தவிடு நீங்காத தரமான கைக்குத்தல் அரிசியை உற்பத்தி செய்து சாப்பிடவேண்டும். -*

***ஆரோக்கியம் கெடுத்த அரிசி மில்***

*காலம் காலமாக நெல்லை உரலில் இட்டு உலக்கை யால் இடித்து உமியை நீக்கி தவிட்டுடன் சேர்ந்த அரிசியை நம் முன்னோர்கள் சாப்பிட்டார்கள். இது அந்தக் கால மக்களுக்கு வேலை வாய்ப்பைத் தந்து நல்ல உடற்பயிற்சியாக அமைந்தது. தவிட்டுடன் சேர்ந்த முழுமையான அரிசியை உட்கொண்டதால் உடலில் வைட்டமின் 'பி'மற்றும் நார்ச்சத்தும் சேர்ந்தன. அப்படிப்பட்ட நம் மக்களிடம் ஆங்கிலேயர் அறிமுகப்படுத்திய அரிசி மில் மிகப்பெரிய பாதிப்பை ஏற்படுத்திவிட்டது.*

***அந்தஸ்தின் அடையாளம்***

*இன்று வைட்டமின் சத்து நிறைந்த தவிட்டை நீக்கிவிட்டு வெறும் மாவுச்சத்து மட்டுமே உள்ள மல்லிகைப் பூப்போன்ற வெள்ளை அரிசியைச் சாப்பிடுவதை நாகரிகமாகக் கருதுகிறோம். ஆனால் நம்மால் ஒதுக்கப்படும் தவிடு மருந்துக் கம்பெனிகளால் வாங்கப்பட்டு வைட்டமின் மாத்திரைகளாகத் தயாரிக்கப்பட்டு நம்மிடமே விற்கப்படுகிறது.*

*அந்தஸ்தின் அடையாளம் என்று ஒதுக்கிய தவிட்டை அதிக விலை கொடுத்து மாத்திரைகளாக வாங்கிச் சாப்பிடுவது புத்திசாலித்தனமா?*

*படித்தவர் பாமர மக்கள் என்று எல்லாருமே இதே தவறைத்தான் செய்கிறோம். படிப்பு நமக்குப் பகுத்தறி வைத் தரவில்லை. அது வாழ்வுக்குத் தேவையில்லாத பல விஷயங்களை நம்மிடம் புகுத்திவிட்டது.*

*ஆலும் வேலும் பல்லுக்குறுதி என்று சொல்வார்கள் அதைவிட்டு பேஸ்ட்பிரஸ் என்று போட்டு தேய்த்து எனாமல் தேய்ந்து போய்விட்டது என்று காலம் போனகடைசியில் மூலம் வந்து தள்ளிய கதையாக டாக்டரைத் தேடி அலைகிறோம்.*

*பக்கத்துத் தெருவுக்குக் கூட இரு சக்கர வாகனம் விடியற்காலை எழுந்தால் தேவையற்ற வாக்கிங்*

*உழைப்பதற்கு மனமில்லை. ஆனால், பணம் கட்டி உடற்பயிற்சிக் கூடங்களில் சேர்ந்து கடினமான உடற்பயிற்சி செய்கிறோம்.*

*நடைப்பயிற்சியில் கூட சாக்ஸ் பூட்ஸ் என்று போட்டு பாதத்தைச் சிறைப்படுத்திவிடுகிறார்கள்.*

*இன்றைய உணவு முறை கர்ப்பப்பையைப் பலவீனமாக்கி விட்டது. நார்மல் டெலிவரியைப் பார்த்து நாளாச்சு, பிரித்தெடுக் கும் குழந்தைக்கு அட்டவணை போட்டு பராமரிக்கும் காலமாகிப் போச்சு.*

***காணாமல் போன கூண்டு வண்டி***

*இன்று அம்மிக் குளவி, ஆட்டுக்கல், திருகை உரல், உலக்கை என்று எல்லாவற்றையும் தொலைத்துவிட்டோம்.*

*கூண்டு வண்டிகளும் பூண்டற்றுப் போயின. சுகாதாரம் வெகு வேகமாகக் கிராமங்களை விட்டுத் தொலைந்து கொண்டிருக்கிறது.*

***சைனஸ்***

*எங்குச் சென்றாலும் புகை கக்கும் இரு சக்கர வாகனத்தில் பயணம். கணவரோடு கம்பீரமாகப் பின் இருக்கையில் அமர்ந்து பயணம் செய்வதிலும் பெரிய கௌரவம், வீட்டுக்கு வந்தால்தான் தெரிகிறது மண்டையைப் பிளக்கும் ஒற்றைத் தலைவலி.*

*அதன் காரண்ம் யாரும் அறிவதில்லை. வண்டி செல்லும் வேகத்தில் எதிர்காற்று கண், காது, மூக்கு, வாய் வழியாகப் புகுந்து ஒவ்வாமையை ஏற்படுத்துவதால் வரும் தலைவலி என்று - கூண்டு வண்டிக்கு மாற்று கண்டோம். விளைவு தலைவலியில் மாட்டிக் கொண்டோம்.*

***CELL***

*செல்லுமிடம் எல்லாம் செல் வந்தது. இன்று நம் மழலைச் செல்வங்களுக்கு அதுவே எமனாகி நின்றது.*

*இன்னும் நாம் சிந்திக்கவில்லை. இந்தஅறிவியல் வளர்ச்சி ஆபத்தானது என்று* [illegible]

*பெண்ணே நீ யோசி...*

*வாத நோயால் வருங்காலத்தில் பிள்ளைக்குப் பாதிப்பு வரக் கூடாது என்று போலியோ சொட்டு மருந்தைப் பொறுப்போடு கொடுக்கிறாயே அட்டவணை போட்டுக் காலம் தவறாமல் தடுப்பு ஊசி போடுகிறாயே! என்றாவது நீ சிந்தித்தது உண்டா?*

*வருங்காலத்தில் அந்தப் பிள்ளை நோய்நொடி இல்லாமல் வாழ வேண்டும் அதற்கு நஞ்சில்லா உணவை நாம் தரவேண்டும் என்று?*

*உன் மனச்சாட்சிக்குத் தெரியும்! இன்றைய உணவு முறை உன் தாய்ப்பாலைக்கூட நஞ்சாக்கிவிட்டது என்று.*

*இன்னும் ஏன் உறங்கிக் கிடக்கிறாய்? அன்று முறத்தால் புலியை விரட்டிய மாதர் குலமல்லவா நீ இன்று மலட்டு விதையை விரட்டியடிக்க போர் முரசு கொட்டு. நுகர்வோர் உனக்குத் துணை நிற்பர். t உழவர் உனக்குக் கை கொடுப்பர்.*

*உலகம் நஞ்சில்லா உணவைப் பெறும் நம் சந்ததிக்கும் நோயில்லா வாழ்வு தரும் இயற்கை. இயற்கை அதுவே இன்றைய தேவை!*

**கைக்குத்தல் அரிசி**

***"சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால்***

***உழன்றும் உழவே தலை"***

**என்றார் வள்ளுவர்.**

*ஆம்! நாம் எங்குச் சென்றாலும் எந்தப் பணியில் இருந்தாலும் சேற்றில் கை வைத்தால்தான் சோற்றில் கை வைக்க*

*'குலத்தொழில் செய்யாதவனுக்குத் தலைக்குமேல் பஞ்சம்'என்று ஒரு சொல் வழக்கு உண்டு.*

*இருப்பதைவிட்டு பறப்பதைப் பிடிக்க எல்லாரும் ஆசைப் பட்டோம். அதன் விளைவை இன்று அனுபவிக்கிறோம். மன உளைச்சலால் அமைதி இழந்தோம். இயற்கையின் சமநிலை கெடுத்து எல்லா நோய்க்கும் இருப்பிடமாக இந்தப் பூத உடலைத் தானம் கொடுத்திருக்கிறோம். -*

*வாழையடி வாழை என்று இந்தக் கசந்த வாழ்வை நம் சந்ததிக்கு விட்டுச் செல்ல வேண்டுமா?*

*எத்தனை அணுக்குண்டுகள் வெடித்தாலும்*

*செயற்கைக் கோள்கள் சென்றாலும்*

*ரிமோட் கண்ரோல் வந்தாலும்*

*கம்ப்யூட்டர் மயமானாலும்*

*'பசி என்று வந்துவிட்டால் இன்னும் தாவரங்களைத் தான் புசிக்க வேண்டியிருக்கிறது. தாகத்திற்குத் தண்ணீரைத் தான் குடிக்க வேண்டியிருக்கிறது. உயிர்வாழக் காற்றைத்தான் சுவாசிக்க வேண்டியிருக்கிறது.*

*. இயற்கையை நாம் சிதைத்தால் அது நம்மை அழிக்கும்.*

*ஓசோன் படலத்திலே ஓட்டை. இன்னுமா தொடர வேண்டும் அந்த நரக வாழ்க்கை! இயற்கையை நாம்*

*நேசித்தால் அது வாழ்வின் சுமையைக் குறைக்கும்.*

*இயற்கைவழி வேளாண்மைக்குத் திரும்புவோம்.*
*நம் பாரம்பரிய நெல் ரகங்களைத் தேடுவோம்.*
*உரலுக்கும் உலக்கைக்கும் வேலை கொடுப்போம்.*
*உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்.*

*அனைத்து மக்களும் அன்றாடம் உண்ண சத்துள்ள அரிசியை உற்பத்தி செய்வதைவிடச் சிறந்த ஒன்று வேறு என்ன இருக்க முடியும்?*

*கைக்குத்தல் அரிசியைப் படைப்போம்.*
*எல்லாருக்கும் நஞ்சில்லா உணவைக் கொடுப்போம்.*
*விதைப்போம் - அறுப்போம்?*
*வாழ்க இயற்கை1*
*வளர்க இயற்கை வழி வேளாண்மை!*

## *8. வாழையடி வாழையாக*
## *வந்த பழமொழிகள்*

***உண்டவன் உரம் பண்ணுவான்!***

*இப்படி ஒரு பழமொழி தமிழில் உண்டு. உண்டவன் எப்படி உரம் பண்ணுவான்? இயற்கையின் சுழற்சியில் ஒன்றின் கழிவு மற்றொன்றின் உணவு! அந்த வகையில் மனிதக் கழிவுகளும் மண்ணில் உள்ள நுண்ணுயிர்களுக்கு உணவாகின்றன. அந்த நுண்ணுயிர்கள் பெருகினால் பயிர் வளர்ச்சி தானாக நடைபெறும். சரி மனிதக் கழிவுகளை எப்படி உரமாக்குவது?*

*அதற்குக் காந்தியடிகள் பயன்படுத்திய வார்தா முறைக் கழிப்பிடம்தான் சிறந்த முறை ஓர் அடி அகலம் மூன்றடி ஆழம் தேவையான அளவு நீளத்துக்கு மண்ணில் குழிவெட்டி அதன் குறுக்கே கால் வைத்து உட்காரும் வகையில் இரண்டு கட்டை களைப் போட்டு வைக்க வேண்டும் இதன்மூலம் குழியில் மலம் கழித்ததும் மண்ணைக் கொண்டு மூடிவிட வேண்டும். கைகால் கழுவுவதற்கு வேறு இடத்தைப் பயன்படுத்தவேண்டும்.*

*இப்படி நீர்படாமல் மண்ணால் மூடப்படும் மனிதக் கழிவு ஒரு வாரத்தில் மக்கிவிடும். பார்ப்பதற்குக் காப்பித்தூள் நிறத்தில் இருக்கும். கையில் அள்ளி எடுத்து முகர்ந்தால் கொஞ்சம்கூட துர்நாற்றம் இருக்காது. இதை எருவாகப் பயன்படுத்தலாம்.*

***கொசு உற்பத்தி மையம்***

*மாறாக நவீனக் கழிவறைகளைப் பயன்படுத்தும்போது மனிதக் கழிவுகள் தொட்டிகளில் சேமிக்கப்படுவதால் நிலத்தடி நீரும் சுற்றுச் சூழலும் மாசுபடுகிறது. மேலும் கொசு உற்பத்தி மையமாகச் செயல்பட்டு நமது உடல்நலனைக் கெடுக்கிறது*

*தண்ணீர் செலவும் அதிகமாகிறது. கழிவறைகளை அடிக்கடி சுத்தப்படுத்த தொட்டியைச் சுத்தப்படுத்த என ஏகப்பட்ட வேதிப்பொருட்களைப் பயன்படுத்துகிறோம். அவை நம்முடைய பணத்துக்கும் சூழலுக்கும் கேடாக அமைகின்றன!*

*இப்படி நமது பொருளாதாரத்தைச் சிதைத்து, நம்மை நோயாளியாக மாற்றும் நவீனக் கழிவறை நமக்குத் தேவைதானா? காந்தியைக் கொண்டாடும் மண்ணில் மனிதக் கழிவை எருவாக்கும் வழியைக் கடைப்பிடிப்போம். மனிதக் கழிவுகள் மண்ணில் விழ வேண்டும் மண்வளம் காக்கப்படவேண்டும். உண்டவன் உரம் பண்ணுவான் என்ற பழமொழி சரிதானே?*

***அந்தி கிழக்கு, அதிகாலை மேற்கு குறடு போட்டால், வாராத மழை வரும்***

*மாலைப் பொழுதில் கிழக்குத் திசையிலும், காலைப் பொழுதில் மேற்குத் திசையிலும் கருமேகம் சூழ்ந்தால் மழை வருமாம்.*

***அகல உழுவதைவிட ஆழ உழு!***

*நிலத்தை ஆழமாக உழவேண்டும் இரண்டடி ஆழத்திற்கு மண் பொலபொலப்பாக இருக்கவேண்டும். இருமடி பாத்தி முறையில் இதைத்தான் சொல்கிறார்கள்.*

***ஆட்டு எரு அந்த வருஷம்; மாட்டு எரு மறு வருஷம்***

*ஆட்டுக்கிடை கட்டுவதன் பலன் அந்த வருடம் தெரிகிறது. மாட்டு எருவின் பலன் பல வருடங்கள் தொடர்கிறது*

***ஆடு பயிர் காட்டும் ஆவாரை கதிர்காட்டும்***

*ஆட்டு எரு தழை சத்தாகும். ஆவாரை இலை கதிர் வளர துணை செய்யும்.*

***உழவுத் தொழில் நின்றால் மறுதொழில் நடவா!***

*நாம் உயிர் வாழ அடிப்படை உணவு. உணவைப் படைக்க உழவு தேவை. அதுவே நின்று போனால் வேறு எதுவும் இயங்க முடியாது*

### எரு தழை இல்லாது ஏர் பிடிக்காதே

*வளர உயிர் வளர வேண்டும். அந்த உயிர் மண்ணில் உள்ள நுண்ணுயிர். அதை வளர்க்க நாம் கொடுக்கும் உணவுதான் மக்கும் குப்பை.*

### களர் கெட பிரண்டையைப் புதை

*களர் நிலத்தில் தக்கைப்பூண்டு,சவுக்கு, சீமை அகத்தி போன்ற பயிர்களை வளர்த்து மடக்கி உழுதால் களர் நிலம் மாறும்.*

### சுண்டைக்காய் கால்மணம், சுமைக்கூலி முக்கால் பணம்

*ஆன்லைன் வர்த்தகம் மூலம் நம் கிராமத்தில் விளையும் பொருள் ஒட்டுமொத்தமாக எங்கோ இருக்கும் ஒரு கம்பெனிக்குக் கொண்டு சென்று, மீண்டும் பல ஏஜெண்டுகள் மூலம் பல இடம் மாறி சொற்ப விலைக்கு நம் கைவிட்டு போன பொருள், நாம் வாங்க இயலாத அளவுக்கு விலையேற்றம் செய்து நம்மிடமே விற்பனைக்குக் கொண்டு வரப்படுகிறது.*

*மினி லாரி வீட்டு வாசலுக்கே வந்து ஏற்றிக் கொண்டு போனது என்று பீற்றிக் கொள்கிறோம். ஊருக்குள் சாலை வசதி வந்ததும் தெவுக்குத் தெரு சிமெண்ட் சாலை போட்டதும் நமது பொருளாதாரத்தை வேகமாகச் சுரண்டிச் செல்வதற்குத்தான் என்பதை நாம் உணரவேண்டும். அதுமட்டுமல்ல; வெயில் சூட்டை உள்வாங்கி அனல் கக்கும் சிமெண்ட் சாலையால் நாமும் நமது மழலைச் செல்வங்களும் நோயின் பிடியில் சிக்கிக் கொண் டிருக்கிறோம். சின்ன மீனைப் போட்டு பெரிய மீனைப் பிடிப் பதைப்போல நம் கையை எடுத்து நம் கண்ணிலே குத்திவிட்டுப் போகிறார்கள்.*

*அந்தக் காலத்தில் ஆள் பிடித்து அசலூர் சந்தைக்குப் பொருள் கொண்டு போகும்போதே பொருள் மதிப்பு முக்கா பணம் கூடி விடுகிறதே. இப்போது சுமையுந்து (லாரி)களிலும், இரு சக்கர வாகனங் (மோட்டார் வண்டி)களிலும் நெடுந்தூரம் போய்த் திரும்புகிறது. சிந்தித்துப் பார்க்க வேண்டும்.*

*மண்ணில் உறிஞ்சி எடுக்கப்படும் பெட்ரோல் டீசல் விலை விண்ணை முட்டுகிறது. விவசாயி வியர்வை சிந்தி விளைவிக்கும் அரிசி 1 ரூபாயாக மதிப்பு குறைக்கப்படுகிறது.*

*இதற்கு என்ன காரணம்? நமக்கு 100 லிட்டர் டீசல் தேவைப்பட்டால் அவன் 25 லிட்டர் மட்டுமே உறிஞ்சி எடுக்கிறான். சரக்கைத் தட்டுப்பாடாக வைத்துக்கொண்டு விலையை ஏற்றி விற்கிறான்.*

*நாம் என்ன செய்கிறோம். ஒரு நகரத்திற்கு 1000 கிலோ அரிசி தேவை என்றால் 10,000 கிலோ உற்பத்தி செய்கிறோம். அதுவும் எல்லாரும் ஒரே ரகத்தை உற்பத்தி செய்து குவித்து விடுகிறோம்.*

*எத்தனையோ பாரம்பரிய நெல் ரகங்கள் இருக்கின்றன. அதைப் பயிரிட்டால் என்ன?*

*மகசூல் குறையும் என்பீர்கள்*

*மகசூல் குறையத்தான் வேண்டும்!*

*அப்போதுதான் விலை உயரும்!*

*இதுதான் பெட்ரோல், டீசல் உற்பத்தியாளர்களின் வியாபாரத் தந்திரம்.*

*நாம் நமக்கு மட்டுமே உணவை உற்பத்தி செய்வோம். அதில் கிடைக்கும் உபரியை மட்டும் மற்றவர்களிடம் விற்போம். உலகிற்கு உணவளிப்பது நமது கடமையல்ல; அது இயற்கையின் கடமை இயற்கை அதைச் சரியாகச் செய்யும்; செய்கிறது!*

### கட்டிக் கொடுக்கும் சோறும் சொல்லிக் கொடுத்த பாடமும் எதுவரைக்கும்?

*மூன்று மாதத்தில் கற்றுக்கொள்ளக் கூடியதை மூன்று ஆண்டுகள் கல்லூரிகள் கற்றுக் கொடுக்கின்றன என்கிறார் கிளாடு. ஆல்வாரிஸ் கல்லூரியில்.புடித்தவன் கடிதம் எழுதத் தெரியாது*

*என்கிறான். ஆனால் மொழி தெரியாத இடத்திற்குப் போகும் பாமரன் மூன்று வாரத்தில் புதிய மொழியைப் பேசக் கற்றுக் கொள்கிறான். அது எப்படிச் சாத்தியமாகிறது? அதைத்தான் பழமொழி சொல்கிறது.*

*எல்லாவற்றையும் சொல்லிக் கொடுத்துவிட, எப்போதுமே சோற்றைக் கட்டி கொடுத்து உண்ண முடியாது தானே கற்றறியவேண்டும்.*

*நம் பிள்ளைகள் நம் விரலைப் பிடித்துக் கொண்டு நம் வயலை வலம் வரவேண்டும்!*

*சேற்றில் இறங்கவும் வாய்க்காலில் நீந்தவும் இயல்பாக அவன் பழகவேண்டும். .*

*நாம் மண்வெட்டி பிடித்தால் அவன் களைக்கொட்டைத்*

*தூக்குவான். பழக்கம் அவனைப் பக்குவப்படுத்திவிடும் இதுதான் இயற்கை!*

### பண்ணை பெரிசு என்பதால் சாலுக்குப் பதக்கு (8 கிலோ) விதைக்க முடியாது

*விளைச்சல் பெருக, செடிக்குச் செடி இடைவெளி சீராக இருக்கவேண்டும். இன்று ஒற்றை நாற்று நடவு முறையில் இதுதான் சொல்லப்படுகிறது. விதையைக் குறைத்து இடைவெளியை அதிகப்படுத்தும். அன்றுபோல் இன்றும் விளைச்சல் பெருகும்.*

### மாவைத் தின்றால் பணியாரம் இல்லை

*இன்று நாம் கம்பு, கேழ்வரகு போன்ற தானியங்களை இழந்துவிட்டோம். மாவைத் தின்று விட்டோம் அல்லது கொள்ளையர்கள் கொண்டுபோக வழி வகுத்துக் கொடுத்துவிட்டு பணியாரம் கிடைக்காமல் வறுமையில் வாடுகிறோம்.*

### வழிஓரம் கழனி வைக்கோலுக்குத் தந்தேன்

*சாலை ஓரம் நிலமிருந்தால் கால்நடைகள் மேய்ந்து விடுமாம்.*

### வேப்பம் பிண்ணாக்கு விலை இல்லா எருவாம்

*வேப்பம் பிண்ணாக்கு எருவாகவும் பயன்படுகிறது. பூச்சி , விரட்டியாகவும் நோய் எதிர்ப்பு சக்தியாகவும் பல வகைகளில் பலன் தருகிறது. அதைத்தான் இந்தப் பழமொழி சொல்கிறது.*

*குப்பை இல்லாத வெள்ளாமை சப்பை என்கிறது இந்தப் பழமொழி*

### கூளம் (சிதைந்த வைக்கோல்) பரப்பி கோமியம் சேர்

*மாட்டுச் சாணத்தைவிட கோமியத்தில் புரதவளி கூடுதலாக உள்ளது. அதை எப்படிச் சேகரிக்க வேண்டும் என்று இந்தப் பழமொழி கூறுகிறது - அறிவியல் வளர்ச்சி இல்லாத காலத்தில் தன்னிடம் உள்ள இடுபொருட்களைக் கொண்டே சேகரிக்கும் முறையை அதன்பலனை, ஒரு வரியில் சொல்லிவைத்திருக்கிறார்கள். இன்றோ பட்டம் படித்து வேளாண் விஞ்ஞானிகள் என்ற பெயரில் நமது வரிப் பணத்தில் சம்பளம் வாங்குவோர் சொந்த மூளையைப் பயன்படுத்தாமல் கையூட்டு பெற்றுக்கொண்டு பன்னாட்டு மூளையை இறக்குமதி செய்து, அதை விவசாயிகளிடம் திணித்துக் கொண்டிருக்கிறார்கள்.*

*இப்படிச் செயல்பட்ட சிலருக்கு ஒரு காலகட்டத்தில் ஞானம் பிறந்து விடுகிறது. .*

*வேலையிலிருந்து ஓய்வுபெற்ற பிறகு எங்கள் கைகள் கட்டப்பட்டிருந்தன; வாய்ப்பூட்டுச் சட்டத்தால் சூழ்நிலைக் கைதியாக இருந்தோம் என்று விளக்கம் கூறிக்கொண்டு வெளியே வருகிறார்கள். •*

*சம்பளத்திற்காகச் சாக்கடையில் குதிக்கச் சொன்னால் குதித்து விடுவார்களா?*

*சம்பள உயர்வு கேட்டு ஒருங்கிணைந்து போராடும் இவர்கள், அரசு தவறான பாதையில் பயணிக்கும்போது இது மக்களுக்குத் தீங்கு செய்யும். இதை நாங்கள் நடைமுறைப்படுத்த மாட்டோம் என்று எதிர்ப்புக் காட்டாமல் இருந்தது ஏன்?*

*கையில் சவுக்கை வைத்துக் கொண்டு அதிகாரிகளை வேலை வாங்கும் அதிகாரம் ஒரு முதல்வருக்கு யார் கொடுத்தார்? அதிகாரிகள் தாங்கள் மக்கள் பணியாளர் என்பதை மறந்து, தங்களை மன்னர்களாகவும் மனு கொடுப்போரை அடிமை களாகவும் எண்ணிச் செயல்பட்டதால்தான் இவர்கள் ஆட்சியாளர் களிடம் கைக்கூலிகளாகக் கைக்கட்டி நின்று சேவகம் புரியும் நிலைக்கு ஆளானார்கள்.*

*ஒர் அரசு தவறான திட்டத்தை மக்களிடம் திணிக்க முயன்றால் அதை நடைமுறைப்படுத்த மறுக்கும் அதிகாரம் அதிகாரிகளுக்கு உண்டா இல்லையா?*

*உண்டு என்றால் அதைத் தனி ஒர் அதிகாரி மறுக்கும் பட்சத்தில் அவருடைய வேலை பறிபோகும். ஒட்டுமொத்த அதிகார வர்க்கமும் மக்களுக்காக ஒருங்கிணைந்து மறுத்தால்..?*

### ஆற்று வண்டல் தேற்றும் பயிரை

*ஆற்று வண்டலில் சத்து அதிகமாக உள்ளது என்பதைக் கூறுகிறது இந்தப் பழமொழி. ஆனால், இன்றோ ஆற்றில் வண்டல் இல்லை. பிளாஸ்டிக் குப்பைகளும் சாக்கடை நீரும் சேர்ந்து கொசு உற்பத்தி மையம்ாகக் கோடையிலும் வற்றா ஜீவநதியாக மாறிவிட்டது.*

### நிலத்தில் எழுந்த பூண்டு நிலத்தில் மடிய வேண்டும்

*நிலத்தில் தானாக வளரும் புல்பூண்டுகளைக் களை எடுத்து அகற்றிவிடக்கூடாது. அதை மடக்கி உழுது உரம்ாகப் பயன்படுத்த வேண்டும்.*

### தேங்கிக் கெட்டது நிலம் தேங்காமல் கெட்டது குளம்

*விளைநிலத்தில் நீர் தேங்கக் கூடாது. குளத்தில் நீர் தேங்காமல் இருக்கக் கூடாது.*

*மேலும் சில பழமொழிகள்*

- *களை பிடுங்காப் பயிர் கால் பயிர்*
- *நினைக்கின்ற பொழுதே கிளையைக் கிள்ளு*
- *கோரை குடியைக் கெடுக்கும்.*
- *அருகு முளைத்த கொல்லையும் அரசனை எதிர்த்த குடியும் ஈடேறாது*
- *கோரையைக் கொல்ல, கொள்ளை விதை.*
- *விதை பாதி வேலை பாதி.*
- *சொத்தைப் போல வித்தை (விதையைப்) பேணு.*

### *அந்து அரித்த வித்து முளையாது*

*சிறிய அந்துப் பூச்சி விதை மீது முட்டையிடும் நெல் ஈரப்பதமாக இருந்தால் முட்டைப் புழுவாக மாறி, அரிசியைத் தின்று இனவிருத்தி செய்து நெல் பதராகக் காரணமாகிவிடும்.*

### காய்ந்த வித்திற்குப் பழுதில்லை

*நம் முன்னோர்கள் மூன்று அமாவாசையில் விதை யைக் காயவைத்துக் கோட்ட்டை கட்டி பாதுகாத்துள்ளனர்.*

***"பருவத்தோடு ஒட்ட ஒழுகல் திருவினைத்***

***தீராமை ஆக்கும் கயறு"*** *(திருக்குறள்)*

*நமது செல்வம் அழியாது இருக்க, காலம் அறிந்து கடமையாற்றுவது முக்கியம். அதுவும் பயிர்த்தொழிலுக்கு அது மிகமிக அவசியம் இதைத்தான்,*

*பருவத்தே பயிர் செய்*

*ஆடிப்பட்டம் தேடி விதை*

*காலத்து விதை கரம்பில் போடு. பாழில் போட்டாலும் பட்டத்தில் போடு*

*கோப்புத்தப்பினாலும் குப்பையும் பயிராகாது.*

*ஆடி ஐந்தில் விதைத்த விதையும்*

*புரட்டாசி பதினைந்தில் நட்ட நடவும்*

*பெரியோர்கள் வைத்த தனம்*

*என்றெல்லாம் சொல்லி நமக்கு விழிப்புணர்வு ஊட்டியிருக் கிறார்கள். மேலும் நெருக்கி நடுவதால் நிறைய மகசூல் பெற முடியாது என்பதையும் தெளிவாகச் சொல்லி இருக்கிறார்கள்.*

*கலக்க விதைத்தால் களஞ்சியம் நிறையும்*

*அடர விதைத்தால் போர் உயரும்*

*நெல்லு நண்டு ஓட*

*வாழை வண்டி ஓட*

*தென்னை தேர் ஓட*

*என்று எவ்வளவு இடைவெளிவேண்டும் என்பதையும் சரவெடி போல் சொல்லி இருக்கிறார்கள்.*

***தெளித்த விதையை மறைத்து ஓடு***

***ஈரம்தானே பயிருக்கு வீரம்***

***விதைகள் ஆழம் புதைவது பழுதாம்***

***விதைக்கு முன் வேலி அடை***

***அடைப்பவன் காட்டைப் பார்***

***மேய்ப்பவன் மாட்டைப் பார்***

*ஆயிரம் களம் நெல்லுக்கு ஓர் அந்து கரையான் பட்ட பயிர் ஒரு முழம் கட்டை கம்பளிப்புழு பயிர் தெம்பினை வாங்கும் அசுவினி பூச்சி அவரைக்கு ஆகாது. நெல்லைக் கெடுக்கும் நாவாய் பூச்சி புழுவைத்தின்று புள்ளினம் (பறவை) உதவும்.*

***மாரித் தென்றல் அடித்தால், மாட்டை விற்று ஆட்டை வாங்கு***

*மாரி காலத்தில் வாடைக்காற்று அடித்து. பெய்தால், ஏரி குளம் நிறையும். தெற்கு காற்று வீசினால் மழை குறையும். கோடையில் தண்ணீர் பஞ்சம் வரும்.*

*இப்படி உழவைப் பற்றி பல பொன்மொழிகள் ஆழ்ந்த அறிவையும் உற்று நோக்கும் திறமையும் பெற்ற நமது முன்னோர் களால் நமக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. இதை உணர்ந்து செயல் பட்டால் வேளாண்மையில் நாம் பெற்றி பெறுவது நிச்சயம்.*

*தட்டான் தாழப் பறந்தால் மழை.*

*கோடை இடியும் மாரி மின்னலும் மழை.*

*அந்தி கிழக்கு*

*அதிகாலை மேற்கு*

*குறடு போட்டால் (கருமேகம் சூழ்ந்தால்)*

*வாராத மழைவரும்.*

*ஆற்றுப் பாய்ச்சல்*

*ஊற்றுப் பாய்ச்சல்*

*பத்து குழியும் சரி*

*ஏரி பாய்ச்சல்*

*நூறு குழியும் சரி*

*ஆற்று நீர் கிணற்றுநீரைப் போல ஏரியை நம்பி உழவு செய்ய*

*முடியாதாம்.*

*வழி ஓரம் கழனி*

*வைக்கோலுக்குத் தந்தேன்*

*சாலை ஓரம் வயல் இருந்தால் பயிரைகால் நடைகள் மேய்ந்து விடுமாம்.*

***கா.. கா... கா...***

*தட்டான்தாழப்பறந்தால் மழை என்பது பழமொழி. இன்று அந்ததட்டான்கள் இல்லாமல் போனது எத்தனை பேர் அறிவர். யாரோ சொல்கிறவானிலை அறிக்கை கேட்டுத்தானே நாம் செயல் இழந்து போனோம்.*

*ஒற்றுமைக்குக் காக்கை கூட்டத்தை உதாரணமாகச் சொல்வோம். விசேட காலங்களில் வீடுகளிலும் கோவில்களிலும் காக்கைக்கு உணவளித்த பிறகே மற்றவர்கள் உண்பார்கள்.*

*இன்று முன்னோர் படையலைக்கையில் வைத்துக்கொண்டு 'கா. கா. என்று அழைக்கும் பெண்கள் குரலுக்குக் காக்கைகள் வருவதில்லை. நமது விஞ்ஞானம் முன்னேற்றம் அண்டையில் பறக்கும் காக்கை கூட்டத்தைக் காவு வாங்கி கொண்டிருக்கிறது.*

***ரசம்***

*தமிழர்களின் எளிய உணவு 16 வகை தாவரப் பொருட் களைக் கொண்டு தயாரிக்கப்பட்டது. இன்று அந்தத் தாவர விதைகள் பராமரிக்கப்படாமல் மறைக்கப்பட்டதன் விளைவு, ரசமும் விரசமானது. நம்மை அறியாமலேயே நமது உணவு கலாச்சாரம் மாற்றப்பட்டு நமது நலவாழ்விற்குப் பாதிப்பு ஏற்படுத்துகிறது.*

*அந்தக் காலத்தில் நாடகக் குழுக்களில் நடிக்கும் கலைஞர் களுக்கு வாரத்தில் ஒருநாள் விடுமுறை விட்டு ரசம் சாப்பாடு கண்டிப்பாய்க் கொடுப்பார்களாம். அது 16 வகை தாவரப் பொருட்களைக் கொண்டு தயாரிக்கப்பட்ட மருத்துவ ரசம்.*

# *9.* நாம் செல்லும் பாதை சரியா*?*

***நுகர்வோர் யார்!***

*உலகில் உள்ள ஜீவராசிகள் அனைத்தும் நுகர்வோராக உள்ள நிலையில் மனித இனத்திற்காக மட்டும் அதைச் சட்டம் என்ற பெயரால் அறிமுகப்படுத்துவது தவறு!*

*காடுகளை அழிப்பதால் அங்கே உணவுப் பற்றாக்குறை ஏற்பட்டு, காட்டு விலங்குகள் நாட்டிற்குள் புகுந்து நாசம் செய்கின்றன என்று கூச்சல் போடுகிறோம். நாம் ஏன் காட்ட்ை அழித்து விலங்குகளுக்கான உணவை நாசமாக்க வேண்டும்.*

*இயற்கையின் படைப்பில் ஒன்றுக்கொன்று உணவாகப் படைக்கப்பட்டுள்ளது. அதைத் தடை செய்ய நாம் யார்?*

*குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால் பூச்சிகளுக்குத் தவளையும், தவளைக்குப் பாம்பும், பாம்புகளுக்குக் கருடனுமாக இயற்கையே வழிவகுத்துக் கொடுத்திருக்கிறது.*

*செடிகளைத் தின்று வாழ்கிறது ஆடு. ஆட்டை அடித்துச் சாப்பிடுகிறது நரி, நரி நடுவய்லில் இறங்கி மீன், நத்தை, நண்டு, பாம்பு, தவளை என அனைத்தையும் பிடித்துத் தின்றுவிடும்.*

*வீட்டில் கட்டி இருக்கும் ஆட்டைக் கூட, நடுநிசி நேரத்தில் கயிற்றைக் கடித்து அவிழ்த்துச் சவுக்குக் கொல்லைக்குள் இழுத்துச் சென்ற காட்சியைக்கூட, நிலவு வெளிச்சத்தில் நான் பார்த்திருக் கிறேன்.*

*மான்கள், காட்டெருன்மகள், சீறும் சிறுத்தைக்கும் பாயும் புலிக்கும் கர்ஜிக்கும் சிங்கத்திற்கும் இரையாகின்றன.*

*இப்படி நுகர்வேர் என்பது ஒன்றுக்குள் ஒன்றாகப் பின்னிப் பிணைக்கப்பட்டுள்ளது. அந்தப் பின்னலை இடியாப்பச் சிக்கலைச் சிதைப்பதுதான் அறிவியல் வளர்ச்சியா? சிந்திக்கத் தெரிந்த மனிதா நீயே சொல்.*

***நுகர்வோர் சட்டம் சொல்வதென்ன?***

*முதல் பசுமைப் புரட்சியின்போதுதான் ஒரு குறிப்பிட்ட காரணங்களுக்காக இயற்கை விவசாய முறையிலிருந்து மாறுபட்ட உற்பத்தி செய்திட வழிவகை செய்யப்பட்டது. இதில் பயன்படுத்தப்பட்ட பூச்சிக்கொல்லி முறைமூலம் ஏற்பட்ட விளைவுகள் காய்கறி முதல் கோழி முட்டை வரை அனைத்தும் நஞ்சாக மாறியுள்ளது. விவசாயிகளும் உயர் விளைச்சலை எதிர்பார்த்து இலாபநோக்குடன் செயல்படுவதால் உடல்பாதிப்புக் குள்ளாகும் விஞ்ஞான வளர்ச்சி என்கின்ற போர்வையில் உழவர்களைத் தவறான வழியில் நடத்திச் செல்ல யாரும் வாய்ப்பளித்துவிடக்கூடாது. ஏற்கெனவே உழவர்கள் பயன்படுத்திய விவசாய முறை இந்திய நாட்டின் மண்வளம் சார்ந்த ஒன்றே மழை முகடுகள் தழுவிய மண்நிர்வாகம் மேல் மண்அரிப்பு, தடுத்தல் விவசாயத்தை உறுதிப்படுத்தும். இது தற்போதைய உரப் பயன்பாட்டினைவிட மேலானதாகும்.*

***மரபணு விதை விவசாயம்***

*மரபணு மாற்று விவசாய முறை மூலம் உணவுத் தேவையைப் பூர்த்தி செய்யமுடியும் என்று கருதுகிறார்கள். ஆனால், இவை உடல்நலத்தில் பல மாறுதல்களை ஏற்படுத்தும். இந்தியாவில் இவை மலட்டு விதைகள் என்றுதான் கருத வேண்டிய உள்ளது. மண்ணின் பயன்பாட்டுத் தன்மை கெட்டு விடும். மரபணு மாற்றம் செய்யப்பட்ட விளைநிலங்களுக்கு அருகே உள்ள நிலங்களிலும் காற்று மூலமாக மகரந்த தூள்கள் பரவி, பாதிப்பினை உண்டாக்கி, நிலங்கள் பயன்றதாகிவிடும் அல்லது மாற்று வகை விவசாயத்தினை மேற்கொள்ளவே முடியாது. காரணம் மண்ணும் மலட்டுத் தன்மையை அடைந்து விடுகிறது.*

*இவ்வகை விவசாயப் பொருட்களினால் ஏற்படும் உணவு முறை தெரியாத, புரியாத நோய்களை உருவாக்கி பக்க விளைவுகள் ஏற்படுத்தும் குடல் நோய்கள் உண்டாகும்.*

*விதைகள் அரிய வகையானதாக மாறி, தட்டுப்பாடு ஏற்படும்.*

*இதுபற்றி முழுமையான ஆய்வுகள் இதுவரை எந்த நாட்டிலும் இல்லை.*

**விவசாயிகளும் நுகர்வோர்களே!**

*கடந்த 11.02.2010 திருத்துறைப்பூண்டியிலும், 18.02.2010 திருவாரூர் மாவட்ட ஆட்சியர் அரங்கிலும் விவசாயிகளுக் கான நுகர்வோர் விழிப்புணர்வு பயிற்சி வகுப்பில் கலந்து கொண்டேன். தமிழ்நாடு அரசு உணவுப்பொருள் வழங்கல் மற்றும் நுகர்வோர் பாதுகாப்புத் துறை மூலம் இரண்டு பங்கேற்பு சான்று எனக்கு வழங்கப்பட்டுள்ளது. அதேபோல் விவசாயிகளும் நுகர்வோர்களே என்ற பயிற்சிக் கையேடும் எனக்கு வழங்கப்பட்டது.*

*பயிற்சியின்போது கூறப்பட்ட செய்திகள் பயிற்சிக் கையேட்டில் தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளது. அந்தப் பயிற்சிக் கையேட்டில் கூறப்பட்டுள்ள செய்திகள்தான், நுகர்வோர் சட்டம், மரபணு மாற்று விவசாயம் பற்றிய குறிப்புகள். இதைத் தமிழ்நாடு அரசின் வேளாண்மைத் துறை இணை இயக்குநர் திரு. சுதாகர் வடிவமைத்திருக்கிறார். க. இராஜாராம் இந்திய ஆட்சிப்பணி ஆணையாளர் அவர்கள் முகவுரை தந்துள்ளார்கள்.*

*இது இங்ஙனம் இருக்க, வேளாண்மைத் துறையின் செயல்பாடுகள் எதுவும் இதைச் சார்ந்து இல்லையே ஏன்?*

*உழவர்களைத் தவறான வழியில் வழிநடத்திச் செல்ல யாரும் வாய்ப்பளித்து விடக்கூடாது என்றெல்லாம் சொல்லி விட்டு; பழைய குருடி, கதவைத் திறடி என்ற கதையாக மீண்டும் நஞ்சை உணவாக்கும் முயற்சியில் மரபணு மாற்று விதைகளைச் சார்ந்த வேளாண்மைக்குள் விவசாயிகளை இழுத்துக்கொண்டே செல்கிறதே வேளாண்மைத் துறை!*

*இதுகுறித்துப் பேசினால், எழுதினால் சட்டப்படி குற்றம் என்றெல்லாம் சட்டம் கொண்டு வர முயன்றார்கள்.*

*மரபணு மாற்று விதைகள் இந்தியாவில் மலட்டு விதைகள் என்றுதான் கருத வேண்டியுள்ளது. நோய்களை உருவாக்கி, பக்க விளைவுகளை ஏற்படுத்தும் என்றெல்லாம் அந்தப் பயிற்சிக் கையேட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. d*

*நமது வேளாண்மைத்துறையோ மரபணு மாற்று விதைக்கு எரு போடுகிறது. வேளாண் விஞ்ஞானிகளும் வேளாண்துறை அதிகாரிகளும் சில மாவட்ட ஆட்சியாளர்கள் கூட இந்த மரபணு மாற்றுக்கு இணக்கமாகப் பேசி வருகிறார்கள். இவர்களும் ஓய்வு பெற்றபின் ஞானோதயம் பெற்று செய்த தவறுக்குப் பிராயச்சித்தம் தேடுகிறேன் என்று சொன்னாலும் சொல்வார்கள்.*

**கத்தரிக்காய்**

*சரி! இனி மரபணு மாற்று விதைக்கு வருவோம். கத்தரிக்காயை எடுத்துக் கொள்வோம்.*

*இலக்கியத்தில் இதற்கு வழுதுணங்காய் என்று பெயர். இந்தியாவின் பாரம்பரியஉணவு வகை கத்தரிக்காய் பதப்படுத்தபபடாமல் நேரடியாகச் சமைத்து உண்ணும் உணவுப் பொருள்*

*நாலாயிரம் ஆண்டுகளாகப் பயிரிடப்பட்டு வரும் கறிக்காய்! உலகம் முழுவதும் பிரபலமான ஒன்று!*

*இந்தியா முழுவதும் ஐந்து இலட்சம் ஹெக்டேர் நிலப் பரப்பில் பயிரிடப்பட்டு எண்பது இலட்சம் டன் கத்தரிக்காய் உற்பத்தியாகிறது.*

*பலதரப்பட்ட நாட்டுக் கத்தரிக்காய் ரகங்கள் இந்தியாவில் உண்டு.*

*இந்தக் கத்தரிக்காய் சாகுபடியால் விவசாயிகளுக்கு ஏற்படும் பிரச்சனை இதைத் தாக்கும் காய்ப்புழு மற்றும் தண்டுப் பூச்சிகள்.*

*இதைக் கட்டுப்படுத்துகிறோம் என்ற பெயரில்தான் பேசில்லஸ் தூரிங்கியென்சிஸ் என்று கருவிலேயே பூச்சிகளைக் கொல்லும் நச்சுத்தன்மை உடைய பாக்ட்டீரியாவைப் புகுத்தி பி.டி. கத்தரிக்காயை உருவாக்கியுள்ளனர்.*

*பி.டி. கத்தரிக்காய் விளைவிக்கும் நிலத்தில் ஐந்து சதவிகித நிலப்பரப்பிலாவது நமது நாட்டுக் கத்தரிக்காயைப் பயிரிட வேண்டுமாம்.*

*ஏனென்றால்? பி.டி. கத்தரிக்காய்க்கு நோய் எதிர்ப்புச் சக்தி குறைவாம். நமது நாட்டுக் கத்தரிக்காயை இதன் பாதுகாப்புக்காகச் சேர்த்துப் பயிரிடவேண்டுமாம். w*

*என்ன கொடுமை பாருங்கள்!*

***ஊரான் ஊரான் தோட்டத்திலே***

***ஒருத்தன் போட்டானாம் வெள்ளரிக்காய்!***

***காசுக்கு ரெண்டு விக்கச் சொல்லி***

***காகிதம் போட்டானாம் வெள்ளைக்காரன்***

*இந்தியாவில் ஏராளமான நாட்டுக் கத்தரி ரகங்கள் இருக்கின்றன. -*

*அங்கனம் இருக்க இயற்கையைச் சின்தத்து விதையிலேயே விஷத்தைப் புகுத்தி மரபணு மாற்று கத்தரிக்காயை உருவாக்கிக் கொடுங்கள் என்று யாராவது இவர்களைக் கேட்டார்களா?*

*அப்படிக் கேட்காத நிலையில் இந்தப் பன்னாட்டு நிறுவனங் களுக்கு ஏன் இந்த வேண்டாத வேலை?*

*கத்தரிக்காயில் காலம் காலமா பூச்சி இருக்கு! சுவை மிகுந்தசத்துள்ளகத்தரிக்காய்களைத்தான் பூச்சிகள் சுவைக்குமாம்!*

*இயற்கையின் இந்தச் சூட்சமத்தைப் புரிந்து கொண்ட நமது பெண்கள், பூச்சி சுவைத்த பகுதியை மட்டும் நீக்கிவிட்டு சமைப் பார்கள்.*

*அதில் சத்தும் இருந்தது, சுவையும் இருந்தது. உடலுக்குக் கெடுதலும் இல்லாமல் இருந்தது.*

*பொதுவாகப் பயிர் வகையில் 40% வரை பூச்சித் தாக்குதல் இருந்தால்கூட விவசாயத்தில் நஷ்டம் வந்துவிடாது.*

*அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சாகும் என்பதைப் போல்தான் இதுவும்!*

*நமது நாட்டுக் கத்தரி ரகங்களில் 24% அளவில்தான் பூச்சிகளால் சேதம் ஏற்படுவதாகக் கூறப்படுகிறது. இதையும் கட்டுப்படுத்துவதற்கு இயற்கையில் வழிமுறைகள் இருக்கின்றன.!*

*பொதுவாக விதைகள்தான் நமது பேராயுதம். அது நம் கையில் இருக்கவேண்டும்.*

*"சொத்தைப்போல் வித்தைப் பேணு என்று நம் முன்னோர்கள் ஆணித்தரமாகச் சொல்லி இருக்கிறார்கள்.*

*எனவே பன்னாட்டு நிறுவனங்களின் சதிக்கு நாம் பலிக்கடாவாகிவிடக்கூடாது.*

*நமது பாரம்பரிய விதைகளை நாம் இழந்துவிடக் கூடாது. மீண்டும் சொல்கிறேன். விதைகளே நமது பேராயுதம். மரபணு மாற்ற விதை நமக்கு வேண்டாம். கவனம் தேவை.*

*ஆட்டுக்கும் பெற்றத்துக்கும்*

*அசுவத்தோடு எருமைகட்கும்*

*பாட்டுக்குள் ஆன ஆட்கும்*

*பதினெட்டுக் குடிமை கட்கும்*

*ஏட்டுக்குள் அடங்காது ஆன*

*எவ் உயிர்கட்கும் நாய்க்கும்*

*ஊட்டற்கும் நுகப்புகட்கும்*

*உழவினும் சிறந்தது உண்டோ?*

*ஆடு, மாடு, குதிரை, எருமை, பாடும் ஆட்கள், பதினெட்டுக் குடிமக்கள், பட்டி நாய்கள் சொல்ல முடியாத பற்பல உயிர்கள் முழுவதற்கும் உணவு ஊட்டுவதுடன் இடுப்புக்கு உடை தருவதும் உழவுத்தொழிலேயாம்! இதைவிட சிறந்த தொழில் வேறு உண்டோ?*

*அதனால்தான் சொல்கிறோம். வாருங்கள்.*

***"விதைப்போம் அறுப்போம்"***

**இயற்கை வேளாண் போராளி கோ. நம்மாழ்வாருடன் நூலாசிரியர்.**



*அறுபதாம் குறுவை அம்பாசமுத்திரம், அரும்போசிசம்பர் அன்னமழகி ஆர்க்காடு கிச்சலி, இராவணன் சம்பா, இலுப்பைப்பூ சம்பா ஈர்க்குச் சம்பா உத்தமபாளையம் (செம்பாளை), உவர்முண்டான், ஒட்டுக்கிச்சடி ஒட்டடையான், கட்டை சம்பா, களர்பாளை, கட்டமோசனம், கப்பகார் கப்பச்சம்பா, கருடன் சம்பா, கருப்பு சீரகச் சம்பா கவுணி, களர் சம்பா, கர்நாடக சீரகச் சம்பா, கல்லி மடையான், கல்லுண்டைச் சம்பா, கருங்குறவை, காடைச் சம்பா, கார்நெல், காளான் சம்பா, கார்த்திகைச் சம்பா, காடைக் கழுத்தான் காட்டுயானம், கிச்சலி சம்பா, குள்ள கார், குடவாழை, குண்டுச்சம்பா, குறுஞ்சம்பா குன்றிமணிச்சம்பா, குழியடிச்சான் குட்டவாழை, குதிரைவால் சிறுமணி, சயைச்சம்பா, சிவப்பு சீரகச்சம்பா, சிவப்புப் பொன்னி, சிவப்புக் குடவாழை, சீரகச்சம்பா, சீதா போகம், சீரகமல்லி, செஞ்சம்பா, செம்பாளை, செங்கர் செங்கல்பட்டு சிறுமணி, செர்ண்வரி, சூப்பர் பொன்னி, சூரக்குறுவை திருத்துறைப்பூண்டி கார் துயமல்லி, தோட்டச்சம்பா, பிச்சவாரி, பிசினி, பெங்களூர் கார் பெருங்கர் பெரிய சம்பா, பெருநெல், புழுதிக்கர், புனுகுச் சம்பா, புழுகுச் சம்பா பூங்கர் பூம்பாளை, பூஞ்சம்பா, பொன்மணி, மணல்வாரி மலைநெல், மல்லிகைப்பூச்சம்பா, மலைக் கிச்சலி, மிடுமுழுங்கி மண்கத்தை மணிச்சம்பா, மஞ்சப்பொன்னி மாப்பிள்ளைச் சம்பா, மிளகுச் சம்பா, முத்துவெள்ளை, முட்டக்கர் மொட்டக்கூர் மோசனம், மைச்சம்பா, நரிக்குறுவை நீலச்சம்பா, நெய்கிச்சலிராமக்குறிக்கர் ரோஸ்கர் வளைத்தடிச் சம்பா, வாடன் சம்பாவாலான் சம்பா வைகுண்டா, வெள்ளைக் கட்டை வெள்ளை சொர்ணவாரி வெள்ளைச் சீரகச்சம்பா இவைபோன்ற பாரம்பரியம் மிக்க நெல் ரகங்களை அடையாளம் காட்டுகிறது இந்நூல்.*